உ



தவத்திரு. திருப்பதி சுவாமிகளால் அருளப்பட்ட

# வி.ல். மாதர் விஷயம்.



உரையாசிரியர்:

ப. ரா. கந்தசாமிப் புலவர் M. A., B. O. L.

தமிழ்ப் பேராசிரியர்,

கந்தசாமிக் கண்டர் கலைக் கல்லூரி,

வேலூர், (சேலம்).



தவத்திரு திருப்பதி சுவாமிகளின் நூற்றாண்டு விழா ஞாபகார்த்த மலராக சுவாமிகளின் சமாதி நிலையக் கமிட்டி அன்பர்களால் பிரசுரிக்கப்பட்டது.

[ 1972 ]

உ



தவத்திரு. திருப்பதி சுவாமிகளால் அருளப்பட்ட

# வி.ல். மாதர் விஷயம்.



உரையாசிரியர்:

**ப. ரா. கந்தசாமிப் புலவர்** M. A., B. O. L.

தமிழ்ப் பேராசிரியர்,

**கந்தசாமிக் கண்டர் கலைக் கல்லூரி,**

வேலூர், (சேலம்).



தவத்திரு திருப்பதி சுவாமிகளின் நூற்றாண்டு விழா ஞாபகார்த்த மலராக சுவாமிகளின் சமாதி நிலையக் கமிட்டி அன்பர்களால் பிரசுரிக்கப்பட்டது.

**1972]** **[ ரூ. 3-00**

# உள்ளுறை.

உ
கணபதி துணை.
குருவருள்.

# முன்னுரை

விடயங்க ளத்தனையு மனல் விடத்தின்
மிகு கொடிதால் விடுதி யென்று
படவிங்கு வுரைத்தனையப் பண்பறிந்து
நசைநீத்துப் பயன்காண் பேறே
திடவங்க மெனுஞானத் தேற்றியுல
குவராழி செலுத்தி வீடா
மிடமொன்றி யினிதிருக்கப் பணிக்குமடி
யாற்கடிய வெம்பிரானே.

இறைவன் அருளால் செந்தமிழ்நாட்டில் தோன்றிய சான்றோர்கள் தம் வாழ்வில் கண்ட அனுபவங்களைத் தண்டமிழ் மொழியில் நூல்களாக இயற்றித் தந்துள்ளனர். 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற பெரு நோக்கோடு செய்த அருட்செயல்களே இவையெனலாம். அந்நூல்கள் யாவும் மக்களுக்குச் சிறந்த அறிவுரை வழங்கு வனவாக அமைதலின் அவற்றை அற நூல்கள் என்று நவில்வர். அத்தகைய அறநூல்களுள் ஒன்றே 'விலை மாதர் விஷயம்' என்ற இந்நூலுமாகும்.

இந்நூலை அருளிச்செய்த பெருமான் தவத்திரு திருப்பதி சுவாமிகள் ஆவார்கள். சுவாமிகள் என்றுமுள தென்தமிழ் நாட்டில் திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த அரவக்குறிச்சியில், முத்தரையர் குலத்தில் தோன்றினார்கள். முத்தரையர் என்போர் சேர, சோழ, பாண்டிய நாடுகளாகிய மூன்று தரைகளையும் ஆண்டவராவர். நாடு காக்கும் நற்குலத்தில் தோன்றிய சுவாமிகள் வேதாந்தத்தைக் காப்பதற்கென்றே

கங்கணம் கட்டிக்கொண்டார்கள். இளமைமுதலே இறைவன்பால் இடையறா ஈடுபாடுடையவராய் திகழ்ந்த சுவாமிகள், வெள்ளாடை பூண்ட துறவியாக விளங்கி, மண், பெண், பொன் ஆகிய மூவாசைகளையும் துறந்து தம் ஊரை விட்டே வெளியில் சென்று துறவு வாழ்க்கை வாழ்ந்தார்கள். அவர்கள் ஒருவரிடமும் சென்று ஒரு பொருள் வேண்டு மென்று கேட்டதை யாமறியோம். எளிய உடை, எளிய வாழ்வு, எளிய தோற்றம், இனிய உரை இவ்வாறு திகழ்ந்த சுவாமிகள் நாட்டு மக்களுக்கு நல்லன உபதேசிக்கக் கருதிப் பல நூல்களைச் செய்தார்கள். முழுக்க முழுக்க வைராக்கியத்தை உபதேசிக்கவென்றே பாடிய நூல் 'விலைமாதர் விஷயம்' ஆகும்.

இக் கவிதைகளுக்கு எனது இனிய அன்பர், அமைதியே உருவானவர், ஆழ்ந்தகன்ற அறிவும், தேர்ந்து தெளிந்த கல்வியும் உடையவர் வேலூர் கந்தசாமிக் கண்டர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் பா. ரா. கந்தசாமி, M. A., B. O. L. அவர்கள் உரைகாணும் இந்த அரிய பணியை ஏற்றுக்கொண்டார்கள். இரண்டு ஆண்டுகளாக அவர் குருவருளையும், திருவருளையும் துணைக்கொண்டு அரிதின் முயன்று பெரிதும் உழைத்து இந்நூலுக்குப் பொருள் கண்டார்கள். இத்தகைய அரிய செயலைச் செய்த அவர்கள் இறைவன் திருவருளால் எல்லா நலங்களையும் பெற்றுப் பல்லாண்டு வாழ்க என வாழ்த்தி, அவர்களுக்கு எமது மனமுவந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

கருவூர் பசுபதீஸ்வரர் உயர்நிலைப்பள்ளி ஆசிரியர் சிரஞ்சீவி. சிவமணி S. இராஜகோபாலன் B.A., B.T. அவர்கள் இந்நூல் அச்சு வாகனத்தில் ஏறி உலா வருதற்கேற்றபடி தெளிவாக எழுதி உதவினார்கள். அவர்கள் குருவருளும் திருவருளும் பெற்று சிறப்புற வாழ்த்துகிறேன்.

சற்குருநாதர் ஆலயத் திருப்பணி கும்பாபிஷேகத்திற்கும் இந்நூல் வெளிவருதற்கும் முதற் காரணகர்த்தாவாகிய உயர்திரு. பேரன்புநிறைந்த பெருந்தகை N. R. M. கோவிந்தக் கோனார் அவர்களும் அவர்களது தர்மபத்தினி ருக்மணி அம்மையாரும் திடகாத்திரமும் தீர்க்காயுளும் எல்லா நன்மையும் பெற்று இன்புற்று வாழ்ந்து முடிவில் என்றும் அழியாத பேரின்பப் பெருவாழ்வு பெற எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

இந்நூல் வெளிவருவதற்குப் பலவாற்றானும் பொருள் உதவி செய்த சற்குரு. திருப்பதி சுவாமிகள் சமாதி நிலையக் குழு அன்பர்களுக்கு எமது நன்றி உரித்தாகுக.

இந்நூலை நல்லமுறையில் சரிபார்த்து அச்சிட்டு உதவிய பாரதி அச்சகத்தினருக்கு எல்லாம் வல்ல இறையருளால் எல்லா நன்மையும் உண்டாகப் பிரார்த்திக்கிறேன்.

இத்தனிப் பெருநூலைக் கற்று தேறித் தமிழகம் சிறப்புறப் பிரார்த்திக்கிறேன்.

*வாக்குமன மணுகாத மவுனமல*
*ரணையிடையே வாழு மாறு*
*போக்குவர வில்லாத பூரணத்தில்*
*எந்நாளும் பொருந்து வேனோ?*
*தாக்குபல வாசனையும் தள்ளியருள்*
*தானாகத் தயவு கூர்ந்து*
*நோக்குமடி யார்க்கடிய! சற்குருவாய்*
*அனுபவத்தை நுவலும் தேவே.*

*தாயுமானவரில்லம்,*
*(பிரதக்ஷணம் ரோடு)*
கருவூர்.

*இங்ஙனம்,*
*அடியார்க்கடியன்*
**S. சுந்தரன்.**

ஸ்ரீ ராமஜெயம்.

# பாயிரம்.

நலங்கிளர் கொன்றை இளமதி கங்கை
நற்புலித் தோலுடை நீத்துப்
பொலங்கிளர் சடையன்—மாநிலம் வாழப்
பூரணப் பொருளியல் புணர்த்தக்
குலங்கிளர் அரவக் குறிச்சியில் வீரம்
குலவுமுத் தரையர்தம் குலத்திற்
புலங்கிளர் ஞானத்—திருப்பதி என்னும்
பூரண யோகியாய்ப் பிறந்தான். 1

மங்கலப் பொருளாய் வயங்கிய பெருமான்
மாண்புறு கலைபல கற்றுப்,
பொங்கிய மாயக் கங்குலைப் போக்கிப்,
பொருவிலாச் சுடரென விளங்கிக்,
கங்கைநேர் பொருளால் அறப்பயிர் வளர்க்கும்
கலையுணர் பரிமள கண்டர்
துங்கமார் வாழ்வில் அன்பினை வளர்த்துச்
சுயம்பிர காசனாய்ப் பொலிந்தான். 2

மன்னிய சோதி வடிவமாய்ப் பொலியும்
மானவன்—தாயுமா னவரின்
பொன்னடி மறவாச் சீரியன் என்றும்
பொருவிலாச் சொரூபத்திற் றிளைப்போன்
நன்னய வுளத்தன் கருவைமா நகர்வாழ்
நாவலன் சுந்தரர் முதலாப்
பன்னருங் குணஞ்சால் சான்றவர்க் கின்பப்
பதியியல் காட்டியுய் வித்தான் 3

கோலமார் ஞான வரம்பினிற் களிக்கும்
குருபரன் கருணையி னாலே
ஞாலமார் மாந்தர் மெய்ப்பொருள் காண
நவையிலா நூல்பல புனைந்தான்;
சீலமார் அந்நூற் கணத்தினுள் அறிஞர்
சிந்தனை முடிவினுக் கெட்டா
மூலமார் "மாதர் விடயமாம்" நூலை
முற்றிலும் உணர்குவ தரிதாம். 4

சிந்தனைக் கெட்டா அத்திரு நூற்குச்
சீரிய வுரையருள் கென்று
சுந்தர ஞானி வேண்டிட—வேலூர்த்
தூயகல் லூரியிற் றமிழைச்
சந்ததம் நடாத்தும் சீரிய புலவன்
சால்புறு நற்பெருங் குன்றம்;
கந்தசா மிப்பேர்த் தூயவன் நுணுகித்
தக்கதோர் பேருரை கண்டான். 5

கண்ணினுக் கெட்டா அணுவினைப் பிளத்தல்,
காற்றினைக் கடத்தினுள் அடக்கல்,
மண்ணினுள் எளிதாய் யாவரும் செய்வர்;
மாசிலாப் புனிதஇந் நூற்குக்
கண்ணியஞ் சான்ற பெருந்தகை யுழைத்துக்
காட்டிய நுண்பொருள் போல
எண்ணியாய்ந் தாலும் புதைபொருள் காட்டல்
எத்தகு புலவர்க்கும் அரிதே. 6

தொல்லுரை வழங்கிய தூயவன் வாழி!
நல்லுரை நல்கிய நாவலன் வாழி!

'கம்ப நிலையம்'
வேலூர் (சேலம்)
2—12—72.

அன்பன்,
**S. K. இராமராசன்**
*கம்பராமன்*

சிவமயம்.

# சிறப்புரை

புலவர் **அ. வைத்தியலிங்கம் M. A.**
தமிழ் விரிவுரையாளர்,
கந்தசாமிக் கண்டர் கல்லூரி,
வேலூர் (சேலம்)

வேலூர் (சேலம்)
7—10—72.

விலைமாதர் விஷயம் என்னும் நூல் வெளிவருவது அறிந்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன். ஏகபாதம், யமகம், மடக்கு, சிலேடைப் பாடல்களைப் படிப்போர் தொகை அருகிவரும் காலமிது. அதைவிட அப்பாடல்களைப் பாடுவோர் தொகை மிக அருகிய காலமிது. இந்தக் காலத்திலும் இத்தகைய கடின நடையில் அரிய பொருள்களை அமைத்துப் பாடிய ஸ்ரீ திருப்பதி சுவாமிகளின் திறமையைக் கணக்கிட நமக்குத் திறமில்லை.

இத்தகைய அரிய நூலுக்கு எளிய உரை கண்டவர் எனது ஆசிரியர் என்பதை எண்ணும்பொழுது என் உள்ளமெலாம் பூரிப்படைகிறது. என் ஆசிரியரின் திறமையையும், பண்பையும், சமயத்தின்பால் அவருக்கிருக்கும் ஈடுபாட்டையும் நான் இருபத்து நான்கு ஆண்டுகளாக அறிவேன். இன்று அவரிடமிருந்து பணிபுரியும் பேற்றையும் பெற்றுள்ளேன். அவர் எழுதிய உரையைப் படித்து மகிழ்ந்தேன்.

எளிதில் பொருள் உணர இயலாத பாடல்களுக்கு இரண்டு மூன்று வகையாகப் பொருள் எழுதி விளங்க வைத்துள்ளார்கள். இருப்பினும் இந்நூலில் அடங்கியுள்ள கருத்துக்களும், அக்கருத்துக்களை விளக்கும் கவிதைகளும், அக்கவிதைகளுக்கு அமைந்துள்ள உரைகளும் பாமர மக்களுக்கு எளிதில் விளங்காதனவேயாம். உரையாசிரியர் அவற்றை விளங்கவைக்க அரிதின் முயன்றுள்ளார்கள். அவர்களின் முயற்சியை பாராட்டுகிறேன்.

இந்த நூலை வெளியிட்ட எனது மதிப்பிற்குரிய தவத்திரு. S. சுந்தரஞ் செட்டியார் அவர்கட்கும், ஏனைய வெளியீட்டுக் குழு அன்பர்கட்கும் என் மனமுவந்த பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். அவர்கட்கு எல்லா நலங்களையும் அருளுமாறு ஆண்டவனை வேண்டுகிறேன்.

வணக்கம்.

இங்ஙனம்,
**அ. வைத்தியலிங்கம்**

# உரையாசிரியர் முன்னுரை.



தெய்வ நலஞ்சிறந்த தமிழ்நாடு எண்ணரிய மெய்ஞ் ஞானிகளை உலகம் உய்ய ஈன்றருளி உளது. அத்தகைய ஆன்ம ஞானிகளுள் மிகச் சிறந்த ஒருவராக விளங்குபவர் பெருந்தகவுசான்ற தவப்பெருந்திரு. திருப்பதி சுவாமிகள் ஆவார்கள். அவர் தூய துறவறநெறி நின்று மெய்யுணர்ந்து பேரின்ப வடிவுபெற்றுத் தற்போது திருச்சி மாவட்டத்தில் குளித்தலை என வழங்கும் குளிர்தண்டலையில், திருப்பதிகம் பெற்ற பழமையுடன் சிறப்புற்றுத் திகழும் கடம்பர்கோயில் அருகே காவிரிக்கரையில் திருக்கோயில் கொண்டுள்ளார்.

அவர் காட்சிக்கு எளியவராய் அடக்கமே உருக்கொண் டாற்போன்ற தோற்றத்தினராய் உலகிற்குத் தம் உண்மை நிலையைக் காட்டிக்கொள்ளாமலேயே இருந்து வந்துள்ள போதிலும் அவர் இயற்றியருளியுள்ள மெய்ஞ்ஞான நூல் களின்மூலம் அவர் மாசற்ற நுண்மாண் நுழைபுலமும், ஆழ்ந்தகன்ற புலமையும், மெய்ஞ்ஞானமும் ஒருங்கேபெற்று ஆன்று அமைந்து அடங்கிய தவப்பெருஞ் சான்றோராய் விளங்கியவர் என்பதை அறியலாம்.

மக்கள் தாம் பெறற்குரிய பெரும் பேறுகளுள் மாசற்ற புகழும், அறமும், வீடுபேறுமே பெறற்கரிய பெரும் பேறு களாகும். மக்கள் இவற்றை மகிழ்வுடன் பெறுதற்கு ஆன்றோர்கள் எத்தனையோ அருள்நூல்களை இயற்றியருளி யுள்ளார்கள். தவத்திரு. திருப்பதி சுவாமிகளும் அவ்வாறே பல ஞான நூல்களை இயற்றியருளியுள்ளார்கள். அவர்கள் இயற்றியருளிய நூல்களாவன:— 1. பழமொழிப் போதம், 2. ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம், 3. ஸ்ரீ வித்யா கீதை,

4. பக்திநெறி, 5. திருநாமமாலை, 6. முத்திநெறி, 7. ஞான லோகம் என்னும் யுக்திசாகரம், 8. தேவீ ஸ்தோத்திரம், 9. மாதர் விஷயம் ஆகிய இவை யாவும் செய்யுள் நூல்கள். 10. சிவசூத்திர விமரிசனம் என்னும் நூல் மட்டும் உரை-நடை நூல்.

இவற்றுள் மாதர் விஷயம் என்னும் செய்யுள் நூல் ஒல்லாக் காமத்தால் விளையும் பொல்லாத் தீமையை நன்கு உணர்த்துகிறது. அறவழி நின்று அளவாக மக்கட்பேறு குறித்து நுகரும் நுகர்ச்சி ஆகாத விலைமாதர் உறவும், அறத்திற்குப் புறம்பான கூடா ஒழுக்கமும் விடமேபோல் வெறுக்கத்தக்கவை என்ற உணர்வை ஊட்டுவதே இந்த நூலின் குறிக்கோளாகும். கழிபெருங் காமத்தால் நேருந் தீங்குகளை இந்நூல் மிகவும் நயமாக உணர்த்துகிறது. சுவாமி களின் பழுத்த புலமைச் சிறப்பும் கனிந்த கவித் திறனும் இந்நூலில் மிக நன்றாக விளங்குகின்றன. இந்நூல் மனத்திற் கும், அறிவிற்கும், உணர்வுக்கும் ஒரு நன்மருந்தாக உதவி அவற்றைத் தூய்மைப்படுத்தி அறவழிச் செலுத்துகிறது.

சுவாமிகளின் பழுத்த புலமையை இந்நூலின் 1, 2-ஆம் பாடல்களாகிய ஏகபாதப் பாடல்கள் இரண்டும், 3 முதல் 6 முடிய உள்ள யமகப் பாடல்கள் நான்கும், 7 முதல் 12 முடிய உள்ள மடக்குகள் ஆறும், 13, 14-ம் பாடல்களாகிய திரிபுகள் இரண்டும், 15 முதல் 73 முடிய உள்ள சிலேடைப் பாடல்கள் ஐம்பத்துஒன்பதும், தொனிநயம் சிறந்துவிளங்கும் பாடல்களாகிய 51, 95, 98, 132-ஆம் பாடல்களும், கற்பனை நயம் சிறந்து விளங்கும் பாடல்களாகிய 72, 73, 77, 111, 112, 113, 118, 119, 126, 130, 133-ஆம் பாடல்களும் நன்கு விளக்குகின்றன. ஏனைய பாடல்களும் சிறந்த கருத்து நயம் பொருந்தியவை. இந்நூல் வஞ்சித்துறை, வஞ்சி விருத்தம், கலிவிருத்தம், கலித்துறை, கட்டளைக் கலித்துறை, நேரிசை வெண்பா, ஆசிரிய விருத்தங்கள் ஆக 139 பாடல்களால் ஆகியுளது.

14, 53-ஆம் பாடல்கள் சிறந்த சந்தநயம் பொருந்தியவை. சிலேடைப் பாக்கள் கருத்தாழமும், கற்பனை நயமும் பொருந்தித் திகழ்கின்றன. சுவாமிகள் வெவ்வேறு காட்சிகளையும், நிகழ்ச்சிகளையும் கூறும்போதே அவற்றுடன் காமத்தின் சிறுமையையும் உடன் அமைத்துப் பாடியுள்ளது அவருடைய ஆழ்ந்த புலமைத் திறத்தைக் காட்டுகிறது. இங்கே வியத்தற்குரிய ஓர் உண்மை உளது. சுவாமிகள் தம் மனத்தையும் சொல்லையும் நற்பொருளில் நிறுத்தியே இழிந்த காமத்தின் இயல்பை விளக்குவது அவருடைய தூய தவ ஒழுக்கம் சான்ற தகவைத் தெளிவாகப் புலப்படுத்துகிறது.

இந்நூலில் சில பாக்கள் சிறந்த தொனிப்பொருள் அமையப் பாடப்பட்டுள்ளன. இதோ ஓர் எடுத்துக்காட்டு:

*சிறிய விடைச்சி பெருங்குயத்தி செங்கண் வலச்சி கரும்பறைச்சி*
*வறிய வேளா ளச்சியுள மறத்தி துப்பார் ஒட்டச்சி*
*தெறிகாற் றூத வேடச்சி தீய கடிப்பள் ளத்தியெனு*
*நெறிதீர் பேதை தொடக்குண்பார் நேரார் ஒருதன் சாதியையே.*
*(பாடல் 51)*

இப்பாட்டில் இடைச்சி, குயத்தி, வலச்சி, பறைச்சி, வேளாளச்சி, மறத்தி, ஒட்டச்சி, வேடச்சி, பள்ளத்தி என்று ஒன்பது வெவ்வேறு சாதிப் பெண்களின் பெயர்கள் தொனியாக வந்துள்ளன. பாட்டின் பொருளுக்கும் இந்த சாதிப் பெயருக்கும் எந்தத் தொடர்பும் இல்லை என்பதை இப் பாடலின் உரையிற் காணலாம்.

அவ்வாறே 95-ம் பாடலாக உள்ள ஒரு வெண்பாவில் தொனியாகப் பட்டாணி, ஐதிராப்பாத்து, பஞ்சாப்பு, உருமா சாயபு, துருக்கக்கூட்டம், இராவுத்தன் ஆகிய பெயர்கள் வந்துள. இந்த பாட்டின் பொருளுக்கும் இந்தப் பெயர்கட்கும் தொடர்பில்லை என்பதையும் உரையிற் காணலாம்.

சில பாடல்கள் தற்குறிப்பேற்ற அணியில் கற்பனை நயமும், புதுமை நயமும் தோன்றப் பாடப்பட்டுள்ளன. கீழ்வரும் பாட்டு அதற்கோர் எடுத்துக்காட்டு:

*பல்லிதழ்க் கஞ்சி முத்தந்துகிர் வாரியிற் பாய்ந்தனகண்*
*கொல்லும் அம்மங்கண்டு மான்யானை கான்போம் குழன்முகத்தாற்*
*செல்லொடு திங்கள் விண்ணுற்ற திலைதோர்ந் தெவர்க்குந்தெரியா*
*வில்லடைந் தார்தவர் காமுகர் பட்டளற் றேகினரே.*

பல்லுக்குப் பயந்து முத்துக்களும், வாயின் உதட்டிற்குப் பயந்து பவழமும் கடலில் பாய்ந்தன என்றும், கண்களைக் கண்டு மானும், தனங்களைக் கண்டு பயந்து யானையும் காட்டிற்குள் ஒளிந்தன என்றும், கூந்தலுக்குத் தோற்ற மேகமும், முகத்திற்குத் தோற்ற சந்திரனும் விண்ணை அடைந்தன எனவும், இத்தன்மையை உணர்ந்த மேலோர் எவர்க்குந் தெரியாத வீட்டை அடைந்தனர் எனவும், ஆனால் காமுகர் மட்டும் அவ்வலையில் அகப்பட்டு நரகத்தை அடைந் தனர் எனவும் ஏதுத் தற்குறிப்பேற்ற அணி பொருந்தக் கூறியிருப்பது மிகவும் அழகாக உளது.

இனிக் கற்பனை அழகு நிறைந்த பாக்களும் பற்பல உள. எடுத்துக்காட்டாகப் பாடல் 111 பெண்ணை ஓர் அற்புதக் கொடியாகக் கூறுகிறது.

*முல்லை காந்தள் முளரி கருவிளை*
*அல்லி சாதி அனிச்ச மொன்றற்புத*
*வல்லி பாலை வனத்திற் படர்ந்தழல்*
*புல்லி நிற்கும் புறமக லாதரோ.*

பெண்ணை ஓர் அற்புதவல்லியாக்கி அக்கொடியில் பூத்துள முல்லை, காந்தள், முளரி, கருவிளை, அல்லி, சாதி, அனிச்சம் ஆகிய பலவகைப் பூக்களைப் பெண்ணின் பலவேறு உறுப் பிற்கு உவமையாகு பெயராக்கி, அக்கொடி அழலையும் ஏற்றுப் பாலைவனத்தில் படர்ந்துளது என்று கூறி, அந்த

படர்ந்திருப்பினும் அதனிடம் பகலில் பூக்கும் தாமரையும், மாலையில் பூக்கும் முல்லையும், இரவில் பூக்கும் குமுதமும், செடியில் பூக்கும் அனிச்ச மலரும், மலையில் பூக்கும் காந்தள் பூவும் ஆக, வெவ்வேறு காலத்திலும் வெவ்வேறு இடத்திலும் பூக்கும் பூக்கள் எல்லாம் இந்த அற்புதக் கொடியிடத்தில் ஒரு காலத்தில் ஒருங்கே பூத்திருப்பதாகக் கூறுவது கற்பனை நயத்திற்கும், அற்புதச் சுவைக்கும் ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும். இத்தகைய கற்பனை நயம் பொருந்திய பாக்கள் பற்பல உள. மேலும்,

*ஓரிளங் கொம்பிரு குன்றினைத் தாங்கும் உயர்பிறைமேற்*
*சேருங் கருமணல் கிள்ளையைக் கொவ்வைச் செழுங்கனிகள்*
*தீர விழுங்கி உமிழ்ந்திடும் என்னுந் திரட்படிறர்*
*நேரும் பவர்க்க நிலையைநெஞ் சத்து நினைவரிதே.*

(பாட்டு 44)

இப்பாட்டில் ஓர் இளமை பொருந்திய பூங்கொம்பு இரண்டு குன்றுகளைத் தாங்கும். அது தன் உச்சியில் வானிலுள்ள பிறையைப் பொருந்தும். அக்கொம்பிலே கோவைப் பழங்கள் பழுக்கும். அக்கனிகள் கருமைபொருந்திய கிளியை முற்றிலும் விழுங்கி உமிழ்ந்துவிடும் என்பது அற்புதச் சுவைக்கு மற்றுமோர் எடுத்துக்காட்டாகும்.

இன்னுமோர் அழகிய பாடலின் பொருள் நயத்தைப் பாருங்கள். கள்ளால் போதையுற்று அறிவு மயங்கியவர் பொருளுணர்ச்சியிழந்து பிதற்ற நிற்ப, ஒரு பெண்ணின் கண்ணால் காமப் போதையூட்டப்பெற்று அறிவு மயங்கியவர் பொருளுணர்ச்சியுடையவராக இருந்தே பிதற்றுவர் என்பதை பெருந்தனம் படைத்த பெண்ணை (ஏழை) எனவும், அவருடைய தோள்களைக் கண் (மூங்கில்) எனவும், கண்ணைக் கால்(காலன்)எனவும், பதத்தைச்(சொல்)குழல்(குழலோசை) எனவும், குழலினைக் (கூந்தல்) பயோதரம் (மேகம்) எனவும், துடையைத் தொண்டை (துதிக்கை) எனவும், பயோதரத்தை (நகில்) நகம் (மலை) எனவும் பிதற்றுவர் எனக் கூறுவது மிக்க நயமுடைய பாடலாகும்.

கள்ளால் அறிவு மயங்கியவர் பொருளுணர்ச்சி திரிந்தவ ராகித் தம் பொருளை இழக்கின்றனர். ஆனால் காமத்தால் அறிவு மயங்கியவர் பொருளுணர்ச்சியுடையவராக இருந்து கொண்டே தமது பொருளை இழக்கின்றனர் என்பதால் கள்ளினும் காமத்தினது தீமை நயமாக உணர்த்தப்படுகிறது. இதுதான் அப்பாடல்:

*பெருந்தனம் படைத் தேழைபே தையரெனப் பிறழ்ந்தவர் நச்சுக்கள்*
*ளருந்து வித்திட வவர்புயங் கண்ணென வரியகண் காலென்னத்*
*தரும்ப தங்குழ லெனக்குழ லினைப்பயோ தரமெனத் துடைதொண்டை*
*பொரும்ப யோதர நகமெனப் பிதற்றினோர் பொருளெலா மிழப்போரே.*

இவ்வாறு இந்நூலின் ஒவ்வொரு பாடலும் சிறந்த கருத்தழகும், கவிநயமும் பொருந்தியிருப்பதை இந்நூலைப் படிப்போர் உணரலாகும்.

இத்தகைய சிறந்த நூலுக்கு ஓர் உரை எழுதித் தருமாறு பெருமதிப்பிற்கும், பெருவணக்கத்திற்கும் உரியவரும், தம்முடைய பேரன்பாலும் அருளாலும் ஆதரவாலும் என்னை இந்நிலைக்கு உருவாக்கியவரும் திரு. கந்தசாமிக் கண்டர் அவர்களின் அறநிலையத் தலைவரும், திரு. கந்தசாமிக் கண்டர் கல்லூரிப் புரவலரும், தவப்பெருந்திரு. திருப்பதி சுவாமிகளின் அருள்நோக்கிற்குகந்த மாணாக்கராய் அவர்களிடம் நிறைந்த பக்தியுடையவரும், அச்சுவாமிகளின் திருக்கோயிலுக்குச் சிறப்பாகப் பற்பல அறப்பணிகளைச் செய்துவருபவருமாகிய திரு. மு. பரிமள கண்டர் அவர்களும், அச்சுவாமிகளின் பேரன்பிற்குரிய மாணாக்கரும், சிவஞானச் செல்வருமாகிய கரூர் திரு. சுந்தரஞ் செட்டியார் அவர்களும் அன்போடு பணித்தனர். அவர்களுடைய அன்புக் கட்டளையை மறுக்க முடியாத நிலையில் அத்திருப்பணியை யான் ஏற்றுக்கொண்ட

போதிலும் அந்நூலின் பெருமையும் என் சிறுமையும் என்னை அச்சுறுத்தின இருப்பினும் என்னை உரை எழுதப் பணித்த ஆன்றோர்களின் பேரன்பையும், தவத்திரு. திருப்பதி சுவாமி களின் திருவடியையும் துணையாகக் கொண்டு என் சிற்றறிவிற்கு எட்டிய அளவில் ஒரு சிற்றுரை எழுதலானேன். அவ்வுரையும் ஒருவாறு இனிது நிறைவுற்றது.

இந்நூலின் சீரிய கருத்துக்களையும் கவிகளில் பொதிந்து மிளிரும் பற்பல அற்புத நயங்களையும் இவ்வுரை முற்றிலும் புலப்படுத்த முடியாத நிலையில் இருப்பினும் படிப்போர் அவற்றுள் சிலவற்றையேனும் நன்குணர்வதற்கு இச்சிற்றுரை ஓரளவேனும் துணைபுரியும் எனும் நம்பிக்கை உடையேன்.

இந்நன்முயற்சியில் என்னை ஈடுபடுத்திய ஆன்றோர்களின் திருவடிகட்கு என் நன்றி கலந்த வணக்கத்தைச் செலுத்து கின்றேன். இவ்வுரையை யான் எழுதத் தூண்டுகோலாக இருந்த எனது பெருமதிப்பிற்குரிய நண்பர் திரு. எஸ். கே. இராமராசன் அவர்கட்கு யான் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன். இவ்வுரையை எழுதிவரும்போது சிற்சில பகுதிகளைப் படிக்கக்கேட்டு எனக்கு அருளாசி வழங்கி ஊக்குவித்த தவப்பெருந்திரு. காசி சுவாமிகளின் திருவடிகட்கும் என் பணிவார்ந்த வணக்கத்தை நன்றியுடன் செலுத்திக்கொள்கின்றேன்.

இங்ஙனம்,

*வேலூர் (சேலம்)*<br>
5—10—72.

**பா. ரா. கந்தசாமி**, M. A., B. O. L.<br>
*தமிழ்த்துறைத் தலைவர்,*<br>
*கந்தசாமிக் கண்டர் கல்லூரி,*<br>
*வேலூர் (சேலம்)*

# வி. ல். மாதர் விஷயம்.

## தவத்திரு திருப்பதி சுவாமிகள் அருளியது.

### ஏகபாதங்கள்.

*சங்க ராசிவ சம்போ, சங்க ராசிவ சம்போ,*
*சங்க ராசிவ சம்போ, சங்க ராசிவ சம்போ.* 1

(ப—ரை) சங்கர்-சங்கு வளையலையணிந்த மாதருடைய, ஆசி-வாழ்த்து முதலிய கீதத்தின், வசம்-வசமாக, போ-(அவர் பாற்)சென்று, சங்கர்-கூட்டத்தாராகிய ஆடவர், ஆசு-(பெறுகின்ற) உடற்கவசம், இ-(அரைத்த) இந்த, சம்பு-வசம்பு மாத்திரையே, ஓ (பின்னும் அம்மாதருடைய பார்வையானது) சங்க-நூறு கோடா கோடியின், ராசி-கூட்டமாகிய, வசு-அக்கினி, அம்போ-பாணந்தானே, சங்கரா-சங்கரனே, சிவ-சிவனே, சம்போ-சம்புவே.

(பொழிப்புரை) சங்கு வளையலணிந்த மாதருடைய வாழ்த்து முதலிய கீதத்தின் வசமாக அவர்பாற் சென்று, கூட்டத்தாராகிய ஆடவர் பெறுகின்ற உடற்கவசம் அரைத்த இந்த வசம்பு மாத்திரையே. பின்னும் அம்மாதருடைய பார்வையானது நூறு கோடா கோடியின் கூட்டமாகிய அக்கினி பாணந்தானே சங்கரனே, சிவனே, சம்புவே.

(இலக்கணக் குறிப்பு) ஓ—பின்னும் அம்மாதருடைய பார்வையானது என்பது வருவிக்கப்பட்டது. போ-போந்திடு என்னும் வினைத்தொகையின் கடைக்குறை. கவசமாவது—மாதர் கூட்டரவாற் சிலவகை நோய்களைப் பெற்றோரது சரீரத்தில் துர்வாசனை மறையவும் ஈக்கள் முதலிய சூழாமலும் வசம்பு மாத்திரையையரைத்துப் பூசுதல் போர்வை போலத் தோற்றுவது.

*தெரிவை யாலே, தெரிவை யாலே,*
*தெரிவை யாலே, தெரிவை யாலே.* **2**

(ப—ரை) தெரிவையாலே-(தீயமனமே நீ) பெண்ணி னாலேயே, தெரிவை—அறிவாய், ‡ஆல், ஏது—யாதெனின், எரிவை—அழற்சியை, ஆல்—(காரியமாகப்)பொருந்தியிருக்கிற, ஏது—காரணமாகிய, எரி—அக்கினியின் கொடுமையையும், வை—கூர்மையும், † ஆல்—(செல்லும்போது) இரைச்சலு முடைய, ஏ—பாணத்தின் கொடுமையையும்.

(பொ—ரை) தீய மனமே நீ பெண்ணினாலேயே அறி வாய். யாதெனின் அழற்சியை காரியமாகப் பொருந்தியிருக் கிற காரணமாகிய அக்கினியின் கொடுமையையும், கூர்மை யும், செல்லும்போது இரைச்சலுமுடைய பாணத்தின் கொடுமையையும்.

(இ—பு) ‡ ஆல்—அசைச் சொல், † ஆல்—முதனிலைத் தொழிற்பெயர். எரி, ஏ—ஆகுபெயர்கள். பெண்ணிச்சை யுடைய மனது பெருந்துன்பங்களையனுபவிக்குமென்பது கருத்து.

*மணக்கோலஞ் செய்தான் மதனை கரண வருந்தவரு*
*மணக்கோலஞ் செய்தான் மதனை கரண மருவவுற*
*மணக்கோலஞ் செய்தான் மதனை கரணமில் வாய்த்தெறல்*
*போன்*
*மணக்கோலஞ் செய்தான் மதனை கரண மருத்தலினே.* **3**

(ப—ரை) மண்—(நற்காரியஞ் செய்வாருக்குண்டாகுந் தடைகளை) யொழிக்கின்ற, அ—அந்தத் தர்மதேவதையின், †கோல்—செங்கோலுக்கும், §அஞ்சு—அஞ்சுதல், எய்தான்— அடையான்போலும், மதன்—மன்மதனைவன், நாகர்—தேவர் களும், அணவரும்—பொருந்துதற்கரிய, தவரும்—தவத்தைச்

செய்யும் சாதகர்களும், மணக்கோலம்–(ஸ்திரீயிச்சையால்) விவாகத்திற்குரியவலங்காரம், செய்தால்–செய்துகொள்வார் களாயி(னப்போது), ‡மதன்–செருக்கும், ஆ–ஆசையும், கரணம்–கலவித்தொழிலும், மருவ–(அவர்கள்) பொருந்து மாறு, உற-உண்டாக, மண்-(மாதர்)அலங்கரித்துக்கொள்ளும் அக்கு-சங்க வளையல் முதலிய வாபரணங்களின், ஒலம்-சப்தம் செய்–வயலானது, தான், மதன்–வளப்பம், ஆகு–ஆதற்குக் காரணமான, அரணம்-காவல், இல்-இல்லாத, வாய்-இடத்து, தெற*வின்–கெடுக்கப்படல் போல, மண–வாசனையுடைய, கோல்-(மலர்களாகிய) அம்புகள், அஞ்சு-ஐந்தையும், எய்து-(தான் அத்தவசிகள் மேற்) செலுத்தி, ஆன்ம–ஆத்ம ஞான மாகிய, தனஆகரணம்-திரவியத்தின் பற்றுதலை, மறுத்த•லின்-தடை செய்தலால், ஏ.

(பொ—ரை) தேவர்களும், பொருந்துதற்கரிய தவத்தைச் செய்யுஞ் சாதகர்களும், ஸ்திரீயிச்சையால் விவாகத்திற் குரியவலங்காரம் செய்துகொள்வார்களாயினப்போது, மாதர் அலங்கரித்துக்கொள்ளும் சங்க வளையல் முதலிய வாபரணங்களின் சப்தம் உண்டாக, செருக்கும் ஆசையும் கலவித் தொழிலும் அவர்கள் பொருந்துமாறு, வயலானது தான் வளப்பம் ஆகுதற்குக் காரணமான, காவல்இல்லாத இடத்துக் கெடுக்கப்படல் போல, வாசனையுடைய மலர்களாகிய அம்பு கள் ஐந்தையும் தான் அத்தவசிகள் மேற் செலுத்தி ஆத்ம ஞானமாகிய திரவியத்தின் பற்றுதலைத் தடை செய்தலால், மன்மதனென்னுமவன் நற்காரியஞ் செய்வாருக்குண்டாகுந் தடைகளை யொழிக்கின்ற அந்தத் தர்ம தேவதையின் செங்கோலுக் கும் அஞ்சுதல் அடையான் போலும்.

(இ—பு) † கோல்-நான்காம் வேற்றுமைத் தொகை. § அஞ்சு-முதனிலைத் தொழிற்பெயர். ‡ மதன்-மதம் என் போலி. தான்-அசைச் சொல். *இன்-ஐந்தாம் வேற்றுமை யுருபு. தனுகரணம்-வடமொழிச்சந்தி. • இன்-மூன்றாம் வேற்றுமை மயக்கம். ஏ-ஈற்றசை.

*மாதரைக் கண்ண வசத்தவ ராய்த்தம் மனமவர்கண்*
*மாதரைக் கண்ண வுருகிடு மென்று மதித்துப்பொரு*
*மாதரைக் கண்ண மணிமே கலைநல்கு வம்மென்றகோ*
*மாதரைக் கண்ண மருமைந்தர் தாம்படன் மாயையன்றே.*
*4*

(ப—ரை) மாதர்—பெண்களுடைய, ஐ—குற்றமான, கண்ண—கண்களின், வசத்தவராய்—வசமானவர்களாகி, தம் மனம்—தமது மனம், அவர்கள்—அவர்களுடைய, மாதரை—அழகை, கண்ண—நினைக்க, உருகிடும்—உருகிப்போகின்றது, என்று-என்று பேசிக்கொண்டும், மதித்து-மனதில் நிச்சயித்து, பொருமாது—அழாமல், அரைக்கு—இடைக்கு, அண்ண—பொருந்த, மணி—இரத்தினங்களிழைத்த, மேகலை—மேகலாபரணத்தை, நல்குவம்— (அவர்களுக்குக்) கொடுப்போம், என்று—என்று முயற்சித்தும், அகோ, மா—பெரிய, தரைக் கண்—பூமியினிடத்து, அமரும்-வசிக்கின்ற, மைந்தர்-ஆடவர் தாம்-தாங்கள், படல்—கெடுதல், மாயை—மாயையின் சாமர்த்தியம், அன்றே—அல்லவா.

(பொ—ரை) பெரிய பூமியினிடத்து வசிக்கின்ற ஆடவர், பெண்களுடைய குற்றமான கண்களின் வசமானவர்களாகி தமது மனம் அவர்களுடைய அழகை நினைக்க உருகிப் போகின்றது என்று பேசிக்கொண்டும், இடைக்குப்பொருந்த இரத்தினங்களிழைத்த மேகலாபரணத்தை, மனதில் நிச்சயித்து அழாமல் *அவர்களுக்குக் கொடுப்போம் என்று முயற்சித்தும் தாங்கள் கெடுதல் மாயையின் சாமர்த்தியம் அல்லவா.

*அ—ஆறும் வேற்றுமைப் பன்மையுருபு.
அகோ—ஆச்சரியக் குறிப்பு.

*என்பாயலை வாரி யிருந்துமரி*
*என்பாயலை வார லெனுவுறுமோ*
*என்பாயலை வாகியு மீதடைதி*
*என்பாயலை வாழ்தி யெனும்விடனே.* **5**

(ப—ரை) என்–(எனதிஷ்டத்திற்கு நீயிணங்காத)தென்ன காரணம், பாய்–தாவுகின்ற, அலே–திரைகளேயுடைய, வாரி–(பாற்)கடலாகிய மற்ருேரமளி, இருந்தும்–(தனக்)கிருந்தும், அரி–நெடுமாலானவர், என்–எனது; *பாயலே–(சர்ப்பமாகிய இவ்)வமளிக்கும், வாரல்–(ஒருவரும்)வாராதொழிக, எனு–என்று சொல்லி, உறுமோ-(அதனே)யடைந்தாரோ, என்பு ஆய்-(சரீரம்) எலும்பு மாத்திரமாகும்படி, (எனதுள்ளம்), அலேவு ஆகியும்-மிகுதுயர் வடிவமாகியும், ஈது-இக்கடிதடத்தை, அடைதி-நீ பொருந்து, என்பாய் அலே-என்று சொல்ல மாட்டாய், வாழ்தி-நீ நன்ருய் வாழ்வாய், எனும்-என்று மாதர்களே நோக்கிப் பிதற்றுவான், விடன்-தூர்த்தன், ஏ.

(பொ—ரை) சரீரம் எலும்பு மாத்திரமாகும்படி எனதுள்ளம் மிகுதுயர் வடிவமாகியும் இக்கடிதடத்தை நீ பொருந்து என்று சொல்லமாட்டாய். எனதிஷ்டத்திற்கு நீயிணங்காததென்ன காரணம். தாவுகின்ற திரைகளேயுடைய பாற்கடலாகிய மற்ருேரமளி தனக்கிருந்தும் நெடுமாலானவர் எனது சர்ப்பமாகிய இவ்வமளிக்கும் ஒருவரும் வாராதொழிக என்று சொல்லி, அதனேயடைந்தாரோ, நீ நன்ருய் வாழ்வாய் என்று மாதர்களே நோக்கிப் பிதற்றுவான் தூர்த்தன்.

இச்செய்யுளின் முதலிரண்டடியுந் தற்குறிப்பேற்றவணி வாழ்தி-மங்கலம், *பாயலே-நான்காம் வேற்றுமை மயக்கம், ஆய்-ஆகவென்பதின் விகாரம், ஏ-ஈற்றசை.

*கஞ்சக்கர வாகங் கழைகள்சுவர்க்*<br>
*கஞ்சக்கர வாகங் கடியசனிக்*<br>
*கஞ்சக்கர வாகங் களேநிகழ்வாற்*<br>
*கஞ்சக்கர வாகங் கடிதிடுமே.* **6**

(ப—ரை) கஞ்ச-தாமரை மலராகிய, கர-கைகளேயுடைய, வாகு–தோள்களோ, அம்–அழகிய, தழைகள்–மூங்கில்கள்,

சுவர்க்கம்—ஸ்தனங்களோ, சக்கரவாகம்—சகோரப் பட்சிகள், கடி—நிதம்பமோ, அசனிக்கு—இடியோசைக்கு, அஞ்சு—அஞ்சுகின்றன, அக்கு—கண்களையுடைய, அரவு—சர்ப்பம், ஆகு-(இவ்வா)றாகிய, அங்கனை-மாதர்கள், நிகழ்வால்-(உலகிற்) சஞ்சரிக்கின்ற காரணத்தால், கம்—பிரமாவானவர், சக்கர—பிறப்பிற்குரிய, ஆகம்—சரீரங்களை, கடிது—சீக்கிரமடிக்கடி, இடும்—(ஜீவர்களுக்குண்டாக்கிக்) கொடுக்கின்றார், ஏ.

(பொ—ரை) தாமரை மலராகிய கைகளையுடைய தோள்களோ அழகிய மூங்கில்கள். ஸ்தனங்களோ சகோரப் பட்சிகள். நிதம்பமோ இடியோசைக்கு அஞ்சுகின்ற கண்களையுடைய சர்ப்பம். இவ்வாறாகிய மாதர்கள் உலகிற் சஞ்சரிக்கின்ற காரணத்தால் பிரமாவானவர் பிறப்பிற்குரிய சரீரங்களை சீக்கிரமடிக்கடி ஜீவர்களுக்குண்டாக்கிக் கொடுக்கின்றார்.

கட்செவியாதலாலிடிக்கஞ்சும், அரவுவரையுமுருவக வணி. அங்கனை நிகழ்வாற் கடிதிடல்—பிறப்பிற்குக் காரண மாகிய இச்சையவர்களாற் பெருகுதலால். ஏ—ஈற்றசை.

*தொல்லை மாதரைச் சூழல ரேற்றவர்*
*தொல்லை மாதரைச் சூழல ரேற்றவர்*
*கொல்லல் சூதுகள் கோபம் புலாலினர்*
*கொல்லல் சூதுகள் கோபம் புலாலினர்.* 7

(ப—ரை) தொல்லை — தொந்தரவிற்குக் காரணமான, மாதரை-பெண்களை, சூழலரேல்-நினையாதிருப்பராயின், தவர்-தவத்தோராவர், தொல்லை-பழமையாகிய, மா-பெரிய, தரை-பூமியின், சூழலர்-இடத்திலுள்ளோர், ஏற்றவர்—பொருந்தின வர்களோ, கொல், அல்—இருள்போலுங் கூந்தல், சூது—தாமரையரும்பு போலும் ஸ்தனங்கள், கள்—தேன்போலுஞ் சொல், கோபம்—இந்திரகோபப் பூச்சிபோலுமுதடுகள், புலாலின்-மீன்போலும் விழிகளாகிய வவயங்களில், நார்—இச்சையை, கொல்லல்-கொலை, சூது-சூதாடல், கள்-மதுபானம்,

கோபம்-சினம், புலாலினூர்-ஊனுண்ணலாகிய விப்பாதகங் களையுடையவராவர்.

(பொ—ரை) பழமையாகிய பெரிய பூமியின் இடத்தி லுள்ளோர் தொந்தரவிற்குக் காரணமான பெண்களை நினையா திருப்பராயின் தவத்தோராவர். இருள்போலுங் கூந்தல், தாமரையரும்புபோலும் ஸ்தனங்கள், தேன்போலுஞ் சொல், இந்திரகோபப் பூச்சிபோலுமுதடுகள், மீன்போலும் விழிகளா கிய வவயங்களில் இச்சையைப் பொருந்தினவர்களோ, கொலை, சூதாடல், மதுபானம், சினம், ஊனுண்ணலாகிய விப் பாதகங்களையுடையவராவர்.

மூன்றாவதடி உருவகவணி. தவர்-குறிப்பு வினைமுற்று. கொல்-அசைச் சொல். *கள்-ஆகுபெயர்.

*பிடிநடைப் பிடிநடைப் பேதை பேதையைக்*
*கடிதடங் கடிதடங் காது காதுகண்*
*வடிகொடு வடிகொடு வாதை வாதைமெய்ப்*
*படியிறப் படியிறப் பாது பாதுளே.* 8

(ப—ரை) பிடி-கைப்பிடி போன்ற, நடு—இடையையும், ஐ-அழகிய, பிடி—பெண் யானையினது, நடை—நடையினையு முடைய, பேதை-பெண்கள், பேதையை-(மெய்)யறிவில்லாத ஆடவரை, கடி-கெடுக்கின்ற, தடம்-மார்க்கம், கடிதடம்-(தமது) அல்குலேயாம் (இவ்வாறு கெடுக்கும்), *காது-காதி னுற் கேட்கப்பட்ட கேள்வியறிவை, காது-அழிக்கின்ற, கண்-(தங்கள்) கண்களின், §வடி-கூர்மையாகிய கடைப் பார்வையை, †கொடு-கொண்டு, வடி-(அவ்வாடவரை)வசப் படுத்துகின்ற, கொடு-கொடிய, வாது-கலகச் செய்கையா னது, ஐ-ஐந்து, வாதை-(புஷ்ப பாணங்களாலேற்படுகின்ற) துன்பங்களைக் கொடுப்பதே (ஆகையால்), மெய்-சத்திய மாகிய, படி-(நன்மார்க்கத்திற்குரிய சற்)குணங்கள், இற-கெட்டுப்போக (அக்காரணத்தால்), படியில்-(இப்)பூமியில்,

தப்பாது- (இதற்குத்) தப்பி மேற்கதியிற் செல்லமாட்டாது, பாது- (துன்மார்க்கத்திற் போகாமற்) காக்கப்பட்டதாகிய, உள்-மனமும் (பராமுகமாயிவ்விஷயத்திற் செல்லுமாயினும்), ஏ.

(பொ—ரை) கைப்பிடிபோன்ற இடையையும், அழகிய பெண் யானையினது நடையினையுமுடைய பெண்கள், மெய் யறிவில்லாத ஆடவரை கெடுக்கின்ற மார்க்கம் தமது அல்குலேயாம். இவ்வாறு கெடுக்கும் காதினாற் கேட்கப் பட்ட கேள்வியறிவை அழிக்கின்ற தங்கள் கண்களின் கூர்மை யாகிய கடைப்பார்வையைக் கொண்டு அவ்வாடவரை வசப் படுத்துகின்ற கொடிய கலகச் செய்கையானது ஐந்து புஷ்ப பாணங்களாலேற்படுகின்ற துன்பங்களைக் கொடுப்பதே ஆகையால், துன்மார்க்கத்திற் போகாமல் காக்கப்பட்டதாகிய மனமும் பராமுகமாயிவ்விஷயத்திற் செல்லுமாயினும் இப் பூமியில் சத்தியமாகிய நன்மார்க்கத்திற்குரிய சற்குணங்கள் கெட்டுப்போக அக்காரணத்தால் இதற்குத் தப்பி மேற்கதியிற் செல்லமாட்டாது.

*காது, §வடி—ஆகுபெயர்கள். †கொடு—கொண்டென் பதனிடைக்குறை ஏ—ஈற்றசை.

*கண்ட நஞ்சமுன் கண்ட வுலகுடன்*
*அண்டர் வாழ்வினை யண்டவு மாதர்கண்*
*ணுண்ட நஞ்சவ ணுண்டல வேனுமண்*
*விண்ட லத்துமெய் விண்டல ரானதே.* 9

(ப—ரை) கண்ட—(சிவபெருமானது) மிடற்றிலுள்ள, நஞ்சம்-(ஆலகால)விஷத்தை, முன்-எதிராக, கண்ட-பார்த்த, உலகுடன்-உயர்ந்தோராகிய பக்தர்களோடு, அண்டர்-தேவர் களும், வாழ்வினை-(மேலான)வாழ்வை, அண்டவும்—அடைய வும், மாதர்-பெண்களது, கண்-விழிகள், உண்ட—உட்கொண் டிருப்பதாகச் சொல்லப்படும், நஞ்சு—விஷம், அவண்—அவ்

விடத்தில், உண்டு-இருப்பது, அலவேனும்-அல்லவாயினும் (அவ்விழிகளால்), மண்-பூமியினிடத்தும், விண்தலத்தும்-சொர்க்கலோகத்தினிடத்தும், மெய்-உண்மையான விவேக மெல்லாம், விண்டு-ஒழிந்து, அலர்-பலராலுந் தூற்றப்படும் பழிச்சொல்லானது, ஆனதே-உண்டாயிற்றே(ஆகையாலவை களின் கொடுமையையென் சொல்வது).

(பொ—ரை) சிவபெருமானது மிடற்றிலுள்ள ஆலகால விஷத்தை எதிராகப் பார்த்த உயர்ந்தோராகிய பக்தர்களோடு தேவர்களும் மேலான வாழ்வை அடையவும், பெண்களது விழிகள் உட்கொண்டிருப்பதாகச் சொல்லப்படும் விஷம் அவ்விடத்தில் இருப்பது அல்லவாயினும் அவ்விழிகளால் பூமியினிடத்தும் சொர்க்கலோகத்தினிடத்தும் உண்மையான விவேகமெல்லாம் ஒழிந்து பலராலுந் தூற்றப்படும் பழிச் சொல்லானது உண்டாயிற்றே ஆகையாலவைகளின் கொடுமையையென் சொல்வது.

*ஒருகாலன் சாரத்தை யூழுறுகா லன்று*
*வருகாலன் சக்கையைப்பின் மாந்துஞ்—சிருகாலன்*
*இன்றே யுயிருடற்குய் வின்றே யிகபரமும்*
*இன்றே மொழிமயலோர்க் கே.* 10

(ப—ரை) ஒரு—சமானமில்லாத, காலன்-யமனுனவன், சாரத்தை-சாரமாகிய பிராணனைக் கொண்டுபோக, ஊழ்-(மரண) பிராரப்தம், உறுகால்-உற்றவிடத்து, அன்று-அப்போது, வருகாலன்-வருகின்ற காலநியதியையுடையவனுயிருக்கின்றன், சக்கையை-அசாரமாகிய சரீரத்தை, பின்-பிற்பாடு, மாந்தும்-புசிக்கும், சிருகாலன்-நரியானது, இன்றே-இக்காலத்திலேயே, உயிர்உடற்கு-பிராணனுக்குஞ் சரீரத்திற்கும், உய்வு-பிழைப்பு, இன்று-இல்லை, ஏ, இகபரமும்-(அதனு)லிக லோக சுகமும் பரலோக சுகமுமில்லை, இன்-(அவ்வாறன்றி) யினிய, தேம்-தேன் போன்றதெனக் காமுகர் சொல்கின்ற,

மொழி—சொல்லையுடைய மாதர்களின், மயலோர்க்கு—மயக்க மடைந்தவர்களுக்கு, ஏ.

(பொ—ரை) சமானமில்லாத யமனுனவன், மரண பிராரப்தம் உற்றவிடத்து அப்போது சாரமாகிய பிராணனைக் கொண்டுபோக வருகின்ற காலநியதியையுடையவனுயிருக் கின்ருன். நரியானது அசாரமாகிய சரீரத்தைப் பிற்பாடு புசிக்கும் அவ்வாறன்றி யினிய தேன்போன்றதெனக் காமுகர் சொல்கின்ற சொல்லையுடைய மாதர்களின் மயக்கமடைந்த வர்களுக்கு இக்காலத்திலேயே பிராணனுக்குஞ் சரீரத்திற்கும் பிழைப்பு இல்லை. அதனுலிகலோக சுகமும் பரலோக சுகமு மில்லை.

காலன்—குறிப்புவினைமுற்று. கொண்டுபோக, இல்லை என்பன வருவிக்கப்பட்டன. ஏ, ஏ—அசைகள். தேமொழி—அன்மொழித்தொகை.

*விரவிய மாதர்கண் மாதரைக் கொண்ட விடரெவரும்*
*உரைசெய் கடிதடம் வேட்டுக் கடிதட முற்றவராய்*
*இருமலை மேவுத லுற்று மிருமலை யேயிசைந்து*
*பெருகிய மேக மயல்கொண்டு மேகமும் பெற்றனரே. 11*

(ப—ரை) விரவிய—கலக்க, மாதர்கண்—பெண்களிடத்து, மாதரை-ஆசையை, கொண்ட-உற்ற, விடர்எவரும்-தூர்த்தர் யாவரும், உரைசெய்— (மறைவாகச்) சொல்லப்படுகின்ற, கடிதடம்—(அவரது)நிதம்பத்தை, வேட்டு—விரும்பி, கடி—கொடிய, தடம்—மார்க்கத்தை, உற்றவராய்—பொருந்தினவ ராகி, இரு—இரண்டு, மலை—மலைபோன்ற ஸ்தனங்களை, மேவு தலுற்றும்—சேர்ந்தும், இருமலையே—இருமல் வியாதியையே, இசைந்து-அடைந்து(பின்னும்), பெருகிய-விஸ்தாரமாகிய, மேக-மேகமொத்த கூந்தல் முதலிய அவர்களுடைய அவய வங்களின், மயல்கொண்டு-மயக்கத்தையே கொண்டு, மேக மும்-மேக வியாதிகளையெல்லாம், பெற்றனர்-அடைந்தார்கள், ஏ.

(பொ—ரை) பெண்களிடத்து கலக்க ஆசையை உற்ற தூர்த்தர் யாவரும் மறைவாகச் சொல்லப்படுகின்ற அவரது நிதம்பத்தை விரும்பிக் கொடிய மார்க்கத்தைப் பொருந்தினவராகி இரண்டு மலைபோன்ற ஸ்தனங்களை சேர்ந்தும் இருமல் வியாதியையே அடைந்து பின்னும் விஸ்தாரமாகிய மேகமொத்த கூந்தல் முதலிய அவர்களுடைய அவயவங்களின் மயக்கத்தையே கொண்டு மேக வியாதிகளையெல்லாம் அடைந்தார்கள்.

மலை, மேகம்-ஆகுபெயர்கள். ஏ-ஈற்றசை. விரவிய-வினையெச்சம்.

*வீடு காணுமிவ் வீடு கடிதடத்*
*தூடு வீழ்வது வோதண் கடிதடம்*
*மோடு மோடுசெய் முன்னென் றுறங்குவோர்*
*காடு மேவுதல் காடு புகல்கொலோ.* **12**

(ப—ரை) வீடுகாணும்-மோக்ஷமென்றறியுங்கள், இ-(சுண்ண முதலியவாற் கட்டிய)விந்த, வீடு-வீடே, கடிதடத்தூடு-(மாதர்)நிதம்பத்தினிடத்து, வீழ்வதுவோ-கலப்பதோ, தண்-குளிர்ச்சியான, கடி-வாசனை பொருந்திய, *தடம்-தடாக ஸ்நானமாம், மோடு-(இவ்வாறுபெற)வயிற்றை, மோடுசெய்-உயர்ந்து பருக்கச்செய்யுங்கள், முன்-முதலில், என்று-என்று (பிறர்பாற் கூறித் தாமுமவ்வாறு செய்து), உறங்குவோர்-(அறியாமையாற் கவலையற்)றுறங்குபவர், காடு-(இறந்து) மயானத்தை, மேவல்-அடைதலானது, காடு-(முற்றத்துறந்துதபோ)வனம், புகல்கொல்-சேர்தலோ, ஓ.

(பொ—ரை) சுண்ண முதலியவாற் கட்டிய விந்த வீடே மோக்ஷமென்றறியுங்கள். மாதர் நிதம்பத்தினிடத்து கலப்பதோ குளிர்ச்சியான வாசனை பொருந்திய தடாக ஸ்நானமாம்.

முதலில் இவ்வாறுபெற வயிற்றை உயர்ந்து பருக்கச்செய்யுங்கள் என்று பிறர்பாற் கூறித் தாமுமவ்வாறு செய்து அறியாமையாற் கவலையற்றுறங்குபவர் இறந்து மயானத்தை அடைதலானது முற்றத் துறந்து தபோவனம் சேர்தலோ.

*தடம்-ஆகுபெயர். ஓ-அசைநிலை.

## திரிபுகள்

*பைதலற மூழ்கிலர் பகீரதி*
*ஐதலற மாதர்கடை யங்கணம்*
*மைதரணி கூறவிழு மைந்தர்தாம்*
*வைதரணி யிற்படிய வல்லரே.* **13**

(ப—ரை) பைதல்-துன்பகாரணமாகிய பாவம், அற-ஒழிய, மூழ்கிலர்-ஸ்நானஞ்செய்யாதவர்களாய், பகீரதி-கங்கையாதி தீர்த்தங்களில், ஐது-(முகஞ்)சிறிதாகி, அலற—(பிற்காலத்தி)லழவும், மாதர்—பெண்களது, கடை—இழிவாகிய, அங்கணம்—சலதாரையில், மை—குற்றமாகிய பழி, தரணி—உலகத்தார், கூற—சொல்லவும், விழு—விழுகின்ற, மைந்தர்—(துர்க்குணத்தையுடைய) ஆடவர்கள் (அதற்குப் பலனாக), தாம், வைதரணியில்—வைதரணி முதலிய நரகங்களில், படிய—மூழ்கி வருந்துதற்கு, வல்லர்—உரியராவார், ஏ.

(பொ—ரை) துன்பகாரணமாகிய பாவம் ஒழிய கங்கையாதி தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்யாதவர்களாய் முகஞ்சிறிதாகி பிற்காலத்திலழவும் உலகத்தார் குற்றமாகிய பழி சொல்லவும் பெண்களது இழிவாகிய சலதாரையில் விழுகின்ற துர்க்குணத்தையுடைய ஆடவர்கள் அதற்குப் பலனாக தாம் வைதரணி முதலிய நரகங்களில் மூழ்கி வருந்துதற்கு உரியராவார்.

மூழ்கிலர்—முற்றெச்சம். பகீரதி, அங்கணம்—ஏழாம் வேற்றுமைத் தொகைகள். தாம்—அசைச்சொல். ஏ—ஈற்றசை.

கோதையோ வாதை மெல்லிய லேயோ
　　கொல்லியல் மகள்கொலோ துகளே
மாதரோ தூதர் கன்னியோ வன்னி
　　மடந்தையோ விடந்தைபெண் ணேபுண்
பேதையோ சூதை நாரியோ சூரி
　　பிடிகளோ கடிகளே யன்னார்
காதலோ வேத லின்புதுன் பென்று
　　கடிந்தவன் மனிதனே புனிதன். 14

(ப—ரை) கோதையோ—கோதையல்ல, வாதை—வியாதியே, மெல்இய*லேயோ-மெல்லிய குணத்தையுடையாளல்ல, கொல்இயல்-கொல்லுங் குணமே, மகள்§கொலோ-மகளல்ல, துகளே-குற்றமே, மாதரோ-மாதரல்ல, தூதர்-யமதூதர்களே, கன்னியோ-கன்னியல்ல, வன்னி-நெருப்பே, மடந்தையோ-மடந்தையல்ல, விடம்தை-விஷத்தினிசைப்பே, பெண்ணே-பெண்ணல்ல, புண்-புண்ணே, பேதையோ-பேதையல்ல, சூதை-கபடியே, நாரியோ-நாரியல்ல, சூரி-கத்தியே, பிடிகளோ-பெண் யானை போன்றவர்களல்ல, கடிகளே-பேய் போன்றவர்களே, அன்னார்-அத்தன்மையராய ஸ்திரீகளின், காத†லோ-இச்சையானது, வேதல்-(தீயில்)வேகுதல் போலிருக்கின்றது, இன்பு-(அவர்கள்)சுகமானது, துன்பு-துக்கமாயிருக்கின்றது, என்று—என்றுணர்ந்து, கடிந்தவன்-(அவைகளை)வெறுத்தொழித்தவன், மனிதனே-மனித சுபாவத்தையுடையவனல்லன், புனிதன்-தெய்வத்தன்மையுடையவனே.

(பொ—ரை) கோதையல்ல வியாதியே, மெல்லிய குணத்தையுடையாளல்ல கொல்லுங் குணமே. மகளல்ல குற்றமே, மாதரல்ல யமதூதர்களே, கன்னியல்ல நெருப்பே, மடந்தையல்ல விஷத்தினிசைப்பே, பெண்ணல்ல புண்ணே, பேதையல்ல கபடியே, நாரியல்ல கத்தியே, பெண் யானை போன்றவர்களல்ல பேய்போன்றவர்களே, அத்தன்மையராய ஸ்திரீகளின் இச்சையானது தீயில் வேகுதல்போலிருக்கின்றது,

அவர்கள் சுகமானது துக்கமாயிருக்கின்றது, என்றுணர்ந்து அவைகளை வெறுத்தொழித்தவன் மனித சுபாவத்தையுடைய வனல்லன், தெய்வத் தன்மையையுடையவனே.

*ஏ-இசைநிறை, §கொல்-அசை, தை-முதனிலைத் தொழிற்பெயர், ஞதை-குறிப்பு வினையாலணையும் பெயர். †ஓ-தெரிநிலை.

### சிலேடைகள்.

*மேகத் திரடாழ மின்றோற்றில் வெம்மையொடு*
*தாகமுற்றோர் தண்மை சலமூறு—மாகப்*
*பனிநிழற்பல் பல்செடியும் பாங்குயர்வுற் றோங்க*
*நனியளறுஞ் சார்வார் நவில்.* 15

இச்செய்யுள் மேகத்தின் விளைவையும், மோகத்தின் விளைவையும் ஒருசேரச் சிலேடையாக உணர்த்துகிறது.

மேகத்தின் விளைவு :

(ப—ரை) வெம்மையொடு-வெப்பத்தோடு, தாகம் உற்றோர்-தாகமும் கொண்டவர்கள், மேகத்திரள்-மேகக் கூட்டம், மின் தோற்றில்-மின்னலைத் தோற்றுவித்ததால், தாழ-மழையாகப் பொழிய, தண்மை சலம் ஊறுமாக-குளிர்ந்த நீர் ஊறவும், பனிநிழல்-குளிர்ந்த நிழலைத் தருமாறு, பல்பல் செடியும்-பற்பல செடிகளும், பாங்கு உயர்வுற்று ஓங்க-பாங்காக உயர்ந்து வளரவும், நனி அளறும் சார்வார் நவில்-மிகுதியான சேறு உண்டாகவும் பெறுவார்கள் அல்லது பயிர் செய்ய மிக்க சேற்றிடத்தும் அடைவார்கள் என்று சொல்க.

(பொ—ரை) வெப்பத்தோடு தாகமும் கொண்டவர்கள் மேகக்கூட்டம் மின்னலைத் தோற்றுவித்ததால் மழையாகப் பொழிய, குளிர்ந்த நீர் ஊறவும், குளிர்ந்த நிழலைத் தருமாறு

பற்பல செடிகளும் பாங்காக உயர்ந்து வளரவும், மிகுதியான சேறு உண்டாகவும் பெறுவார்கள்.

அருஞ்சொற்பொருள்: திரள்—கூட்டம். மின்—மின்னல். வெம்மை—வெப்பம். சலம்—நீர். அளறு—சேறு. தாழ-மழை யாகப் பொழிய. பாங்குக்குப் பக்கம் என்றும் கூறலாம்.

மோகத்தின் விளைவு:

(ப—ரை) மின்தோற்றில்-மின்னலைப்போன்ற இன்னலைச் செய்யவல்ல ஒரு பெண்ணின் அழகிய தோற்றத்தால், வெம் வெம்மையொடு—விருப்பத்துடன், தாகமுற்றோர்—மோகமுற் றோர்க்கு, மேகத்திரள் தாழ — மேகநோய்க் கூட்டத்தால் சிறுமை உற, தண்மையும் ஊறும் சலமும் ஆக—சன்னியும், புண்ணும், புண்ணீருமாகப், பனியும் நிழலும் பல் பல் செடி யும்—துன்பமும் நோயும் பற்பல வகைப் பாவமும், பாங்கு உயர்வுற்று ஓங்க—அங்கு வளர்ந்து பெருக, நனி அளறும் சார்வார்நவில்—அவர்கள் பெரிய நரகத்தையும் அடைவார்கள் என்று கூறுவாயாக.

(பொ—ரை) மின்னலைப்போல இன்னலைச் செய்யவல்ல ஒரு பெண்ணின் அழகிய தோற்றத்தால் விருப்பத்துடன் மோகம் உற்றோர்க்கு, மேகநோய்க் கூட்டத்தால் சிறுமைஉற சன்னியும், புண்ணும், புண்ணீரும் உண்டாக, துன்பமும் நோயும் பற்பல வகைப் பாவமும் அங்கு வளர்ந்து பெருக, அவர்கள் பெரிய நரகத்தையும் அடைவார்கள் என்று கூறு வாயாக.

அருஞ்சொற்பொருள்: மின்-மின்னலைப்போன்ற பெண். வெம்மை-விருப்பம். தாகம்-மோகம். மேகம்-மேக நோய். தாழ-சிறுமைஉற. தண்மை-சன்னி. ஊறு-புண். சலம்-புண் ணீர். பனி-துன்பம். நிழல்-நோய். பல் பல்-பற்பல. செடி-பாவம். அளறு-நரகம்.

(இ—பு) மின்-மின்னலைப்போன்ற பெண், உவமை ஆகுபெயர். இச்செய்யுள் வெண்பா யாப்புடையதாய், இரண்டாம் அடியின் இறுதிச்சீர் தனிச்சீராகி, முதலிரண்டடிகளும் ஓர் எதுகை பெற்றும் இறுதி இரண்டடிகளும் வேறோர் எதுகை பெற்றும் வந்திருப்பதால், இரு விகற்ப நேரிசை வெண்பாவாகும்.

இச்செய்யுளில் சிலேடைப் பொருளில் வந்துள்ள சொற்கள் முழுச் சொற்களாக நின்றே இருபொருள் படுவதால், இது செம்மொழிச் சிலேடை எனப்படும்.

*கெண்டை வரான்மீன் கெளிறலவன் சங்காம்பல்*
*புண்டரிக மன்னம் பொலிவுறலைக் கண்டக்*
*கடிதடத்தை யுற்றோர் கலந்தளற்று ளாழ்ந்து*
*படிவ ரிடர்குளிருட் பட்டு.* **16**

இச்செய்யுள் தடத்துள் அழுந்தியவர்க்கும் கடிதடத்துள் அழுந்தியவர்க்கும் உண்டாகும் தீமையைச் சிலேடையாகக் கூறுகிறது.

தடத்துள் அழுந்தியவர்க்கு உண்டாகும் துன்பம்:-

(ப—ரை) கெண்டை, வரால்மீன், கெளிறு—கெண்டை மீன், வரால்மீன், கெளிற்றுமீன், அலவன்—நண்டு, சங்கு—சங்கு, ஆம்பல்—குமுதம், புண்டரிகம்—தாமரை, அன்னம்—அன்னப்பறவை ஆகியவற்றால், பொலிவு உறலைக்கண்டு—அழகு பொருந்தியிருத்தலைப் பார்த்து, அக்கடிதடத்தை-அந்த மணம் பொருந்திய தடாகத்தை, உற்றோர்—அடைந்தவர், ஆழ்ந்து—அதில் அழுந்தினால், கலந்துஅளற்றுள்—அதில் பொருந்தியுள்ள சேற்றிலும், இடர்குளிர்உட்பட்டு—துன்பத்திலும், குளிர்ச்சுரத்திலும் அகப்பட்டு, படிவர்—மூழ்குவர்.

(பொ—ரை) கெண்டைமீன், வரால்மீன், கெளிற்றுமீன், நண்டு, சங்கு, குமுதம், தாமரை, அன்னப்பறவை ஆகியவற்றால் அழகு பொருந்தியிருத்தலைப் பார்த்து அந்த மணம் பொருந்திய தடாகத்தை அடைந்தவர் அதில் அழுந்தினால், அதில் பொருந்தியுள்ள சேற்றிலும், துன்பத்திலும், குளிர் சுரத்திலும் அகப்பட்டு மூழ்குவர்.

அருஞ்சொற்பொருள்: அலவன்–நண்டு. புண்டரிகம்–தாமரை. கடிதடம்–மணம் பொருந்திய குளம். அளறு–சேறு. இடர்–துன்பம். குளிர்–குளிர் சுரம். பொலிவு–அழகு.

(இ—பு) கடிதடம்–உரிச்சொற்றொடர்.

கடிதடத்துள் அழுந்தியவர்க்கு உண்டாகும் துன்பம்:-

(ப—ரை) கெண்டை–கெண்டைமீன் போன்ற பிறழ்ச்சியும், வரால்-வரால்மீன் போன்ற நீட்சியும், கெளிறு-கெளிற்றுமீன்போன்று வருத்துதலையும் பொருந்திய கண்களும், அலவன்–நண்டுபோன்ற முழங்காலும், சங்கு–சங்குபோன்ற கழுத்தும், ஆம்பல்–செவ்வாம்பல்போன்ற வாயும், புண்டரிகம்–தாமரைபோன்ற முகமும், அன்னம்–அன்னப்பறவை போன்ற நடையும், பொலிவுறலைக்கண்டு–ஒரு பெண்ணுக்கு அழகுசெய்தலைப்பார்த்து, கடிதடத்தை உற்றார்-அவளுடைய நிதம்பத்தை அடைந்தவர், கலந்து–அவளைப் புணர்ந்ததால், இடர்குளிருட்பட்டு–துன்பத்தைத் தரும் சன்னிநோய்க்கு ஆளாகி, அளற்றுள் படிவர்–நரகத்துள் அழுந்துவர்.

(பொ—ரை) கெண்டைமீன் போன்ற பிறழ்ச்சியும், வரால்மீன் போன்ற நீட்சியும், கெளிற்றுமீன் போல வருத்துதலும் பொருந்திய கண்களும், நண்டுபோன்ற முழங்காலும், சங்குபோன்ற கழுத்தும், செவ்வாம்பல் போன்ற வாயும், தாமரைபோன்ற முகமும், அன்னப்பறவைபோன்ற நடையும் ஒரு பெண்ணுக்கு அழகு செய்தலைப் பார்த்து அவளுடைய நிதம்பத்தை அடைந்தவர் அவளைப் புணர்ந்ததால் துன்பத்தைத் தரும் சன்னிநோய்க்கு ஆளாகி நரகத்துள் அழுந்துவர்.

அருஞ்சொற்பொருள்: கடிதடம்-நிதம்பம், பெண்குறி. அளறு-நரகம். குளிர்-சன்னி. கெண்டை, வரால், கெளிறு ஆகிய இவற்றின் பிறழ்ச்சியும், நீட்சியும், வருத்துதலும் ஒருங்குசேர்ந்து கண்ணைக் குறித்தன.

(இ—பு) கெண்டை, வரால், கெளிறு ஆகியவை ஆகு பெயர்கள். நண்டு, சங்கு, செவ்வாம்பல், தாமரை, அன்னம் ஆகியவை உவமை ஆகுபெயர்கள். இச்செய்யுளும் இரு விகற்ப நேரிசை வெண்பாவாகும்.

*கடிதடம்வீழ்ந் தெண்ணரிய காயம் படேன்மின்*
*மடமிகுநன் மார்க்க மரீஇ—நடவுங்கோ*
*ளென்றுரைத்த லோடு மிசைவார்வீ டாள்வரலா*
*ரொன்றுவர்தீக் காடுணர்ந்தே யும்.* 17

(ப—ரை) கடிதடம் வீழ்ந்து—விலக்கப்பட்ட தீய வழியை விரும்பிச் சென்று, எண்ணரிய காயம் படேன்மின்-நினைத்தற்கும் அரிய துன்பத்தைப் பெறுதீர்கள், மடம்மிகு நன்மார்க்கம் மரீஇ—மடங்கள் மிகுதியாகவுள்ள நல்ல வழியைப் பொருந்தி, நடவுங்கோள்—நீங்கள் நடங்கள், என்று உரைத்தலோடும்—என்று சொல்லியதும், இசைவார்—கேட்டு அதன்படி நடப்ப வர், வீடுஆள்வார்-வீட்டை அடைவார்கள், அலார்-அவ்வாறு நடவாதவர், உணர்ந்தேயும்—அறிந்திருந்தும், தீக்காடு ஒன்று வர்—தீய காட்டு வழியை விரும்பி விரைவில் சுடுகாட்டை அடைவார்கள்.

(பொ—ரை) விலக்கப்பட்ட தீய வழியை விரும்பிச் சென்று நீங்கள் நினைத்தற்கும் அரிய துன்பத்தைப் பெறுதீர் கள். மடங்கள் மிகுதியாகவுள்ள நல்ல வழியைப் பொருந்தி நடங்கள் என்று ஆன்றோர் சொல்லியதும் கேட்டு அதன்படி நடப்பவர் வீட்டை அடைவர். அறிந்தபிறகும் அவ்வாறு நடவாதவர் தீய காட்டு வழியை விரும்பி விரைவில் சுடுகாட்டை அடைவார்கள்.

(ப—ரை) 2. கடிதடம் வீழ்ந்து-நிதம்பத்தை விரும்பி, எண்ணரிய காயம் படேன்மின் – நினைத்தற்கரிய பெருமை பொருந்திய உடம்பை இழக்காதீர்கள் அல்லது எண்ணமுடியாத உடம்பைப் பெறுதீர்கள். மடம்இகும்-அறியாமை நீங்கும், நன்மார்க்கம் மரீஇ-நல்ல நெறியைப் பொருந்தி, நடவுங்கோள்-நடங்கள், என்று உரைத்தலோடும்-என்று சொல்லியதும், இசைவார்-அதற்கு இணங்கி நடப்பவர், வீடாள்வார்-வீட்டின்பத்தைப் பெறுவார். அலார்-அவ்வாறு நடவாதவர், உணர்ந்தேயும்—அறிந்திருந்தபோதிலும், தீக்காடு ஒன்றுவர்—விரைவில் சுடுகாட்டை அடைபவர் ஆவார்.

(பொ—ரை) நிதம்பத்தை விரும்பிப் பெருமை பொருந்திய உடம்பை இழக்காதீர்கள் அல்லது எண்ணற்ற உடம்பைப் பெறுதீர்கள். அறியாமை நீங்கும் நல்ல நெறியைப் பொருந்தி நடங்கள் என்று சொல்லியதும் அதற்கு இணங்கி நடந்தவர் வீட்டின்பத்தைப் பெறுவார். அவ்வாறு நடவாதவர் அறிந்திருந்தும் விரைவில் சுடுகாட்டை அடைபவர் ஆவார்.

அருஞ்சொற்பொருள்: கடிதடம்—விலக்கப்பட்ட தீய வழி, நிதம்பம். வீழ்ந்து—விரும்பி. எண்ணரிய—நினைத்தற்கு அரிய, எண்ணி முடியாத. காயம்—துன்பம், உடல் நடவுங்கோள்-நடங்கள். வீடு-இல்லம், வீடுபேறு. அலார்-அல்லார். தீக்காடு-தீமை பொருந்திய காடு, சுடுகாடு. மடம்—தங்கும் மடம், அறியாமை.

(இ—பு) கடிதடம்-உரிச்சொற்றொடர். அலார்-அல்லார் என்பதன் இடைக்குறை; எதிர்மறைக் குறிப்பு வினையால் அணையும் பெயர். மடமிகும் என்பதை மடம் மிகும் என்றும், மடம் இகும் என்றும் பிரிக்கலாம், பிரிமொழிச் சிலேடை. இச் செய்யுளும் சிலேடை அணி பொருந்திவந்த இருவிகற்ப நேரிசை வெண்பாவாகும்.

*மலைக்கொத் தெழுந்தகுய வன்சூளைச் சார்பிற்*
*கலக்கவிழுந் தூர்த்தக் கழுதை—நிலத்தளற்றின்*
*வாரங் கெழுமும் மலத்தழுந்தி நிற்கஉவர்ப்*
*பாரஞ் சுமத்தப் படும்.* *18*

(ப—ரை) 1. சூளைச் சார்பிற்கு—சூளைக்குவேண்டிய மட்பாண்டங்களைச் செய்தற்கு, மலைக்கொத்த—மண்ணை வெட்டுதற்கு, எழுந்த குயவன்—புறப்பட்ட குயவன், அலக்க—துன்புறுத்தும்படியாக, விழும் தூர்த்தக் கழுதை—நல்ல வழியை விட்டு விலகிச்சென்று விழுந்த கழுதை, (அவனால் கைவிடப்பட்டு) நிலத்து அளற்றின் வாரம்—நிலத்துச் சேற்று வாயிலில், கெழுமும் மலத்து அழுந்தி—பொருந்தியுள்ள சகதியில் கால்கள் புதைய, உவர்ப்பாரம் சுமத்தப்படும்—வண்ணானால் உவர்மண் சுமை முதுகில் ஏற்றப்பட்டு வருந்தும்.

(பொ—ரை) சூளைக்கு வேண்டிய மட்பாண்டங்களைச் செய்தற்கு மண்ணை வெட்டுதற்கு எழுந்த குயவன் துன்புறுத்தும்படியாக நல்ல வழியை விட்டு விலகிச் சென்று விழுந்த கழுதை நிலத்துச் சேற்று வாயிலில் பொருந்தியுள்ள சகதியில் கால்கள் புதைய வண்ணானால் உவர்மண் சுமை முதுகில் ஏற்றப்பட்டு வருந்தும்.

(ப—ரை) 2. மலைக்கு ஒத்த குயம்—மலையைப் போன்ற உருவத்தைப் பெற்றுப் பருத்த மார்பினையுடைய, வன்சூளை—கொடிய வேசியை, சார்பில் கலக்க விழும்—பொருந்திப் புணர விரும்பும், தூர்த்தக் கழுதை—தீ நெறியிற் செல்லும் மூடன், நிலத்து அளற்று வாரம்கெழு—நில உலகத்தும் நரக உலகத்தும் உரிமையாகப் பொருந்தும், மும்மலத்து அழுந்திநிற்க—ஆணவம், மாயை, கன்மம் என்னும் மூன்று மலத்தாலும் அழுத்தப்பட்டு நிற்க, உவர்ப்பாரம் சுமத்தப்படும்—மனக்கசப்பாகிய சுமை சுமத்தப்பட்டு ஒழிவான்.

(பொ—ரை) மலையைப் போன்ற உருவத்தைப் பெற்றுப் பருத்த மார்பினையுடைய கொடிய வேசியைப் பொருந்திப் புணர விரும்பும் தீ நெறியிற் செல்லும் மூடன் நில உலகத்தும், நரக உலகத்தும் உரிமையாகப் பொருந்தும் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலத்தாலும் அழுத்தப்பட்டு நிற்க மனக்கசப்பாகிய சுமை சுமத்தப்பட்டு ஒழிவான்.

அருஞ்சொற்பொருள்: குயம்-மார்பு. குளை-வேசி, குய வன் குளை. வாரம்—உரிமை. அளறு—சேறு, நரகம். உவர்- உவர்மண், மனக்கசப்பு.

(இ—பு) கொத்தெழுந்த - கொத்த எழுந்த என்று கொள்ளும்போது கொத்த என்பதன் அகரம் தொக்கது. அழுந்தி என்னும் செய்தென் எச்சம், அழுந்த என்னும், செயவென் எச்சப்பொருளில் வந்தது. தூர்த்தக் கழுதை- நல்ல வழியை விட்டு விலகிச் செல்லும் கழுதை. தூர்த்தன் ஆகிய கழுதை (உருவகம்).

இச் செய்யுளும், இருவிகற்ப நேரிசை வெண்பாவாகும்.

*செலாதுமிகப் போகியுடற் சின்னப் படுத்துங்*
*கலாமதியைத் தேய்க்கும்பல் காலும்—குலாவிளையார்*
*வேட்கைமுன மாங்கென்பார் மேதினியெல் லாமிந்த*
*நாட்கணுமவ் வாறுசெயு நாடு.* 19

(ப—ரை) முனம்—முற்காலத்தில், குலாவு இளையார் வேட்கை-கொண்டாடுகின்ற இளம்பெண்கள்பால் செல்லு கின்ற விருப்பம், செலாதுமிக-ஒழியாது மிகுந்ததால், போகி உடல் சின்னப்படுத்தும்—இந்திரனுடைய உடம்பில் காமத் தால் விளைந்த அடையாளத்தை ஏற்படுத்திற்று, பல்காலும்- பலதடவையும், கலாமதியைத் தேய்க்கும்- கலைகள் வளரப் பெற்ற சந்திரனைத் தேயச் செய்யும், ஆங்கு-அதுபோல,

மேதினி எல்லாம்–உலகம் எங்கும், இந்த நாட்கணும்–இந்தக் காலத்தும், அவ்வாறு செயும்–அவ்வாறே, போகி உடற் சின்னப்படுத்தும்–காம இன்பத்தில் திளைக்கின்றவனுடைய உடம்பில் காம நோயால் உண்டாகும் அடையாளங்களை ஏற் படுத்தும், கலாமதியைத் தேய்க்கும்–கலையறிவைக் குறைக்கும் பல்காலும்–பற்களையும் கழற்றும், என்பதை நாடு–என்னும் உண்மையை அறிவாயாக.

(பொ—ரை) முற்காலத்தில் கொண்டாடுகின்ற இளம் பெண்கள்பால் செல்லுகின்ற விருப்பம் ஒழியாது மிகுந்ததால் இந்திரனுடைய உடம்பில் காமத்தால் விளைந்த அடையாளத் தை ஏற்படுத்திற்று. பலதடவையும் கலைகள் வளரப்பெற்ற சந்திரனையும் தேயச்செய்யும். அதுபோல உலகம் எங்கும் இந்தக்காலத்தும் அவ்வாறே காம இன்பத்தில் திளைக்கின்ற வனுடைய உடம்பில் காம நோயால் உண்டாகும் அடையா ளங்களை ஏற்படுத்தும். கலையறிவையும் குறைக்கும். பற்களை யும் கழற்றும் என்னும் உண்மையை நீ அறிவாயாக.

இந்திரனுடைய உடம்பில் காமத்தால் விளைந்த அடை யாளமாவது:- காமமிகுந்து அகலிகையை வஞ்சித்துப் புணர்ந்த இந்திரன் கௌதமருடைய சாபத்தால் உடம்பெல் லாம் பெண்குறி அடையாளத்தைப் பெற்றதும், பிறகு சாப மாற்றத்தால், அக்குறிகள் தாமரைபோன்ற அடையாளம் ஆனதையும் குறிக்கும்.

காமம் கலைகள் வளரப்பெற்ற சந்திரனைத் தேயச் செய்த லாவது:- சந்திரன், தக்கனுடைய பெண்களாகி வானில் உடுக்களாக விளங்கும் அசுவினி முதலாகிய இருபத்தேழு பெண்களையும் மணந்துகொண்டபிறகு அவர்களுள் உரோ கிணி என்பவளிடம் மட்டும் அதிக காமமுற்று ஏனையோரைப் புறக்கணித்ததால் தக்கன் சந்திரனுடைய கலைகள் எல்லாம் தேய்ந்து ஒழியுமாறு சபித்ததும், அதனால் கலைகள் குறைந்த தும், பின்னர் ஒரே ஒரு கலை இருக்கும்போது அவன் சிவ

பெருமானைச் சரணடைந்து வேண்ட அந்த ஒரே ஒரு கலை மட்டும் தேயாத வண்ணம் அவர் அவனைத் தலையில் அணிந்து கொண்டதும், பிறகு அச்சாபத்தால் கலைகள் தேயினும் மீண்டும் வளர அவர் அருள் புரிந்ததும் ஆகும்.

அருஞ்சொற்பொருள்: போகி-இந்திரன், காமத்தில் திளைப்பவன். கலாமதி-கலையோடு கூடிய சந்திரன், கலையறிவு.

(இ—பு) செலாது-செல்லாது, செயும்-செய்யும்-இடைக் குறை. இதுவும் சிலேடையணி பெற்றுவந்த இருவிகற்ப நேரிசை வெண்பா.

*வியன்புந்தி மைந்தன் மிகுந்துறவை யுற்று*
*மயங்கியிட வோரூர் வசியா—தியம்பலுறு*
*மம்மறைசொல் வண்ணமிசை வாய்நடையாங் கிச்சையின்வே*
*கம்மறிய நிர்வாண மாம்.* **20**

(ப—ரை) 1. வியன்புந்திமைந்தன்-மிகுந்த புத்தி வலிமை யுடையவன், மிகுந்துறவை உற்று-ஆன்ம இன்பத்தை உயர்த் தும் துறவை அடைந்து, மயங்கியிட-மயங்குதற்குக் காரண மாக இருக்கும், ஓர் ஊர் வசியாது-ஓர் ஊரிலேயே வசிக்கா மல், அம்மறை இயம்பல் உறும் சொல்வண்ணம்-அந்த வேதங்கள் கூறும் கருத்தின்படி, இசைவாய் நடை-மேற் கொண்ட உண்மை ஒழுக்கம், ஆங்கு-அங்கு, இச்சையின் வேகம் மறிய-அவாவின் வேகத்தைத் தடுக்க, நிர்வாணம்ஆம்- பிறப்பொழிந்த பேரின்ப நிலை ஆகும்.

(பொ—ரை) 1.மிகுந்த புத்தி வலிமையுடையவன் ஆன்ம இன்பத்தை உயர்த்தும் துறவை அடைந்து, மயங்குதற்குக் காரணமாக இருக்கும் ஓர் ஊரிலேயே வசிக்காமல் அந்த வேதங்கள் கூறும் கருத்தின்படி மேற்கொண்ட உண்மை

ஒழுக்கம் அங்கு அவாவின் வேகத்தைத் தடுக்கப் பிறப்பொழிந்த பேரின்ப நிலையாகும்.

"ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்" என்னும்

திருக்குறட் கருத்து இதனை வலியுறுத்தும்.

(ப—ரை)2. வியன்–ஒருவன் மிகுதியாக, புந்திமைந்தன்–திருமால் மகன் ஆகிய காமனால் உண்டாகும் காமம், மிகுந்து–பெருகி, ஓர் ஊர்வசி உறவை உற்று மயங்கியிட–ஓர் ஊர்வசி போன்ற அழகியின் உறவையடைந்து மயங்க, அம்மறை யாது இயம்பல் உறும் அச்சொல் வண்ணம்–அந்தக் காம வேதம் யாது கூறுகிறதோ அக்கருத்தின்படி, இசைவாய் நடையில்-இசைவாக ஒழுகுதலில், ஆங்கு இச்சையின் வேகம் அறிய–அங்கு தமக்குள்ள விருப்பத்தின் வேகம் புலப்பட, நிர்வாணம்ஆம்–ஆடையற்ற நிலையுண்டாகும்.

(பொ—ரை) 2. ஒருவன் மிகுதியாக திருமால் மகனாகிய காமனால் உண்டாகும் காமம் மிகுந்து ஓர் ஊர்வசி போன்ற அழகியின் உறவையடைந்து மயங்க, அந்தக் காம வேதம் யாது கூறுகின்றதோ, அக்கருத்தின்படி இசைவாக ஒழுகுதலில் அங்கு தமக்குள்ள விருப்பத்தின் வேகம் புலப்பட ஆடையற்ற நிலையுண்டாகும்.

அருஞ்சொற்பொருள்: வியன்–மிகுதியாக, புந்தி-புத்தி, புதன். மால்–திருமால். மைந்தன்–வலிமையுள்ளவன், மகன். நிர்வாணம்–வீடுபேறு, ஆடையற்ற நிலை. அம்மறை–அழகிய மறையும் ஆம். மறை–முன்னர் நான்கு வேதங்களையும், பின்னர் காம வேதத்தையும் குறித்தது.

இனி மற்றோர் கருத்து:- ஊர்வசி போன்றவள் யாது கூறினளோ அதையே வேத வாக்கியமாகக் கொண்டு ஒழுகும் காம இச்சையின் வேகத்தால், எல்லோரும் அறியுமாறு இடுப்பு ஆடையும் அற்ற வறுமைநிலை உண்டாகும் என்றும் கூறலாம்.

கருத்து நயம்:— நான்கு வேதங்களின் கருத்துப்படி நடப்பவர்கட்குப் பேரின்பம் கிடைக்கவும், காம வேதப்படியோ, ஊர்வசிபோன்றவள் கருத்துப்படியோ நடப்பவர்கட்கு இடுப்பு ஆடையும்அற்ற வறுமை நிலையும், அவ்வறுமையால் ஏற்படும் கொடிய துன்பமும் உண்டாகும் என்று உணர்த்தியவாறு.

(இ—பு) புத்தி-புந்தி எனத் திரிந்தது மெலித்தல் விகாரம். புந்தி–புதன்; புதனுக்கு மால் என்றும் பெயர் உண்டு. மால் என்ற சொல் சிலேடையாகப் புதனையும், திருமாலையும் குறிக்கும். எனவே புந்தி மைந்தன் என்றது மால் மைந்தன் என்று ஆகி, மால் மைந்தன் திருமால் மைந்தனுகிய காமனைக் குறித்தது. எனவே புந்தி என்ற சொல் மாலைக் குறித்து அது திருமாலைக் குறித்தது பொருள் வழிச் சிலேடை என்று கூறுதல் பொருந்தும் எனிற் கொள்க. வாய் – வாய்மை கடைக்குறை. நடை–ஒழுக்கம், தொழிற்பெயர்.

இச்செய்யுளும் இருவிகற்ப நேரிசை வெண்பா,

*மன்னுங் கதிர்மதிதாழ் வாந்தென் வடதிசையின்*
*மின்னுற் றதர்கெதிர்கீழ் மேற்றிசையின்—மன்னுட்*
*குபேர னமனுர் குறுகியிட நிற்கு*
*மபார வுவரி யகத்து.* **21**

(ப—ரை) மின்உற்று–ஒளிபெற்று, கீழ்த்திசையில் மன்னும்-கிழக்குத் திசையில் பொருந்தும், கதிர்மதி-சூரியனும் சந்திரனும், அதற்கு எதிர்–அந்தக் கிழக்குத் திசைக்கு எதிராகிய, மேற்றிசையின்–மேற்குத் திசையில், தாழ்வாம்–வீழும், அன்றியும், அபார உவரி அகத்தும் நிற்கும்–எல்லையற்ற கடலிடத்தும் முழுகும். அதுபோல, வடதிசையில்–வடக்குத் திசையில், மன்குபேரன்-பொருந்தியுள்ள குபேரனைப்போன்ற செல்வன் ஒருவன், தென்னுள் நமனுர்–தெற்குத் திசையிலுள்ள எமன், குறுகியிட–தன்னை வந்து அடையுமாறு,

மேல்திசையில் மன்னும் கதிர்மதி-உயர்ந்த இடத்தில் நிலைபெற்றிருக்கும் ஒளிபொருந்திய அறிவு, மின்உற்று-மின்னலைப் போன்ற ஓர் அழகியைக் கண்டு, கீழ்த்திசையில் தாழ்வாம்-தனது உயர்ந்த நிலையினின்றும் தாழ்ந்த நிலையை அடைய விரும்புவான், அன்றியும், அபார உவரி அகத்தும் நிற்கும்-எல்லையற்ற துன்பக் கடலிலும் அழுந்தி வருந்துவான்.

(பொ—ரை) ஒளிபெற்றுக் கிழக்குத் திசையில் பொருந்தும் சூரியனும், சந்திரனும் அந்தக் கீழ்த்திசைக்கு எதிராகிய மேற்குத் திசையில் வீழும். அன்றியும் எல்லையற்ற கடலிடத்தும் முழுகும். அதுபோல வடக்குத்திசையில் பொருந்தியுள்ள குபேரனைப் போன்ற செல்வன் ஒருவன் தெற்குத் திசையில் உள்ள எமன் தன்னை வந்தடையுமாறு, உயர்ந்த இடத்தில் நிலைபெற்றிருக்கும் ஒளி பொருந்திய அறிவு, மின்னலைப் போன்ற ஓர் அழகியைக் கண்டு தனது உயர்ந்த நிலையினின்றும் தாழ்ந்த நிலையை அடையப் பெறுவான். அன்றியும் எல்லையற்ற துன்பக் கடலிலும் அழுந்தி வருந்துவான்.

அருஞ்சொற்பொருள்: மின்-ஒளி, மின்போன்ற பெண். கதிர்-சூரியன். மதி-சந்திரன். அபார உவரி-எல்லையற்ற கடல்.

(இ—பு) கதிர்மதி-கதிரும் மதியும் உம்மைத் தொகை. ஒளியை உடைய அறிவு-இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

கருத்து நயம்: கீழ்த்திசையில் மின்னுகிய ஒளியைஉற்ற சூரியனும், சந்திரனும் மேற்றிசையில் ஒளிகுறைந்து கடலில் முழுகினும் மீண்டும் கீழ்த்திசையில் எழுந்து ஒளிசிறந்து விளங்குவர். ஆனல் மின்னலைப்போன்று தாக்கி வருத்தவல்ல ஓர் அழகியை உறின் காமனையே எரித்த சிவபெருமானை நண்பனுகக் கொண்டவனும், செல்வங்கட்கெல்லாம் தலைவனும் ஆகிய குபேரனைப் போன்றவரும் தம் நிலை கெட்டு என்றும் தலை தூக்காதவாறு அழிவர் என்பதாம்.

கீழ்த்திசையில் ஒளிசிறந்து விளங்கிய சூரியனும், சந்திரனும் மேற்றிசைக்குச் சென்றபிறகே ஒளி குறைந்து கடலுள் மூழுகா நிற்ப மின்னலைப்போன்ற அழகியரால் தாக்கப்பட்ட குபேரனைப் போன்றவர் தம் திசையில் இருக்கும்போதே தம் நிலையிலிருந்து தாழ்ந்து துன்பக் கடலுள் அழுந்துவர் என்பது மற்றொரு நயம். எனவே பரத்தையர் தொடர்பால் குபேரனைப் போன்ற செல்வரும் தம் நிலையையும், செல்வத்தையும் இழப்பதோடு அகாலத்திலேயே உயிரையும் இழப்பர் என்பது கருத்து.

இச்செய்யுள் இருவிகற்ப நேரிசை வெண்பா.

*பூத்தகொடி வண்டு புடைசூழ்ந் திரண்டரும்பு*
*வாய்த்துத் தனிநிகழ மைந்தர்பலர்—பார்த்துமிகு*
*தாபத்தாற் புல்லுதலுஞ் சர்ப்பந்தீண் டத்தொலையா*
*வாபத் தடைந்தா ரகோ.* **22**

(ப—ரை) 1. பூத்தகொடி-பூக்களைப் பூத்திருக்கின்ற கொடி, புடைவண்டு சூழ்ந்து – தன் பக்கத்தில் வண்டுகள் சூழப் பெற்று, இரண்டு அரும்பு வாய்த்து—இரண்டு அரும்புகள் வாய்க்கப்பெற்று, தனிநிகழ—தனியே இருக்க, மைந்தர் பலர் பார்த்து—காளையர்கள் பலர் பார்த்து, மிகு தாபத்தால்—மிகுந்த ஆவலால், புல்லுதலும்—அப்பூவை முகர்தலும், சர்ப்பந் தீண்ட—அந்தப் பூவினுள் இருந்த பூ நாகம் தீண்டவும், தொலையா ஆபத்து அடைந்தார்-நீங்காத கேட்டை அடைந்தார்கள். அகோ—அசை.

(பொ—ரை) பூக்கள் பூத்திருக்கின்ற கொடி தன்பக்கத்தில் வண்டுகள் சூழப்பெற்று, இரண்டு அரும்புகள் வாய்க்கப் பெற்றுத் தனியே இருக்க, காளையர்கள் பலர் பார்த்து மிகுந்த ஆவலுடன் அப்பூவை முகர்தலும், அந்தப் பூவினுள் இருந்த பூ நாகம் தீண்டவும் நீங்காத கேட்டை அடைந்தார்கள்.

(ப—ரை) 2. பூத்த கொடி–பூப்பு அடைந்த பெண், வண்டு புடைசூழ்ந்து–வளையல்கள் பக்கங்களில் உள்ள கைகளில் பொருந்தி, இரண்டு அரும்பு வாய்த்து–இரண்டு தாமரை அரும்புபோன்ற தனங்களைப் பெற்று, தனிநிகழ-தனிமையாக இருக்க, மைந்தர் பலர் பார்த்து-காளையர்கள் பலரும் அவளைப் பார்த்து, மிகுதாபத்தால்-மிக்க விருப்பத்தோடு, புல்லுதலும்-அவளைப் புணர்தலும், சர்ப்பந்தீண்ட–பாம்பின் படத்தைப் போன்ற அவளுடைய அல்குலால் தீண்டப்பட்டு, ஆபத்து அடைந்தார்–கேட்டை அடைந்தார்கள். (அகோ–அசை)

(பொ—ரை) பூப்பு அடைந்த பெண், வளையல்கள் பக்கங்களில் உள்ள கைகளில் பொருந்தி, இரண்டு தாமரை அரும்புபோன்ற தனங்களைப் பெற்றுத் தனிமையாக இருக்க, காளையர்கள் பலரும் அவளைப் பார்த்து மிக்க விருப்பத்தோடு புணர்தலும், பாம்பின் படத்தைப் போன்ற அவளுடைய அல்குலால் தீண்டப்பட்டுக் கேட்டை அடைந்தார்கள்.

அருஞ்சொற்பொருள்: பூத்த–மலர்ந்த, பூப்படைந்த. கொடி-கொடி, பெண். வண்டு-வண்டு, வளையல். தாபம்-விருப்பம். சர்ப்பம்-அல்குல்.

(இ—பு) கொடி-பெண், உவமை ஆகுபெயர். புடை-புடையில் உள்ள கைகள், இடவாகுபெயர். அரும்பு-தனம், உவமை ஆகுபெயர். சர்ப்பம்-பாம்பின் படத்தைப்போன்ற அல்குல், உவமை ஆகுபெயர். அகோ-அசை.

*தாழை தன்னை மலர்த்து தடித்துட*
*னூழ மாம்ப லலர்த்து மதியமும்*
*வாழு நின்றெனை மையலி னுலவை*
*வீழு வார்கள் விவேக மழகிதே.* **23**

(ப—ரை) 1. தாழை தன்ஐ மலர்த்து-தாழை தன்னிடம் அழகிய மலர்களை உடையது, உடன் தடித்து-மேலும் தன்

வயலிடத்தே உள்ளது, என—என்று கருதி, வீழுவார்கள்—அதன்மேல் விழுபவர்களின், விவேகம்—அறிவும், ஆழும்ஆம்—ஆழமான நீர்நிலை, பல் அலர்த்து—பல பூக்களை உடையது, என—என்று கருதி, வீழுவார்கள்—அந்த நீர்நிலையில் விழுபவர்களின், விவேகம்—அறிவும், மதியமும்—முழு மதியும், நின்று வாழும் என—குறையாதும் மறையாதும் முழுமையாக நிலை பெற்றுத் திகழும் என்று கருதி, மையலினால் அவை வீழுவார்கள்—மயக்கத்தினால் அவற்றிடம் விழைவு கொள்பவர்களின், விவேகம்—அறிவும், அழகிதே—அழகுடையதே.

(பொ—ரை) 1. தாழை தன்னிடம் அழகிய மலர்களை உடையது, மேலும் தன் வயலிடத்தே உள்ளது என்று கருதி அதன்மேல் விழுபவர்களின் அறிவும், ஆழமான நீர்நிலை பல பூக்களையுடையது என்று கருதி அந்த நீர்நிலையில் விழுபவர்களின் அறிவும், முழுமதியும் குறையாதும், மறையாதும் முழுமையாக நிலைபெற்றுத் திகழும் என்று கருதி மயக்கத்தினால் அவற்றிடம் விழைவு கொள்பவர்களின் அறிவும் அழகுடையதே.

(ப—ரை) 2. தாழ்ஐ—தான் விரும்பும் அழகிய உருவம், தன் ஐ மலர்த்து—தன்னிடம் அழகிய கோங்கு, காந்தள், முல்லை, இலவு போன்ற மலர்களையுடையது, உடன் தடித்து-மேலும் இடையாகிய மின்னலையும் உடையது, ஆழும்ஆம் பல்அலர்த்து – தன்னை மயக்கில் ஆழ்த்தும் நீரில் வாழும் தாமரை, நெய்தல், குமுதம் போன்ற பல பூக்களை உடையது, மதியமும் நின்று வாழும்—மதிபோன்ற முகமும் அவ்வாறே ஒளி நிலைபெற்றுத் திகழும், என—என்று கருதி, மையலினால் அவை வீழுவார்கள்—மயக்கத்தினால் அவற்றை விழைகின்றவர்களின், விவேகம் அழகிதே—அறிவு அழகுடையதே.

(பொ—ரை) 2. தான் விரும்பும் அழகிய உருவம் தன்னிடம் அழகிய கோங்கு, காந்தள், முல்லை, இலவு போன்ற மலர்களை உடையது. மேலும் இடையாகிய மின்னலையும்

உடையது. தன்னை மயக்கில் ஆழ்த்தும் நீரில் வாழும் தாமரை, நெய்தல், குமுதம் போன்ற பல பூக்களை உடையது. மதி போன்ற முகமும் அவ்வாறே ஒளி நிலைபெற்றுத் திகழும் என்று கருதி மயக்கத்தினால் அவற்றை விழைகின்றவர்களின் அறிவு அழகுடையதே.

விளக்கம்: கோங்கு தனத்தையும், காந்தள் கைவிரலையும், முல்லை பற்களையும், தாமரை முகம், கைகள், அடிகளையும், நெய்தல் கண்களையும், குமுதம் வாயையும் குறித்தன.

அருஞ்சொற்பொருள்: ஐ-அழகு, உடன்-மேலும், தடி-வயல், மின்னல். வீழ்வார்-வீழ்கின்றவர், விழைகிறவர் கள். ஆம்-நீர், நீர்நிலை. பல்-பல. மையல்-மயக்கம். விவேகம்-அறிவு. தாழ்-விழையும், விரும்பும்.

(இ—பு) மலர்த்து, தடித்து, அலர்த்து—குறிப்பு வினை முற்றுகள். ஆம் (நீர்) நீர்நிலை-தானியாகு பெயர். அழகிது—இகழ்ச்சிக் குறிப்பு. இச்செய்யுள் அளவடி நான்கு பெற்று வந்த கலிவிருத்தம்.

கருத்து நயம்: வஞ்சியரின் அழகில் மயங்கியவர் தாழை மேல் வீழ்ந்தவர் அடையும் துன்பத்தையும், முழுமதியை நம்பியவரின் ஏமாற்றத்தையும், ஆழமான நீர்நிலையில் வீழ்ந்த வரின் உயிரிழப்பையும் ஒருசேரப் பெறுவார்கள். எனவே அவர் துன்புற்று ஏமாந்து மடிவர் என்றவாறு.

*தனைவி ரும்பிவந் தார்பணி செய்யவே*
*நனிம றைப்பொரு ண்ணணக் கலைகளா*
*யினைவி ரித்திது வென்றிடு மாதவ*
*ரனையர் மெய்பொரு ளாவி கவர்வரே.* **24**

(ப—ரை) 1. தனைவிரும்பி வந்தார்—தன்னை விரும்பி வந்தவர்கள், பணிசெய்ய—தனக்குத் தொண்டு செய்ய, மறைப்

பொருள்—வேதங்களின் பொருளை, நனிநண்ண—அவர்கள் மிகவும் பெற, கலைகள் ஆயின விரித்து-கலைகள் ஆயினவற்றை அவர்க்கு விரிவாகக் கூறி, மறைப்பொருள் இது என்றிடும்—வேதங்களின் பொருள் இது என்று கூறும், மாதவர்—பெரிய தவத்தினர், அனையவர்—அவ்வாறு தன்னை விரும்பி வந்தவருடைய, மெய்பொருள் ஆவி கவர்வர்—உடல், பொருள், உயிர் ஆகிய யாவற்றையும் கவர்ந்துகொள்வார்கள்.

(பொ—ரை) 1. தன்னை விரும்பி வந்தவர்கள் தனக்குத் தொண்டு செய்ய, வேதங்களின் பொருளை அவர்கள் மிகவும் பெறக் கலைகள் ஆயினவற்றை அவர்க்கு விரிவாகக் கூறி வேதங்களின் பொருள் இது என்று கூறும் பெரிய தவத்தினர் அவ்வாறு தன்னை விரும்பி வந்தவருடைய உடல், பொருள், உயிர் ஆகிய யாவற்றையும் கவர்ந்துகொள்வார்கள்.

(ப—ரை) 2. தனைவிரும்பி வந்தார் – தன்னை விரும்பி வந்தவர், நனிநண்ண—நன்றாகக் கூடுதற்காக, பணிசெய்ய—அவர் பணித்தபடி செய்வதற்கு, கலைகள் ஆயின விரித்து—உடைகள் ஆனவற்றை விலக்கி, மறைப்பொருள் இது என்ன-மறைக்கப்படுவதாகிய பொருள் இது என்று காட்டும், மாது அவர்—விலைமாதர்களாகிய அவர்கள், அனையர்—அவ்வாறு தன்னை விரும்பி வந்தவருடைய, மெய்பொருள்ஆவி கவர்வர்-உடல், பொருள், உயிர்கள் யாவையும் ஒருங்கே கவர்ந்து கொள்வார்கள்.

(பொ—ரை) 2. தன்னை விரும்பி வந்தவர் நன்றாகக் கூடுதற்காக, அவர் பணித்தபடி செய்வதற்கு உடைகள் ஆனவற்றை விலக்கி, மறைக்கப்படுவதாகிய பொருள் இது என்று காட்டும் விலைமாதர்களாகிய அவர்கள் அவ்வாறு தன்னை விரும்பி வந்தவருடைய உடல், பொருள், உயிர்கள் யாவையும் ஒருங்கே கவர்ந்துகொள்வார்கள்.

அருஞ்சொற்பொருள்: மறை-வேதம், மறைக்கப்படுவது. கலை-கற்றற்குரிய பற்பல கலைகள், ஆடை. நண்ண-அணுக, கூட.

(இ—பு) தனை-தன்னை இடைக்குறை. ஏ-ஈற்றசை. வஞ்சியர் மாதவர் அனையர் என்றது வஞ்சப் புகழ்ச்சி. இச் செய்யுள் அளவடி நான்கு பெற்றுவந்த கலிவிருத்தம்.

கருத்துநயம்: உடல், பொருள், ஆவியைக் கவர்வதில் வஞ்சியர் மாதவரை ஒத்திருப்பினும் கலைகளை விரித்து மறைப் பொருள் காட்டுவதில் அவர்கள் மாதவரைச் சொல்லளவிலே யே ஒத்துள்ளனர் என்றவாறு.

உடல், பொருள், ஆவியை வழங்கத் துணிபவர் கலைப் பொருளை அறிவிக்கவும், மறைப் பொருளை உணர்த்தவும், பேரின்பத்தைப் பெறுவிக்கவும்வல்ல மாதவரை நாடி அவற்றை வழங்காமல் மதிகேட்டையும் நரகத் துன்பத்தை யும் அளிக்கவல்ல விலைமகளிரை நாடி அவற்றை வழங்குதல் எத்துணைப் பேதைமை என்றவாறு.

*கல்வி வல்லவர் காரிகை நூலிடை*
*வல்வி யந்துளம் வைப்பிற் பெருந்தனம்*
*புல்கி நிற்கப் புவியிற் கவிகளாய்ப்*
*பல்பொ ருட்படப் பாடுறு வாரரோ.* **25**

(ப—ரை) 1. கல்வி வல்லவர்-கல்வியில் வல்லவர்கள், காரிகை நூலிடை-யாப்பருங்கலக் காரிகை ஆகிய நூலின் பொருளை, வல்வியந்து—மிகவும் வியப்புக்கொண்டு, உளம் வைப்பில்-உளத்தில் பதிய வைத்தால், பெருந்தனம் புல்கி நிற்க-பெருஞ்செல்வம் தன்னைப் பொருந்தி நிலைபெற, புவியிற் கவிகளாய்-பூமியில் கவிஞராய், பல்பொருள்பட-பல பொருள் கள் பொருந்துமாறு, பாடஉறுவார்-கவிகளைப் பாடுவார்கள், (அரோ—அசை).

(பொ—ரை) 1. கல்வியில் வல்லவர்கள் யாப்பருங் கலக் காரிகையாகிய நூலின் பொருளை மிகவும் வியந்து உளத்தில் பதிய வைத்தால் பெருஞ்செல்வம் தன்னைப் பொருந்தி நிலை பெறப் பூமியில் கவிஞராய்ப் பல பொருள்கள் பொருந்துமாறு கவிகளைப் பாடுவார்கள்.

(ப—ரை) 2. கல்வி-கல்வியில் வல்லவர்கள், காரிகை நூலிடை-பெண்ணின் நூல்போன்ற இடையையும், வல்-சூதாடு கருவிபோன்ற நகிலையும், உளம் வியந்து-உளத்தில் வியந்து, வைப்பின்-வைப்புப் போன்றவளின், பெருந்தனம் புல்கிநிற்க-பெரிய நகில்களைப் பொருந்திக் கிடக்க, புவியில் கவிகளாய்-மண்ணில் கவிழ்பவராய், பல்பொருள் பட-தன்னுடைய பெருஞ்செல்வம் அழியப், பாடுஉறுவார்-துன்பத்தை அடைவார்கள்.

(பொ—ரை) 2. கல்வியில் வல்லவர்கள் பெண்ணின் நூல்போன்ற இடையையும், சூதாடு கருவிபோன்ற நகிலையும் உள்ளத்தில் வியந்து, வைப்புப் போன்றவளின் பெரிய நகில்களைப் பொருந்திக் கிடக்க, மண்ணில் கவிழ்பவராய்த் தன்னுடைய பெரிய செல்வம் அழியத் துன்பத்தை அடைவார்கள்.

கவிகளாய் என்பதற்குக் குரங்குகளாய் என்றும் பொருள் கொள்ளலாம்.

அருஞ்சொற்பொருள்: காரிகை-பெண், யாப்பருங்கலக் காரிகை. வல்-சூதாடு கருவி வைப்பு-வைப்பாகக் கொண்டவள். தனம்-பொருள், நகில். கவிகள்-கவிஞர், கவிழ்பவர், குரங்குகள். பாடஉறுவார்-பாடுவார், துன்புறுவார்.

(இ—பு) நூல்இடை—நூல்போன்ற இடை உவமைத் தொகை. வல்-சூதாடு கருவிபோன்ற நகில் உவமை ஆகு பெயர். அரோ-அசை. பாட என்பதன் ஈற்றகரம் தொக்கது.

இச்செய்யுளும் அளவடி நான்கு பெற்று வந்தமையால் கலிவிருத்தம் ஆகும்.

*நவம ணித்திர ணற்கரித் தந்தமும்*
*பவள முத்தும் படர்ந்தபொன் வண்ணமு*
*மிவணம் வேட்டிசைந் தேழையோ டேழையாய்க்*
*கவல மாய்தலிற் கண்டது மாயையே.* **26**

(ப—ரை) 1. நவம் அணித் திரளும்—புதுமையான பல அணிகளும், நற்கரித் தந்தமும்—நல்ல யானைத் தந்தமும், பவளமும், முத்தும், படர்ந்த பொன்னும்—விரும்பிய பொன்னும், வண்ணமும்—அழகும் ஆகியவற்றை, இவண்நம் வேட்டு—இவ்வுலகில் நாம் விரும்பி, இசைந்து—அவ்விருப்பத்தோடு பொருந்தி, ஏழையோடு ஏழையாய்-அறிவிலாரோடு அறிவிலாதவராய், கவலமாய்தலிற்-புலம்பி மடிவதில், கண்டது மாயையே—அறிந்தது மாயையின் தன்மையையே.

(பொ—ரை) 1. புதுமையான பல அணிகளையும், நல்ல யானைத்தந்தத்தையும், பவளத்தையும், முத்தையும், விரும்பிய பொன்னையும், அழகையும் இவ்வுலகில் நாம் விரும்பி, அவ் விருப்பத்தோடு பொருந்தி அறிவிலாரோடு அறிவிலாராய்ச் சேர்ந்து புலம்பி மடிவதில் யாம் அறிந்தது மாயையின் தன்மையையே.

(ப—ரை) 2. நவம் அணித் திரள்—புதுமையான பல அணிகளையும், நற்கரித் தந்தமுப்—நல்ல பெண் யானையின் தந்தங்களைப் போன்ற நகில்களையும், பவளமும்—பவளத்தைப் போன்று சிவந்த வாயையும், முத்தும்—முத்துப் போன்ற வெண்மையான பற்களையும், படர்ந்தபொன்னும்-பரவியுள்ள பொன்போன்ற தேமலையும், வண்ணமும்—அழகையும், இவண்-இங்கு, நம்-நாம், விரும்பி-ஆசைப்பட்டு, ஏழையோடு இசைந்து-அந்தப்பெண்ணுடன் கூடி, ஏழையாய்-ஏழையாகி, கவல மாய்தலில்-புலம்பி மடிவதில், கண்டது மாயையையே-நாம் அறிந்தது அப்பெண்ணின் வஞ்சகத் தன்மையையே.

(பொ—ரை) 2. புதுமையான பல அணிகளையும், நல்ல பெண் யானையின் தந்தங்களைப் போன்ற நகில்களையும்,

பவளத்தைப் போன்று சிவந்த வாயையும், முத்துப் போன்ற வெண்மையான பற்களையும், பரவியுள்ள பொன் போன்ற தேமலையும், அழகையும் இங்கு நாம் விரும்பி அந்தப் பெண்ணுடன் கூடி, ஏழையாகிப் புலம்பி மடிவதில் நாம் அறிந்தது அப்பெண்ணின் வஞ்சகத் தன்மையையே.

நவமணித் திரள் என்பதற்குப் புதுமையான பல மணிகளையும் என்றும் பொருள் கொள்ளலாம்.

அருஞ்சொற்பொருள்: நவம்-புதுமையான. கரி-யானை. இவண்-இங்கு; வேட்டு-விரும்பி; ஏழை-பெண், வறியவன்; கவல-வருந்தி, புலம்பி; மாய்தல்-மடிதல்; மாயை-வஞ்சம்.

(இ—பு) நம்—நாம் குறுக்கல் விகாரம். கவல—கவன்று, செய்து என்னும் வாய்ப்பாட்டு வினைஎச்சம் செயவென் வாய்ப்பாட்டு வினையெச்சமாக நின்றது. கண்டது—வினையாலணையும் பெயர். தந்தம்—நகிலுக்கும், பவளம்—வாய்க்கும், முத்து—பற்களுக்கும் உவமை ஆகு பெயராயின.

இச்செய்யுளும் கலிவிருத்தம்.

*வயங்க வாவி மலையி னருவிக*
*ளியங்க மின்னலு மிந்திர வில்லொடு*
*குயின்கு லாவப்பைங் கூழ்விளைப் பான்மிக*
*மயங்க வேள்சிறு மைந்த ருழப்பரே.* **27**

(ப—ரை) 1. வாவி வயங்க—குளங்கள் நீரால் நிறைந்து விளங்குமாறும், மலையின் அருவிகள் இயங்க—மலையிலிருந்து வரும் அருவிகள் நீர் நிறைந்து ஓடுமாறும், குயின்—மேகம், இந்திர வில்லொடு குலாவ—வானவில்லொடு பொருந்த, மின்னலும்—மின்னி மழையைப் பெய்தலும், பைங்கூழ் விளைப்பான்—பசிய பயிரை உண்டாக்கும் பொருட்டு, சிறுமைந்தர்—இளைஞர்கள், வேள்மிக மயங்க—மண் மிகவும் கலக்குமாறு, உழப்பர்—உழவுத் தொழில் புரிவர். விளைப்பான் என்ற சொற்குப் பயிரிடுவோன் என்றும் பொருள் கொள்ளலாம்.

(பொ—ரை) 1. குளங்கள் நீரால் நிறைந்து விளங்குமாறும், மலையிலிருந்து வரும் அருவிகள் நீர் நிறைந்து ஓடுமாறும், மேகம் வானவில்லோடு பொருந்த மின்னி மழையைப் பெய்தலும், பசிய பயிரை உண்டாக்கும்பொருட்டு இளைஞர்கள் மண் மிகவும் கலக்குமாறு உழவுத் தொழில் புரிவர்.

(ப—ரை)2. மின்-பகட்டும் பெண்கள், வயங்க-அவாவி-பகட்டாக விளங்க விரும்புதலால், மலையின் அருவிகள் இயங்க-மலையிலிருந்து இழிந்துவரும் அருவிகளைப் போலத் தம் தனங்களின்மீது படிந்து தொங்கும் முத்து மாலைகள் அசையவும், அல்லும்—இரவிலும், குயின் இந்திரவில்லொடு குலாவ—மேகம் போன்ற கூந்தல் வானவில்லைப்போன்ற பன்னிற மலர்களால் ஆகிய தலைமாலையுடன் பொலிய, வேள்-மன்மதன், பைங்கூழ் விளைப்பான்—காம நோய் உண்டாக்குதலால், மிக மயங்க—மிகவும் மயங்கி, சிறுமைந்தர்—சிறுமையுடைய காளையர், உழப்பர்—வருந்துவர். ஏ-ஈற்றசை.

(பொ—ரை) 2. பகட்டும் பெண்கள் பகட்ட விரும்புதலால் மலையிலிருந்து இழிந்துவரும் அருவிகளைப் போலத் தன் தனங்களின்மீது படிந்து தொங்கும் முத்து மாலைகள் அசையவும், இரவிலும் மேகம்போன்ற கூந்தல் வானவில்லைப் போன்ற பன்னிற மலர்களால் ஆகிய தலைமாலையுடன் பொலியவும் மன்மதன் காமநோய் உண்டாக்குதலால் மிகவும் மயங்கி சிறுமையுடைய காளையர் வருந்துவர்.

அருஞ்சொற்பொருள்: வாவி-குளங்கள்; குயின்-மேகம், கூந்தல்; கூழ்-பயிர்; பைங்கூழ்-காமநோய்; வேள்-மன்மதன், மண்.

(இ—பு) விளைப்பான்-வான் ஈற்று வினைஎச்சம். மலை-தனம், உவமை ஆகுபெயர். அருவி-ஆரம், உவமை ஆகுபெயர். குயின்-கூந்தல், உவமை ஆகுபெயர். இந்திரவில்-பன்னிற மலர்களால் ஆகிய மாலைக்கு ஆகி வருவதால் உவமை ஆகுபெயர்.

இச்செய்யுளும் கலிவிருத்தம்.

கெண்டை கூர்மங் கெளிறுவ ரான்முகின்
ஞெண்டு வெற்பொடு நீர்நிலை நாடியுட்
கொண்டு பல்லவர் கோபங் களவுகள்
ளுண்டல் கொல்ல லுலகிற் புரிவரே. 28

(ப—ரை) 1. பல்லவர்—கீழ்மக்கள், முகில்வெற்பொடு-மழைநீர் தேங்கும் மலைச்சுனையுடன், நீர்நிலை நாடி—கேணி, குளம், ஆறு, ஏரி, கடல் ஆகிய நீர்நிலைகளைத் தேடிச்சென்று, கெண்டை—கெண்டைமீன், கூர்மம்—ஆமை, கெளிறு—கெளிற்றுமீன், வரால்—வரால்மீன், ஞெண்டு—நண்டு ஆகியவற்றைப் பிடித்து, உட்கொண்டு—உண்டு, கோபம்—கோபித்தல், களவு—கவர்ந்துசெல்லல், கள்உண்டல்—கள்ளைக் குடித்தல், கொல்லல்—கொலை புரிதல் ஆகிய தீமைகளை, உலகிற் புரிவர்—உலகிற் செய்வார்கள்.

(பொ—ரை) 1. கீழ்மக்கள் மழைநீர் தேங்கும் மலைச்சுனையுடன் கேணி, குளம், ஆறு, ஏரி, கடல் ஆகிய நீர்நிலைகளைத் தேடிச்சென்று, கெண்டைமீன், ஆமை, கெளிற்றுமீன், வரால்மீன், நண்டு ஆகியவற்றைப் பிடித்து உண்டு, கோபித்தல், திருடுதல், கட்குடித்தல், கொலை செய்தல் போன்ற தீய செயல்களை உலகில் செய்வார்கள்.

(ப—ரை) 2. பல்லவர்—தூர்த்தர், கெண்டை—கயல்மீன் போன்ற கண்களையும், கூர்மம்—ஆமைபோன்ற புறத்தாளையும், கெளிறு-கெளிற்றுமீனின் முள்ளைப்போன்ற பற்களையும், ஞெண்டு—நண்டுபோன்றமுழங்காலையும், முகில்வெற்பு-மேகம்படிந்த மலையைப்போன்ற தனங்களையும், நீர்நிலை—நிதம்பத்தையும், உட்கொண்டு—உள்ளத்தில் கொண்டு, நாடி-தேடிச்சென்று, கோபம்—கோபித்தல், களவு—கவர்ந்துசெல்லல், கள்உண்டல்—கள்ளைக்குடித்தல், கொல்லல்—கொலை புரிதல் ஆகிய தீமைகளை, உலகிற்புரிவர்—உலகில் செய்ய விரும்புவர்.

(பொ—ரை) 2. தூர்த்தர் கயல்மீன்போன்ற கண்களை யும், ஆமைபோன்ற புறந்தாளையும், கெளிற்றுமீனின் முள் ளைப்போன்ற பற்களையும், நண்டுபோன்ற முழங்காலையும், மேகம்படிந்த மலையைப்போன்ற தனங்களையும், நிதம்பத்தை யும் உள்ளத்தில் கொண்டு தேடிச்சென்று கோபித்தல், களவாடல், கள்ளுண்டல், கொலைபுரிதல் ஆகிய தீமைகளை உலகிற் செய்ய விரும்புவர்.

அருஞ்சொற்பொருள்: பல்லவர்—கீழ்மக்கள், தூர்த்தர்; கூர்மம்—ஆமை; ஞெண்டு—நண்டு; முகில்—மேகம்; வெற்பு—மலை.

(இ—பு) முகில் வெற்பு—மேகம் படிந்த மலையைப் போலக் கருமை பொருந்திய தனம், உவமை ஆகுபெயர். நீர்நிலை-நிதம்பம், உவமை ஆகுபெயர். ஆமை—புறந்தாள், உவமை ஆகுபெயர். நண்டு—முழங்கால் உவமை ஆகுபெயர்.

இச்செய்யுளும் கலிவிருத்தம்.

*நீல மஞ்ஞைநெ டியசெவ் வண்டுகள்*
*சாலும் பொன்மைச் சகோரம் பசுங்கிளி*
*பாலை நேரன்னம் பஞ்சவண் ணம்படு*
*கோல மாகக் குலாவுமைந் தர்க்கரோ.* 29

(ப—ரை) 1. நீலமஞ்ஞை—நீலநிறமான மயில், நெடிய செவ்வண்டுகள்—நீண்ட செந்நிறமான பொன்வண்டுகள், சாலும் பொன்மைச் சகோரம்-பொன்னிறம் மிகுந்த சக்கர வாகப் புள், பசுங்கிளி-பச்சைநிறக்கிளி, பாலைநேர் அன்னம்-பாலைப்போல் வெண்மைநிறம் பொருந்திய அன்னப்பறவை ஆகிய இவைகள், பஞ்சவண்ணம்படு-ஐந்து நிறங்கள் பொருந் திய, கோலமாக-அழகுடையவளாக, மைந்தருக்குக்குலாவும்-மக்களிடம் குலாவி மகிழும்.

(பொ—ரை) 1. நீலநிறமான மயில், நீண்ட செந்நிறமான பொன்வண்டுகள், பொன்னிறம் மிகுந்த சக்கரவாகப் புள், பச்சைக்கிளி, பாலைப்போல் வெண்ணிறம் பொருந்திய அன்னப்பறவை ஆகிய இவைகள் ஐந்து நிறங்கள் பொருந்திய அழகுடையனவாக மக்களிடம் குலாவி மகிழும்.

(ப—ரை) 2. நீலமஞ்ஞை-நீலமயில்போன்ற சாயலும், நெடிய செவ்வண்டுகள்-நீண்டு சிவந்த அம்புகளைப் போன்ற கண்களும், பொன்மை சாலும் சகோரம் – பொன்னிறம் பொருந்திய சக்கரவாகப் புள்ளைப்போன்ற தனங்களும், பசுங் கிளி-பச்சைக்கிளியின் இனிய குரலும், பாலைநேர் அன்னம்-வெண்மைநிறம் பொருந்திய அன்னப்பறவையின் நடையைப் போன்ற நடையும், ஆகிய, பஞ்சவண்ணம்படு-ஐந்துவகைப் பட்ட, கோலமாக-அழகு உருவமாக, மைந்தருக்கு-காளையர் களிடம், குலாவும்-ஒரு பெண் கலந்து உறவாடும்.

(பொ—ரை) 2. நீல மயில் போன்ற சாயலும், நீண்டு சிவந்த அம்புகளைப் போன்ற கண்களும், பொன்னிறம் பொருந்திய சக்கரவாகப் புள்ளைப் போன்ற தனங்களும், பச்சைக் கிளியின் இனிய குரலும், வெண்மை நிறம் பொருந் திய அன்னப் பறவையின் நடையைப் போன்ற நடையும் ஆகிய ஐந்துவகைப்பட்ட அழகு உருவமாக ஒரு பெண் காளையர்களிடம் கலந்து உறவாடும்.

அருஞ்சொற்பொருள்: செவ்வண்டுகள்-பொன்வண்டு கள், சிவந்த அம்புகள்; சகோரம்-சக்கரவாகப் புள்.

(இ—பு) மஞ்ஞை-மயிலின் சாயல், ஆகுபெயர். நெடிய செவ்வண்டுகள்-நீண்டு சிவந்த அம்புகள் போன்ற கண்கள், உவமை ஆகுபெயர். சகோரம்-தனம், உவமை ஆகுபெயர். கிளி-கிளியின் குரல், முதலாகு பெயர். அதே பெண்ணின் குரல்-உவமை ஆகுபெயர். அன்னம்-அன்னத்தின் நடைக்கு முதலாகு பெயர்; பெண்ணின் நடைக்கு வினை உவமை ஆகுபெயர்.

இச்செய்யுளும் கலிவிருத்தம்.

*ஏழை யானவர்க் கேவல்செய் வாரவர்*
*சூழ லுற்றுத் தொடர்ந்தவ ரெச்சிலுந்*
*தாழ வுண்பர் தனித்தவர் சிற்றடிக்*
*கீழும் வீழ்வரிக் கேவலர் யாவரே.* **30**

(ப—ரை) 1. ஏழை ஆனவர்க்கு—ஏழ்மையுடையவர்க்கு, ஏவல் செய்வார்—தொண்டு செய்வாராய், அவர்சூழல்உற்று—அவர்களுடைய இடத்தை அடைந்து, தொடர்ந்து—அவர்களைத் தொடர்ந்து சென்று, அவர் எச்சிலும்—அவர்களுடைய எச்சிலையும், தாழஉண்பர்—பணிவோடும் உண்பார்கள், **தனித்தவர்**-ஒப்பற்ற தவத்தினரின், சிற்றடிக்கீழும் விழ்வர்—சிறிய பாதங்களில் தம்முடி படுமாறு நிலத்திலும் வீழ்ந்து வணங்குவர். இக்கேவலர் யாவரே—இவர்களைப்போல வீட்டுநிலையை அடைந்தவர் வேறொருவரும் இலர்.

(பொ—ரை) 1. ஏழ்மையுடையவர்க்குத் தொண்டு செய்வாராய் அவர்களுடைய இடத்தை அடைந்து, அவர்களைத் தொடர்ந்து சென்று அவர்களுடைய எச்சிலையும் பணிவோடும் உண்பார்கள். ஒப்பற்ற தவத்தினையுடையவரின் சிற்றடிக்கீழும் வீழ்வர். இவர்களைப்போல வீட்டுநிலையை அடைந்தவர் வேறொருவரும் இலர்.

(ப—ரை) 2. ஏழை ஆனவர்க்கு-பெண்களுக்கு, ஏவல் செய்வார்-பணிவிடை செய்பவராய், அவர்சூழல்உற்று-அவர் இருப்பிடத்தை அடைந்து, தொடர்ந்து-அவர்களைப் பின் தொடர்ந்துசென்று, அவர் எச்சிலும் தாழ உண்பர்-அவர்களுடைய எச்சிலையும் தமக்குச் சிறுமை வருமாறு உண்பார்கள், தனித்து-தனிமையில், அவர் சிற்றடிக்கீழும் வீழ்வர்-அவர்களுடைய சிறிய பாதங்களின்கீழும் வீழ்வார்கள், இக்கேவலர் யாவர்-இவர்களைப்போன்ற இழிவானவர்கள் எவரும் இலர்.

(பொ—ரை)2. பெண்களுக்குப் பணிவிடை செய்பவராய் அவர் இருப்பிடத்தை அடைந்து அவர்களைப் பின்தொடர்ந்து

சென்று அவர்களுடைய எச்சிலையும் தமக்குச் சிறுமை வருமாறு உண்பார்கள். தனிமையில் அவர்களுடைய சிறிய பாதங்களின் கீழும் வீழ்வார்கள். இவர்களைப்போன்ற இழிவானவர்கள் எவரும் இலர்.

அருஞ்சொற்பொருள்: ஏழை-வறியர், பெண்; சூழல்-இடம். தாழ-பணிவோடு, சிறுமை வருமாறு; கேவலர்-இழிவானவர்; வீட்டுநிலையை அடைந்தவர்.

(இ—பு) யாவர் ஏ-ஏ ஈற்றசை.

இச்செய்யுளும் கலிவிருத்தமே.

*அத்தி மேற்பட முல்லைய ரும்பதன்*
*கொத்து திர்ந்திடக் கொம்பை வளைக்குமா*
*றுய்த்து ணர்ந்தில ருற்றுவிண் ணென்றுமே*
*லெய்த்து வீழ்வர்க ளேறு மனையரே.* **31**

(ப—ரை) 1. முல்லை-முல்லைக்கொடி, அத்திமேற்பட—அத்திமரத்தின்மேலே படர, அதன் அரும்பு கொத்து உதிர்ந்து இட—அதன் அரும்பு பூங்கொத்தாகி உதிர்ந்துவிடினும் மேலும் பூ வைக்க, கொம்பை வளைக்கும் ஆறு – அந்த அத்தியின் கிளையை வளைக்கும் முறையை, உய்த்து உணர்ந்திலர் – ஊகித்து உணராதவராய், ஏறு மனையவர்–காளையை ஒப்பவர், விண் என்று – அத்தகைய பெண்ணே விண்ணுலகு என்று கருதி, உற்று – அடைந்து, மேல் எய்த்து வீழ்வர் – பின்னர் இளைத்து வீழ்வர்.

(பொ—ரை) 1. முல்லைக்கொடி அத்திமரத்தின்மேல் படர அதன் அரும்பு பூங்கொத்தாகி உதிர்ந்து விடினும் மேலும் பூ வைக்க, அந்த அத்தியின் கிளையை வளைக்கும் முறையை ஊகித்து உணராதவராய், காளையை ஒப்பவர் அத்தகைய பெண்ணே விண்ணுலகு என்று கருதி அடைந்து, பின்னர் இளைத்து வீழ்வர்.

(ப—ரை) 2. அத்தி மேற்பட - யானைத் தந்தங்களைப் போன்ற தனங்கள் மேலே பட, முல்லை அரும்பு அதன் கொத்து உதிர்ந்திட - முல்லை அரும்பினைப் போன்ற வரிசை யான பற்கள் அழுந்தி அடையாளத்தைச் செய்திட, கொம்பு ஐ வளைக்கும் ஆறு - பூங்கொம்பு போன்றவள் அழகால் தன்னைக் கவரும் வழியை, ஏறும் அனையர் - காளையைப் போன்றவர்கள், உய்த்து உணர்ந்திலர்—ஊகித்து உணராதவ ராய், உற்று—அத்தகைய பெண்களை அடைந்து, விண் என்று—அவர்களே விண்ணுலக மகளிர் என்று ஒழுகி, மேல்எய்த்து—பிறகு இளைத்து, வீழ்வர்—வீழ்ச்சி அடைவார்கள். ஏ—அசை.

(பொ—ரை) 2. யானைத் தந்தங்களைப் போன்ற தனங்கள் மேலே பட, முல்லை அரும்பினைப் போன்ற வரிசையான பற்கள் அழுந்தி அடையாளத்தைச் செய்திட, பூங்கொம்பு போன்றவள் அழகால் தன்னைக் கவரும் வழியை காளையைப் போன்றவர்கள் ஊகித்து உணராதவராய் அத்தகைய பெண்களை அடைந்து, அவர்களே விண்ணுலக மகளிர் என்று ஒழுகி பிறகு இளைத்து வீழ்ச்சி அடைவார்கள்.

அருஞ்சொற்பொருள் : அத்தி - அத்தி மரம். யானை - யானைத் தந்தம் - யானைத் தந்தம் போன்ற நகில்கள்; முல்லை அரும்பு-பற்கள்; ஐ—அழகு; ஏறு-காளை. எய்த்து-இளைத்து.

(இ—பு) அத்தி - யானை; யானை - யானைத் தந்தத்திற்கு முதலாகு பெயராகி, யானைத் தந்தங்களைப் போன்ற நகில் களுக்கு உவமையாகுபெயர் ஆயிற்று. முல்லை அரும்பு-பற்கள் உவமை ஆகுபெயர். கொம்பு—பூங்கொம்பு போன்ற பெண், உவமை ஆகுபெயர். விண்—விண்ணுலக மகளிர், இடவாகு பெயர். வீழ்வர் ஏ. ஏ-ஈற்றசை.

இச்செய்யுளும் கலிவிருத்தம் ஆகும்.

*வீதி வெண்மை மிகுத்த நிறத்துடன்*
*மீது வேதனை மேவுறு நற்கலை*
*மாதை யுள்கி வழுத்திடு மன்பினு*
*ரோத ரும்புல வோரென வாழ்வரே.* **32**

(ப—ரை) 1. விதி–விதிப்படி., வெண்மை மிகுத்த நிறத்துடன்–வெண்மை மிக்க நிறத்தோடு, மீது வேதனை–மேலான பிரமதேவனை, மேவுறும் நற்கலை மாதை–பொருந்தியுள்ள நல்ல கலைகளுக்குத் தலைவியாகிய கலைமகளை, உள்கி–நினைந்து, வழுத்திடும் அன்பினோர்–வணங்கிடும் அன்புடையவர், ஓதரும் புலவோர் என–ஓதுதற்கு அரிய புகழையுடைய, புலவோர் என வாழ்வர்–வாழ்வார்கள்.

(பொ—ரை) 1. விதிப்படி வெண்மை மிக்க நிறத்துடன் மேலான பிரமதேவனைப் பொருந்தியுள்ள நல்ல கலைகளுக்குத் தலைவியாகிய கலைமகளை நினைத்து வணங்கிடும் அன்புடையவர் ஓதுதற்கரிய புகழையுடைய புலவோர் என வாழ்வார்கள்.

(இ—பு) விதி வீதி என்று நீண்டது விகாரம்.

(ப—ரை) 2. வீதி–வீதியில் நின்று, வெண்மை மிகுத்த நிறத்துடல்–வெள்ளை நிறம் மிக்க உடலில், வேதனை மேவுறு–துன்பம் பொருந்த, நன்கு அலை மாதை–நன்கு துன்புறுத்துகின்ற பெண்ணை, உள்கி–நினைந்து, வழுத்திடும் அன்பினர்–போற்றிடும் அன்புடையவர்கள், ஓதரும் புலவோர் என வாழ்வர்–ஓதுதற்கரிய நரகத்தில் வாழ்பவர் என்று கூறுமாறு வாழ்வார்கள்.

(பொ—ரை) 2. வீதியில் நின்று வெள்ளை நிறம் மிக்க உடலில் துன்பம்பொருந்த நன்கு துன்புறுத்துகின்ற பெண்ணை நினைந்து போற்றிடும் அன்புடையவர்கள் ஓதுதற்கரிய நரகத்தில் வாழ்பவர் என்று கூறுமாறு வாழ்வார்கள்.

அருஞ்சொற்பொருள்: விதி—விதிப்படி; மீது—மேலான; வேதன்—பிரமன்; மேவுறும்—பொருந்தும்; வேதனை—துன்பம்; அலை—துன்புறுத்தும்; புலவோர்—நரகத்தில் வாழ்வோர்.

இச்செய்யுளும் கலிவிருத்தம் ஆகும்.

*தென்னையின் குரும்பையைத் திகழ்மு ருக்கலர்*
*தன்னைமா வடுக்களைத் தளிரை மாமயி*
*லின்னிற கடிக்குருத் தினையு மேவியே*
*பின்னைமான் குளம்பையும் பெறுவர் வீணரே.* 33

(ப—ரை) 1. வீணர்—பயனற்றவர், தென்னையின் குரும்பையையும்—தென்னங்குரும்பையையும், திகழ்முருக்கு அலர் தன்னையும்—செந்நிறம் விளங்குகின்ற முள்முருக்கம்பூவையும், மாவடுக்களையும்—மாமரத்தின் வடுக்களாகிய பிஞ்சுகளையும், தளிரையும்—மாந்தளிரையும், மாமயில்—அழகிய மயிலின், இன் இறகு அடிக்குருத்தினையும்—அழகிய இறகினது அடிப் பகுதியாகிய குருத்தினையும், மேவி—அடைந்து, பின்னை—பிறகு, மான்குளம்பையும் பெறுவர்—மானினுடைய குளம்பையும் பெறுவார்கள்.

(பொ—ரை) 1. பயனற்றவர் தென்னங் குரும்பையையும், செந்நிறம் விளங்குகின்ற முள் முருக்கம் பூவையும், மாமரத்தின் வடுக்களாகிய பிஞ்சுகளையும், மாந்தளிரையும், அழகிய மயிலினது அழகிய இறகின் அடிப்பகுதியாகிய குருத்தினையும் அடைந்து பிறகு மானினுடைய குளம்பையும் பெறுவார்கள்.

(ப—ரை) 2. வீணர்—ஒரு பெண்ணால் வீழ்பவர், அப் பெண்ணினுடைய, தென்னையின் குரும்பையையும்-தென்னங் குரும்பை போன்ற நகில்களையும், திகழ்முருக்கு அலர்தன்னை யும்—விளங்குகின்ற முள் முருங்கையின் பூவிதழின் நிறத்தைப்

போன்ற சிவந்த இதழ்களையும், மாவின் வடுக்களையும்—மா மரத்தின் இனிய வடுக்களைப்போன்ற கண்களையும், மாமயில்—அழகிய மயிலினது, இறகு அடிக்குருத்தினையும் — இறகின் அடிப்பகுதியாகிய குருத்தினைப்போன்ற பற்களையும், மேவி—அடைந்து, பின்னை—பிறகு, மான்குளம்பையும் பெறுவர்—மானின் குளம்புபோன்ற அல்குலையும் அடைவார்.

(பொ—ரை) 2. ஒரு பெண்ணால் வீழ்பவர் அப்பெண்ணினுடைய தென்னங் குரும்பை போன்ற நகில்களையும், விளங்குகின்ற முள்முருங்கையின் பூவிதழின் நிறத்தைப் போன்ற சிவந்த இதழ்களையும், மாமரத்தின் இனிய வடுக்களைப் போன்ற கண்களையும், அழகிய மயிலினது இறகின் அடிப்பகுதியாகிய குருத்தினைப் போன்ற பற்களையும் அடைந்து, பிறகு மானின் குளம்பு போன்ற அல்குலையும் அடைவர்.

அருஞ்சொற்பொருள்: வீணர்—பயனற்றவர்; வீழ்நர்—விழுபவர்.

இலக்கணம்: இந்தச் செய்யுளும் கலிவிருத்தம் ஆகும்.

*சஞ்சலங் கடந்திடச் சல்லி யத்தையொத்*
*தஞ்சன மிட்டகண் ணாலு நோக்கியே*
*விஞ்சுபொற் குடங்களை மேவு கென்றிடும்*
*வஞ்சகர்க் களிப்பர்பொன் மடமை மைந்தரே.* 34

(ப—ரை) 1. சஞ்சலம் கடந்திட — மனக்கவலை நீங்க, சல்லியத்தை ஒத்து—மாய வித்தையைப் போன்று, அஞ்சனம் இட்ட—அஞ்சனமையாற் கண்ட (பொருள்களை), கண்ணாலும் நோக்கியே—தம் கண்ணாலேயே பார்த்து, விஞ்சு பொற்குடங்களை—புதையலாக உள்ள பெரிய பொன் நிரம்பிய குடங்களை, மேவுக என்றிடும்—அடைவீராக என்று கூறும், வஞ்சகர்க்கு—ஏமாற்றுபவர்க்கே, மடமை மைந்தர்—அறிவிலாத மக்கள், பொன் அளிப்பர்—பொன்னை மிகுதியும் கொடுப்பார்கள்.

(பொ—ரை) 1. மனக்கவலை நீங்க மாய வித்தையைப் போன்று அஞ்சனமையாற் கண்ட (பொருள்களைத்) தம் கண்ணாலேயே பார்த்துப் புதையலாக உள்ள பெரிய பொன் நிரம்பிய குடங்களை அடைவீராக என்று கூறும் ஏமாற்றுப வர்க்கே அறிவிலாத மக்கள் பொன்னை மிகுதியும் கொடுப் பார்கள்.

அருஞ்சொற்பொருள்: சஞ்சலம்–மனக்கவலை, சல்லியம் –மாயவித்தை, அஞ்சனம்–புதையலைக் கண்டு பிடிப்பதற்குப் பயன்படும் மை.

(ப—ரை) 2. சஞ்சலம் கடந்திட – மனக்கவலை நீங்க, சல்லியத்தை ஒத்து–அம்பைப்போன்று, அஞ்சனமிட்ட–மை தீட்டப்பெற்றுள்ள, கண்ணாலும் நோக்கி–கண்களால் விருப் பத்தோடும் பார்த்து, விஞ்சு பொற்குடங்களை–பெரிய அழகிய குடங்களைப்போன்ற தனங்களை, மேவுக என்றிடும்–அடைக என்று கூறும், வஞ்சகர்க்கு – வஞ்சக நெஞ்சையுடைய மகளிர்க்கு, மடமை மைந்தர்–அறிவிலாத இளைஞர், பொன் அளிப்பர்–தம் செல்வத்தைக் கொடுப்பர்.

(பொ—ரை) 2. மனக்கவலை நீங்க அம்பைப் போன்று மை தீட்டப்பெற்றுள்ள கண்களால் விருப்பத்தோடும் பார்த் துப் பெரிய அழகிய குடங்களைப்போன்ற தனங்களை அடைக என்று கூறும் வஞ்சக நெஞ்சையுடைய மகளிர்க்கு அறிவிலாத இளைஞர் தம் செல்வத்தைக் கொடுப்பர்.

அருஞ்சொற்பொருள்: சஞ்சலம்–மனக்கவலை, சல்லியம் –அம்பு, அஞ்சனம்–கண்ணுக்கு இடும் மை.

இலக்கணம்: இச்செய்யுளும் கலிவிருத்தம் ஆகும்.

*அரிதுகீ ழிருபுற மரம்பை நாட்டிட*
*விரதமேல் வேள்வடி விலங்க மஞ்ஞைநேர்ந்*
*துரைசகோ ரங்கணேக் குறமு ழுச்சசி*
*விரவிரா வலஞ்செயா வேட்பர் மெய்யரே.* **35**

(ப—ரை) 1. இரதம்கீழ் இருபுறம்–தேரின்கீழே இரண்டு பக்கங்களிலும், அரிது அரம்பை நாட்டிட–அருமையான வாழை மரங்கள் கட்டியிருக்க, இரதம்மேல்–தேரின்மேல், மஞ்ஞைநேர்ந்து–மயிலில் அமர்ந்துள்ள, வேள்வடிவுஇலங்க–முருகனுடைய அழகு விளங்க, உரை சகோர் அம்கண் நோக்குற–புகழும் உலகோர் அந்த அழகைத் தம் கண்களால் ஆர்வத்துடன் பார்க்க, முழுச்சசி விரவு இரா – முழு நிலாப் பொருந்திய இரவில், மெய்யர்–மெய்யன்புடையவர், வலஞ் செயா வேட்பர்–அத்தேரை ஊரில் வலமாக இழுத்துவருதலை விரும்புவர்.

(பொ—ரை) 1. தேரின்கீழ் இரண்டு பக்கங்களிலும் அருமையான வாழை மரங்கள் கட்டியிருக்க, தேரின்மேல் மயிலில் அமர்ந்துள்ள முருகனுடைய அழகு விளங்க புகழும் உலகோர் அந்த அழகைத் தம் கண்களால் ஆர்வத்துடன் பார்க்க, முழுநிலாப் பொருந்திய இரவில் மெய்யன்புடையவர் அத்தேரை ஊரில் வலமாக இழுத்துவருதலை விரும்புவர்.

அருஞ்சொற்பொருள்: அரம்பை–வாழை, இரதம்–தேர், மஞ்ஞை–மயில், வேள்–முருகன், சகோர்–சகர்–உலகோர், முழுச்சசி–முழுநிலா.

(ப—ரை) 2. அரிதுகீழ்–அருமையாகக் கீழே, இருபுறம்–இரண்டு பக்கங்களிலும், அரம்பை நாட்டிட–வாழை மரத்தைப்போன்ற தொடைகள் பொருந்த, மேல்இரதம் மஞ்ஞை நேர்ந்து – அதற்குமேல் தேர்த் தட்டிலுள்ள மயிலிறகின் கண்ணைப்போன்று, வேள்வடிவு இலங்க–விருப்பமூட்டும்

அல்குல் விளங்க, உரை சக உரம்—உயர்ந்த இரண்டு தனங் களையும், கண் நோக்குற—கண்கள் பார்க்க, முழுச்சசி விரவு இரா—முழுநிலாப் பொருந்திய இரவில், மெய்யர்—உடல் உணர்வைப் பெரிதும் விரும்புவர், வலஞ்செயா வேட்பர்—அவற்றையுடையவரைத் தழுவுதலை விரும்புவர்.

(பொ—ரை) 2. அருமையாகக் கீழே இரண்டு பக்கங் களிலும் வாழை மரத்தைப்போன்ற தொடைகள் பொருந்த அதற்குமேல் தேர்த் தட்டிலுள்ள மயிலிறகின் கண்ணைப் போன்று விருப்பமூட்டும் அல்குல் விளங்க, உயர்ந்த இரண்டு தனங்களையும் கண்கள் பார்க்க முழுநிலாப் பொருந்திய இரவில் உடல் உணர்வாகிய ஊற்றுணர்வைப் பெரிதும் விரும்புபவர் அவற்றையுடையவரைத் தழுவுதலை விரும்புவர்.

அருஞ்சொற்பொருள்: அரம்பை—வாழை, தொடை; இரதம்—தேர்த்தட்டு, சுரதநீர்; மஞ்ஞை—மயில், மயிலிறகின் கண்; வேள்—விருப்பம்; வடிவு—அல்குல்; உரை—உயர்வு; சக உரம்—இரண்டு தனங்கள்; சசி—நிலா; மெய்—உடல்; மெய்யர்—உடல் உணர்வாகிய ஊற்றுணர்வைப் பெரிதும் விரும்புவர். இரதம்மேல் வேள்வடிவு என்பதை இரதம்ஏல் வேள்வடிவு என்று கொண்டு, சுரதநீர் பொருந்திய விருப்பம் ஊட்டுகின்ற அல்குல் எனலும் ஆகும்.

(இ—பு) அரம்பை—வாழை, வாழைபோன்ற தொடைக்கு உவமை ஆகுபெயர். மஞ்ஞை—மயில், மயிலிறகின் கண்—மயிலிறகின் கண்போன்ற அல்குல் ஆகுபெயர். மஞ்ஞை மயிலிறகின் கண்ணுக்கு முதலாகு பெயராகி, மயிலிறகின்கண் அல்குலுக்கு உவமை ஆகு பெயராயிற்று.

செயா—செய்யா என்பதன் இடைக்குறை.
செய்யா என்னும் வாய்பாட்டு வினை எச்சம்.
செய்து என்னும் பொருள் தந்தது.

இச்செய்யுளும் கலிவிருத்தம் ஆகும்.

*வேங்கைய ரும்புகண் மேலொரு வெண்மை*
*தாங்கிய வண்டொடு சண்பக மீது*
*மோங்குமி ரண்டளி யோவிது பொய்யன்*
*றூங்கறி யென்றசொ லும்படி றர்க்கே.* **36**

(ப—ரை) 1. வேங்கை அரும்புகள் மேல் – வேங்கை அரும்புகளைப் போன்ற தனங்களின் மேலே, வெண்மை தாங்கிய வண்டொடு – வெண்மை பொருந்திய சங்கினைப் போன்ற கழுத்தொடு, சண்பகமீது–சண்பகமலரைப்போன்ற மூக்கின்மேலே, இரண்டு அளியோ–இரண்டு வண்டுகள் போன்ற கருவிழிகளே உள. இதுபொய்யன்று–இதுபொய் யல்ல. ஊங்குஅறி–மேலே பார்த்துத் தெரிந்துகொள். என்ற சொலும் – என்ற சொற்களும், படிறர்க்கே – வஞ்சகர்க்கே உரியவை.

(பொ—ரை) 1. வேங்கை அரும்புகளைப் போன்ற தனங்களுக்கு மேலே வெண்மை பொருந்திய சங்கினைப் போன்ற கழுத்தொடு, சண்பக மலரைப் போன்ற மூக்கின் மேலே இரண்டு வண்டுகள் போன்ற கருவிழிகளே உள. இது பொய்யன்று. மேலே பார்த்துத் தெரிந்துகொள் என்ற சொற்களும் வஞ்சகர்க்கே உரியவை.

அருஞ்சொற்பொருள்: வெண்மை வண்டு–சங்கு, அது சங்குபோன்ற கழுத்துக்கு ஆயிற்று. சண்பக மலர்–மூக்கைக் குறித்தது.

(ப—ரை) 2. சண்பகம்–ஒரு சண்பக மரம், வேங்கை அரும்புகளொடு – வேங்கை மொக்குகளுடனும், மேல் – மேலும், ஒரு வெண்மை தாங்கிய வண்டொடு–ஒரு வெள்ளை நிறமான சங்கோடும், இருக்க–இருப்பதுடன், அதன்மீதும் ஓங்கும் இரண்டு அளியோ–அதற்கு மேலும் பெரிய இரண்டு வண்டுகளையும் பெற்றுள்ளது, இது பொய்யன்று – இது

பொய்யல்ல, ஊங்கு அறி-மேலே பார்த்துத் தெரிந்துகொள், என்றசொலும்-என்ற சொல்லும், படிறர்க்கே-வஞ்சகர்க்கே உரியதாகும்.

(பொ—ரை) 2. ஒரு சண்பக மரம் வேங்கை மொக்குகளுடனும் மேலும் ஒரு வெள்ளை நிறமான சங்கோடும் இருப்பதுடன் அதற்கு மேலும் பெரிய இரண்டு வண்டுகளையும் பெற்றுள்ளது. இது பொய்யல்ல. மேலே பார்த்துத் தெரிந்துகொள் என்ற சொற்களும் வஞ்சகர்க்கே உரியவை.

அருஞ்சொற்பொருள்: வண்டு—சங்கு.

(இ—பு) சொலும்—சொல்லும் என்பதன் இடைக்குறை.

இப்பாடலும் கலிவிருத்தம் ஆகும்.

*மாதவர் கேவல மன்னு நிர்வாணத்*
*தீதுறு குய்யமெ ஞவுப தேசங்*
*காதலின் வந்தக ருத்துடை யார்கட்*
*கேதெரி விப்பர்கெ டத்தொடர் பற்றே.* **37**

(ப—ரை) 1. மாதவர்—பெருந் தவத்தினர், கேவலம் மன்னு—இயற்கையாய் நிலைபெறுகின்ற, நிர்வாணத்து ஈது—வீடுபேருகிய இந்தநிலை, உறுகுய்யம் எனு-பொருந்திய மறைப்பொருள் என்று கூறும், உபதேசம்—உபதேசத்தை, காதலின் வந்த கருத்துடையார்கட்கே—பத்தியொடு வந்து அடைந்த கருத்துடையவர்க்கே, தொடர்பு அற்றுகெட—அவர்களுடைய வினைத்தொடர்பு நீங்கி முற்றிலும் கெடுமாறு, தெரிவிப்பர்—அறிவிப்பர்.

(பொ—ரை) 1. பெருந் தவத்தினர் இயற்கையாய் நிலை பெறுகின்ற வீடுபேருகிய இந்த நிலையே பொருந்திய மறைப்பொருள் என்று கூறும் உபதேசத்தைப் பத்தியொடு வந்து அடைந்த கருத்துடையவர்க்கே அவர்களுடைய வினைத் தொடர்பு நீங்கி முற்றிலும் கெடுமாறு அறிவிப்பர்.

அருஞ்சொற்பொருள்: மாதவர் – பெரிய தவத்தினர்; கேவலம்–இயற்கை; நிர்வாணம்–வீடுபேறு; குய்யம்–மறைப் பொருள்.

(ப—ரை) 2. மாது அவர் – பெண்ணாகிய அவர்கள், காதலின்வந்த-காதலால் உண்டான, உபதேசம்-அறிவுரையை கருக்து உடையார்கட்கே–புறக்கணியாதவருக்கே, தொடர்பு அற்றுக்கெட – அவர் பிறரொடு கொண்ட பற்று ஒழிந்து தன்னிடமே பற்றுக்கொண்டு கெடுமாறு, கேவலம்மன்னும்-இழிவு பொருந்திய, நிர்வாணத்து-ஆடையற்ற நிலையில், ஈது–இதுவே, உறுகுய்யம் எனுத் தெரிவிப்பர்–பெரிய மறைவிடம் என்று புலப்படுத்துவர்.

(பொ—ரை) 2. பெண்ணாகிய அவர்கள் காதலால் உண்டான அறிவுரையைப் புறக்கணியாதவருக்கே, அவர் பிறரொடு கொண்ட பற்று ஒழிந்து தன்னிடமே பற்றுக் கொண்டு கெடுமாறு, இழிவுபொருந்திய ஆடையற்ற நிலையில் இதுவே பெரிய மறைவிடம் என்று புலப்படுத்துவர்.

அருஞ்சொற்பொருள்: கேவலம்–இழிவு; நிர்வாணம்–ஆடையற்றநிலை; உறு-பெரிய; குய்யம்-மறைவிடம்(நிதம்பம்)

(இ—பு) இச்செய்யுளும் கலிவிருத்தமே.

*கயற்கோடு தற்குவழி காணாதி ரண்டோர்*
*முயற்கூடு றக்குமுத முத்தமரை சங்கும்*
*வயற்கா டியைந்தெகினம் வண்டுகுளிர் காணென்*
*றியற்கேடு டன்பொய்மெயி னைச்சொலன்ம யக்கே. 38*

(ப—ரை) 1. இரண்டோர் கயற்கு–இரண்டொரு கயல் மீனுக்கு, ஓடுதற்கு வழிகாணாது–தப்பி ஓடுதற்கு வழியறியாமல், முயல்கூடுஉற–தன்னைப் பிடிக்கப் பயன்படுத்தும் கூட்டில் சேர, குமுதமும், முத்தமும், மரையும், சங்கும்–குமுத

மலரும், முத்துக்களும், தாமரையும், சங்கும், இயைந்து—பொருந்தி, எகினம்—அன்னப் பறவையும், வண்டு—வண்டு களும், குளிர்—நண்டுகளும் பொருந்திய, வயற்காடு—வயற் காட்டில், காண்என்று சொலல்—தேடிப்பார் என்று சொல்லு தற்கும், இயல்கேடுடன்—தன்மை கெடுவதுடன், பொய் மெய்யினைச் சொலல்—பொய்யான ஒழுக்கத்தை மெய்யான ஒழுக்கமாகச் சொல்லுதற்கும் காரணம், மயக்கே—மயக்க உணர்வேயாகும்.

(பொ—ரை) 1. இரண்டொரு கயல் மீனுக்குத் தப்பி ஓடுவதற்கு வழியறியாமல் தன்னைப் பிடிக்கப் பயன்படுத்தும் கூட்டில் சேர, குமுத மலரும், முத்துக்களும், தாமரையும், சங்கும் பொருந்தி அன்னப்பறவையும், வண்டுகளும், நண்டு களும் பொருந்திய வயற்காட்டில் தேடிப்பார் என்று சொல்லு தற்கும் தன்மை கெடுவதுடன் பொய்யான ஒழுக்கத்தை மெய்யான ஒழுக்கமாகச் சொல்லுதற்கும் காரணம் மயக்க உணர்வேயாகும்.

அருஞ்சொற்பொருள்: மரை—தாமரை; எகினம்—அன்னம்; குளிர்—நண்டு; இயல்—தன்மை.

(ப—ரை) 2. இரண்டோர் கயற்கு—இருமனப் பெண் டிரின் கயல்மீன் போன்ற கண்களுக்கு அஞ்சி, ஓடுதற்கு வழி காணாது—ஓடுவதற்கு வழியை அறியாமல், முயல் கூடு உற—அவர்கள் விரும்பும் கூட்டம் நிகழ்தற்பொருட்டு, இயல்கேடு உடன்-தன் தன்மை கெடுவதோடு, பொய்யினை மெய்என்றும்—பொய்யான உடம்பை மெய்யானது என்றும், குமுதம்—வாயைக் குமுதமலர் என்றும், முத்தம்—பற்களை முத்துக்கள் என்றும், மரை—முகத்தை தாமரை மலர் என்றும், சங்கு—கழுத்தைச் சங்கு என்றும், வயற்காடு—கூந்தலை வயற்காடு என்றும் சொல்லுமாறு, இயைந்து—பொருந்தி, எகினம்—நடை அன்னப்பறவையின் நடை என்றும், வண்டு—விழி வண்டைப் போன்றது என்றும், குளிர்—முழங்காலின் சில் நண்டைப்

போன்றது என்றும், சொலல்—சொல்லுதற்குக் காரணம், மயக்கே—மயக்க உணர்வே.

(பொ—ரை) 2. இருமனப் பெண்டிரின் கயல்மீன் போன்ற கண்களுக்கு அஞ்சி ஓடுவதற்கு வழியை அறியாமல் அவர்கள் விரும்பும் கூட்டம் நிகழ்தற்பொருட்டு தன் தன்மை கெடுவதோடு பொய்யான உடம்பை மெய்யானது என்றும், வாயைக் குமுதமலர் என்றும், பற்களை முத்துக்கள் என்றும், முகத்தைத் தாமரைமலர் என்றும், கழுத்தைச் சங்கு என்றும், கூந்தலை வயற்காடு என்றும் சொல்லுமாறு பொருந்தி நடை அன்னப்பறவையின் நடை என்றும், விழி வண்டைப் போன்றது என்றும், முழங்காலின் சில் நண்டைப் போன்றது என்றும் சொல்லுதற்குக் காரணம் மயக்க உணர்வே.

அருஞ்சொற்பொருள்: இரண்டோர்—இருமனப் பெண்டிர், கூடு—கூட்டம், முத்தம்—முத்துக்கள் போன்ற பற்கள், மரை—தாமரை போன்ற முகம், வயல்காடு—வயலிடத்துள்ள காடு, காடு போன்ற கூந்தல்; குளிர்—நண்டு—நண்டு போன்ற முழங்கால் சில்.

(இ—பு) மரை – தாமரை – முதற்குறை, தாமரைப் பூவிற்கு முதலாகு பெயர். முகத்திற்கு உவமையாகு பெயர். முத்தம்—பற்களுக்கு உவமையாகு பெயர். காடு—கூந்தலுக்கு உவமை ஆகுபெயர்.

நாற்சீரடியாகிய அளவடி நான்கு பெற்று வந்தமையால் இது கலிவிருத்தம்.

*துடிமகர யாழிணைது லங்குமிரு தாள*
*மிடையர்குழல் காகளமி ரண்டொடுந டித்தே*
*கொடியவர்ப கட்டுமொரு கோலமதின் மாலு*
*மடமையுடை யாரிடைம தித்தபொரு ளுண்டோ. 39*

(ப—ரை) 1. துடி—முழவு, மகரயாழ்—மகரமீன் வடிவில் அமைந்துள்ள யாழ், இணைதுலங்கும் இருதாளம்—ஒப்புவிளங்கும் இரண்டு தாளங்கள், இடையர் குழல்—இடையர் ஊதும் குழல், காகளம் இரண்டொடு — எக்காளம் இரண்டுடன், நடித்து—நாடகமாக நடித்து, கொடியவர் பகட்டும்—தீயவர் பகட்டுகின்ற, ஓர் கோலமதில்—ஓர் அழகில், மாலும் மடமையுடையாரிடை—மயங்கும் அறியாமையுடையவரிடம், மதித்த பொருள் உண்டோ—மதித்தற்குரிய உறுதிப் பொருள்களுள் யாதேனும் உண்டோ? இல்லை.

(பொ—ரை) 1. முழவு, மகரமீன் வடிவில் அமைந்துள்ள யாழ், ஒப்பு விளங்கும் இரண்டு தாளங்கள், இடையர் ஊதும் குழல், எக்காளம் இரண்டுடன் நாடகமாக நடித்துத் தீயவர் பகட்டுகின்ற ஓர் அழகில் மயங்கும் அறியாமையுடையவரிடம் மதித்தற்குரிய உறுதிப் பொருள்களுள் யாதேனும் உண்டோ? ஒன்றும் இல்லை.

அருஞ்சொற்பொருள்: துடி—முழவு; இணை—ஒப்பு; காகளம்—எக்காளம்; மாலும்—மயங்கும்; மதித்த பொருள்—மதித்தற்குரிய உறுதிப் பொருள்களாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்பவை.

(ப—ரை) 2. துடி—துடிபோன்ற இடை, மகரம்—சுறுமீன்போன்ற கண்கள், யாழ்—யாழின் ஓசைபோன்ற இனிய குரல், இணைதுலங்கும் இருதாளம்—ஒப்புவிளங்கும் இரண்டு தனங்கள், மிடைஆர்குழல்—தாறுபோல் நெருங்கிய கூந்தல், காகளம் இரண்டொடு—எக்காளம் இரண்டின் இனிய ஒலியோடு, நடித்தே—நடனம் புரிந்தே, கொடியவர்—பூங்கொடி போன்றவர், பகட்டும் ஒரு கோலமதில்—பகட்டுகின்ற ஓர் அழகில், மாலும் மடமையுடையவரிடை—மயங்கும் அறியாமையுடையவரிடம், மதித்தபொருள் உண்டோ?—மதித்தற்குரிய உறுதிப் பொருள்களாகிய அறம் முதலிய நான்கனுள் ஒன்றேனும் உண்டோ? இல்லை.

(பொ—ரை) 2. துடிபோன்ற இடை, சுறுமீன்போன்ற கண்கள், யாழின் ஓசைபோன்ற இனிய குரல், ஒப்புவிளங்கும் இரண்டு தனங்கள், தூறுபோல் நெருங்கிய கூந்தல், எக்காளம் இரண்டின் இனிய ஒலியோடு நடனம்புரிந்தே கொடிபோன்ற இடையையுடையவர் பகட்டுகின்ற ஓர் அழகில் மயங்கும் அறியாமையுடையவரிடம் மதித்தற்குரிய உறுதிப் பொருள் களாகிய அறம் முதலிய நான்கினுள் ஒன்றேனும் உண்டோ? இல்லை.

அருஞ்சொற்பொருள்: துடி — துடிபோன்ற இடை, மகரம்-சுறுமீன்போன்ற கண்கள், யாழ்-இனிய குரல், தாளம்-தாளத்தைப்போன்ற தனம், மிடை—தூறு, குழல்—கூந்தல், காகளம்—எக்காளம், கொடியவர்—பூங்கொடி போன்றவர்.

(இ—பு) துடி, மகரம், யாழ், தாளம் ஆகியவை முறையே இடை, கண், குரல், தனம் ஆகியவற்றிற்கு உவமையாகு பெயர்.

இதுவும் கலிவிருத்தமே.

*இருபெரிய கற்களையி ருத்திமரு மத்திற்*
*கருமணல ருஞ்சுமைக னக்கமுடி வைத்தங்*
*கிரிதளையு றச்சிறைகி டைத்தகொடி யாரா*
*லரசர்தனி வீரரும முங்கலறி வற்றே.* **40**

(ப—ரை) 1. மருமத்தில்—மார்பில், இருபெரிய கற்களை இருத்தி—இரண்டு பெரிய கற்களை வைத்து, கருமணல் அருஞ் சுமை-கரிய மணலாகிய அரிய சுமையை, கனக்கமுடி வைத்து-கனம் உண்டாகுமாறு தலையில் வைத்து, அங்கு இரி தளைஉற—அங்கே மடியச்செய்யும் விலங்கு பொருந்த, சிறைகிடைத்த கொடியாரால்—சிறைப்பட்ட தீயவர்களால், அரசரும் தனி வீரரும் அழுங்கல்—அரசர்களும் ஒப்பற்ற வீரர்களும் வருந்து தல், அறிவற்றே—அறிவில்லாமையாலேயே.

(பொ—ரை) 1. மார்பில் இரண்டு பெரிய கற்களைவைத்து கரிய மணலாகிய அரிவு சுமையைக் கனம் உண்டாகுமாறு தலையில் வைத்து அங்கே மடியச்செய்யும் விலங்கு பொருந்த சிறைப்பட்ட தீயவர்களால் அரசர்களும் ஒப்பற்ற வீரர்களும் வருந்துதல் அறிவு இல்லாமையாலேயே.

அருஞ்சொற்பொருள்: மருமம்–மார்பு, முடி–தலை, தளை–விலங்கு, அழுங்கல்–வருந்துதல்.

(ப—ரை) 2. மருமத்தில்–மார்பில், இருபெரிய கற்களை இருத்தி–இரண்டு பெரிய மலைகளைப் போன்ற தனங்களைக் கொண்டு, கருமணல் அருஞ்சுமை–கரிய மணலைப் போன்ற கூந்தலாகிய பெரிய சுமையை, கனக்கமுடி வைத்து–கனமாக இருக்குமாறு தலையில் கொண்டு, அங்கு இரி தளைஉற–அங்கே மடியச்செய்யும் விலங்குபூட்ட, சிறைகிடைத்த கொடியாரால்–சிறையாகக் கிடைத்த பூங்கொடி போன்ற பெண்களால், அரசரும் தனிவீரரும் – அரசர்களும் ஒப்பற்ற வீரர்களும், அழுங்கல் – வருந்துதல், அறிவுஅற்றே – அறிவு இல்லாமையாலேயே.

(பொ—ரை) 2. மார்பில் இரண்டு பெரிய மலைகளைப் போன்ற தனங்களைக் கொண்டு, கரிய மணலைப் போன்ற கூந்தலாகிய பெரிய சுமையைக் கனமாக இருக்குமாறு தலையில் கொண்டு அங்கே மடியச் செய்யும் விலங்குபூட்ட சிறையாகக் கிடைத்த பூங்கொடி போன்ற பெண்களால் அரசர்களும் ஒப்பற்ற வீரர்களும் வருந்துதல் அறிவு இல்லாமையாலேயே.

அருஞ்சொற்பொருள்: கல்–மலைபோன்ற தனம், கருமணல்–கருமணலைப்போன்ற கூந்தல், முடி-தலை.

(இ—பு) கல்–மலைபோன்ற தனத்திற்கு உவமை ஆகுபெயர். கருமணல்–கரிய கூந்தல் உவமை ஆகுபெயர்.

இதுவும் கலிவிருத்தமே.

*கரும்பு வாழையிள நீர்கமுக னிச்ச மகிழ்கற்*
*பரும்பு சண்பகம மைந்துகுழல் காக ளமுட*
*னெருங்கு நம்மனை நி தம்பொலியு மங்க லமொடென்*
*றிருந்து ளார்தெரிகி லார்கொ லெதிர் வெள்ளில்பறையே.*
*41*

(ப—ரை) 1. கருப்பு வாழை இளநீர்–கரும்பும், வாழையும், இளநீரும், கமுகு–பாக்கு மரமும், அனிச்சம்–அனிச்சமும், மகிழ்–மகிழ மரமும், கற்பு அரும்பு சண்பகம்–முறையாக அரும்பும் சண்பகமும், அமைந்து–பொருந்தி, குழல்–புள்ளாங்குழல், காகளமுடன்-எக்காளத்துடன், நெருங்குநம் மனை–பொருந்தியுள்ள நம்வீடு, நிதம் மங்கலமொடுபொலியும் என்று–நிதம் மங்கலத்துடன் திகழும் என்று, இருந்துளார்–இருந்தவர்கள், எதிர்வெள்ளில் பறையே தெரிகிலார் கொல்–எதிரில் வரும் பாடையும், பறையும் உணர்த்தும் நிலையாமையைத் தெரிந்துகொள்ளும் அறிவாற்றல் இல்லாதவரோ?

(பொ—ரை) 1. கரும்பும் வாழையும் இளநீரும் பாக்கு மரமும் அனிச்சமும் மகிழ மரமும் முறையாக அரும்பும் சண்பகமும் பொருந்தி புள்ளாங்குழல் எக்காளத்துடன் பொருந்தியுள்ள நம்வீடு நாள்தோறும் மங்கலத்துடன் திகழும் என்று இருந்தவர்கள் எதிரில் வரும் பாடையும் பறையும் உணர்த்தும் நிலையாமையைத் தெரிந்துகொள்ளும் அறிவாற்றல் இல்லாதவரோ?

அருஞ்சொற்பொருள்: மகிழ்-மகிழமரம், கற்புஅரும்பு-முறையாக வைக்கும் அரும்பு, வெள்ளில்–பாடை, காகளம்-எக்காளம்.

(ப—ரை) 2. கரும்பு–கரும்பு போன்ற மொழியும், வாழை–வாழை போன்ற தொடைகளும், இளநீர்–இளநீர் போன்ற தனங்களும், கமுகு–கமுகு போன்ற கழுத்தும், அனிச்சம்–அனிச்சம் பூப் போன்ற மெல்லிய பாதங்களும்,

மகிழ்கற்பு-மகிழ்வதற்குஉரிய கற்பும், அரும்பு-முல்லை அரும்பு போன்ற பற்களும், சண்பகம்—சாதிக்கும் அழகு, அமைந்து—பொருந்தி, குழல்—கூந்தல், காகளமுடன்—கிளி மொழியுடன், நெருங்குநம்மனை—அணுகும் நம்முடைய மனைவி, நிதம் மங்கலமொடு பொலியும்என்று நாள்தோறும் மங்கலத்துடன்விளங்குவாள் என்று, இருந்துளார்—இருந்துவருபவர், எதிர் வெள்ளில் பறை—இனிவரும் பாடையையும் பறையையும், தெரிகிலார் கொல்—அறியமுடியாதவரே போலும்.

(பொ—ரை) 2. கரும்பு போன்ற மொழியும், வாழை போன்ற தொடைகளும், இளநீர் போன்ற தனங்களும், கமுகு போன்ற கழுத்தும், அனிச்சம் பூப்போன்ற மெல்லிய பாதங்களும், மகிழ்வதற்கு உரிய கற்பும், முல்லை அரும்பு போன்ற பற்களும், சாதிக்கும் அழகு பொருந்திய கூந்தலும், கிளி மொழியும்பெற்று அணுகும் நம்முடைய மனைவி நாள்தோறும் மங்கலத்துடன் விளங்குவாள் என்று இருந்து வருபவர் இனி வரும் பாடையையும் பறையையும் அறிய முடியாதவரே போலும்.

அருஞ்சொற்பொருள்: அனிச்சம் - அனிச்சம்பூ, குழல்-கூந்தல், காகளம்—புள்ளோசையாகிய கிளிமொழி, பகம்—அழகு, சண்—சாதிக்கும், வெள்ளில்—பாடை.

இப்பாடல் யாக்கை நிலையாமையை நன்கு உணர்த்துகிறது.

(இ—பு) இது ஐஞ்சீரடியாகிய நெடிலடி நான்கு பெற்று வந்ததால் கலித்துறை.

*அரம்பை சண்பகம சோகுகமு காலி லவுவேய்*
*பொருந்து மின்னிழல்பு றத்துவிழி கண்ட பலரு*
*மொருங்கு வெம்மைகழி வுற்றுமிகு தண்மை யுடனே*
*நெருங்கி யொன்றினர்நி தம்பலப ழங்க ணுகர்வார்.*

***42***

(ப—ரை) 1. அரம்பை-வாழை, சண்பகம்; அசோகு-அசோகமரம், கமுகு-பாக்குமரம், ஆல்-ஆலமரம், இலவு-இலவமரம், வேய்-மூங்கில், பொருந்தும்-பொருந்துகின்ற, இன்னிழல்-சோலையின் இனிய நிழலை, புறத்து விழி கண்ட பலரும்-புறத்தே கண்ணால் கண்ட பலரும், நெருங்கி ஒன்றினர்-அருகே அடைந்தவராக, ஒருங்கு-ஒருங்கே, வெம்மை கழிவுற்று-வெப்பம் நீங்கப்பெற்று, மிகு தண்மையுடனே-மிக்க குளிர்ச்சியுடனே, நிதம்-தினமும், பலபழங்கள் நுகர்வார்-பல பழங்களையும் உண்பார்கள்.

(பொ—ரை) 1. வாழை, சண்பகம், அசோகமரம், பாக்குமரம், ஆலமரம், இலவமரம், மூங்கில் பொருந்துகின்ற சோலையின் இனிய நிழலைப் புறத்தே கண்ணால் கண்ட பலரும் அருகே அடைந்தவராக ஒருங்கே வெப்பம் நீங்கப்பெற்று மிக்க குளிர்ச்சியுடனே தினமும் பல பழங்களையும் உண்பார்கள்.

(ப—ரை) 2. அரம்பை-வாழைபோன்ற தொடையும், சண்பகம்-சண்பக மலரைப் போன்ற மூக்கும், அசோகு-அசோகமாகிய காமன்கணையும், கமுகு-கமுகைப் போன்ற கழுத்தும், ஆல்-ஆல் இலையைப் போன்ற வயிறும், இலவு-இலவின் பூவைப் போன்ற சிவந்த உதடுகளும், வேய்-மூங்கிலைப் போன்ற தோள்களும், பொருந்தும்-பொருந்தியுள்ள, மின்-மின்னைப் போன்ற இடையையுடைய பெண்ணின், நிழல் புறத்து விழி கண்ட பலரும்-கூந்தலின் புறத்தே அமைந்துள்ள கண்களைக் கண்ட பலரும், நெருங்கிஒன்றினர்-அணுகிக் கூடினவர் ஆக, ஒருங்கு வெம்மை கழிவுற்று-ஒருசேர விருப்பம் நீங்கப்பெற்று, மிகு தண்மையுடன்-வளரும் சன்னி நோயுடன், நிதம்-தினந்தோறும் பல பழங்கண் நுகர்வார்-பல துன்பங்களை அடைவார்கள்.

(பொ—ரை) 2. வாழைபோன்ற தொடையும், சண்பக மலரைப் போன்ற மூக்கும், அசோகமாகிய காமன் கணையும்,

கமுகைப்போன்ற கழுத்தும், ஆல் இலையைப்போன்ற வயிறும் இலவின் பூவைப் போன்ற சிவந்த உதடுகளும், மூங்கிலைப் போன்ற தோள்களும், பொருந்தியுள்ள மின்னைப் போன்ற இடையையுடைய பெண்ணின் கூந்தலின் புறத்தே அமைந்துள்ள கண்களைக் கண்ட பலரும் அணுகிக் கூடினவர் ஆக, ஒருசேர விருப்பம் நீங்கப்பெற்று வளரும் குளிர் (சன்னி) நோயுடன் தினந்தோறும் பல துன்பங்களை அடைவார்கள்.

அருஞ்சொற்பொருள்: நிழல்—கூந்தல், வெம்மை—விருப்பம், தண்மை—குளிர்நோய்(சன்னி), பழங்கண்—துன்பம்.

(இ—பு) அரம்பை தொடைக்கும், கமுகு கழுத்துக்கும் உவமை ஆகுபெயர். ஆல்—ஆலிலை முதலாகுபெயர், பின் வயிற்றுக்கு உவமை ஆகுபெயர். இலவு—இலவின் பூவிற்கு முதலாகுபெயர். இலவின்பூ உதட்டுக்கு உவமையாகுபெயர். நிழல்—கூந்தலுக்கு உவமையாகுபெயர்.

இதுவும் நெடிலடி நான்கு பெற்ற கலித்துறை.

*பந்து நூல்பணப் பையினைப் பற்றியே பகர*
*வந்தி லாததை யற்றொழி லுற்றிடு மைந்தர்*
*முந்து பையுளே மூன்றுகா சுடையராய் மூழ்கி*
*யிந்த நாடுவிட் டேகினர் தட்சிணத் திடையே.* **43**

(ப—ரை) 1. பந்து நூல் — பந்து போன்ற நூலையும், பணப் பையினை—பணம் போடும் பையினையும், பற்றியே—கையில் கொண்டு, பகரவந்து—விற்கவந்து, இலாத—முன் இல்லாத, தையல்தொழில் உற்றிடும்மைந்தர்-தையல்தொழிலை மேற்கொள்கின்ற இளைஞர், முந்து—முன்னே, பையுளே—பையினுள்ளே, மூன்று காசு உடையராய்-மூன்று காசு உடையவராய். மூழ்கி—இத்தொழிலிலேயே இரவு பகலாக அழுந்தி, இந்த நாடு விட்டு—இந்த நாட்டையும் விட்டு,

தட்சிணத்து இடையே—தென் திசையிலுள்ள எமபுரத்திற்கே, ஏகினர்—சென்றனர்.

(பொ—ரை) 1. பந்துபோன்ற நூலையும், பணம்போடும் பையினையும் கையில் கொண்டு விற்கவந்து முன் இல்லாத தையல் தொழிலை மேற்கொள்கின்ற இளைஞர் முன்னே பையினுள்ளே மூன்று காசு உடையவராய் இந்தத் தொழிலிலேயே இரவு பகலாக அழுந்தி, இந்த நாட்டையும் விட்டு தென் திசையிலுள்ள எமபுரத்திற்கே சென்றனர்.

(ப—ரை) 2. பந்து—பந்துபோன்ற தனங்களையும், நூல்—நூல்போன்ற மெல்லிய இடையையும், பணப்பையினை—பாம்பின் படத்தைப்போன்ற அல்குலையும், பற்றி—கருதி, ஏ பகர வந்து—அம்பைப் போன்ற கண்களால் பேசவந்து, இலாத தையல்தொழில்—நன்மையில்லாத கலவித் தொழிலை, உற்றிடு மைந்தர்—பெற்றிடும் இளைஞர், முந்துபையுளே—முந்துகின்ற துன்பத்தோடும், மூன்று காசு உடையராய்—வளி பித்தம், ஐ என்னும் மூன்று நாடியிலும் நோய் உடையவராகி, மூழ்கி—துன்பத்தில் முழுகி, இந்த நாடு விட்டு-இந்த நாட்டைவிடுத்து, தட்சிணத்து – தெற்கிலுள்ள எமனுடைய உலகத்திற்கே, இடையே ஏகினர்—நடுவயதிலேயே சென்றனர்.

(பொ—ரை) 2. பந்து போன்ற தனங்களையும், நூல் போன்ற மெல்லிய இடையையும், பாம்பின் படத்தைப் போன்ற அல்குலையும் கொண்டு அம்பைப் போன்ற கண்களால் விலை பேச வந்து தரும் நன்மையில்லாத கலவித் தொழிலைப் பெற்றிடும் இளைஞர் முந்துகின்ற துன்பத்தோடும் வளி, பித்தம், ஐ என்னும் மூன்று நாடியிலும் நோய் உடையவராகித் துன்பத்தில் முழுகி இந்த நாட்டை விடுத்துத் தெற்கிலுள்ள எமனுடைய உலகத்திற்கு நடுவயதிலேயே சென்றனர்.

அருஞ்சொற்பொருள்: பணம்—படம்; பை—படம், காசு போடும் துணிப்பை; ஏ—அம்பு; தையல்—தைத்தல், கலவி;

பையுள்—துன்பம், பைக்குள்; காசு—குற்றம், நோய், காசு; மூன்றுகாசு—வளி(வாதம்), பித்தம், ஐ(சிலேத்துமம்) என்னும் மூன்று நாடியிலும் ஏற்படும் நோய்; தட்சிணத்து—தென்திசையிலுள்ள எமலோகத்திற்கு; இடை—நடுவயதில்.

(இ—பு) பந்துநூல்—உவமைத் தொகை. பணப்பை—இருபெயரொட்டுப் பண்புத் தொகை. பையுள்ஏ—ஏகாரம் அசை. இடையே ஏகாரம் ஈற்றசை.

இதுவும் நெடிலடி நான்கு பெற்று வந்துள்ளதால் கலித்துறை.

*ஓரிளங் கொம்பிரு குன்றினைத் தாங்கு முயற்பிறைமேற்*
*சேருங் கருமணல் கிள்ளையைக் கொவ்வைச் செழுங்கனிக*
*ளீர விழுங்கி யுமிழ்ந்திடு மென்னுந் திரட்படிறர்*
*நேரும் பவர்க்க நிலையைநெஞ் சத்து நினைவரிதே. 44*

(ப—ரை) 1. ஓர்இளங்கொம்பு-ஓர் இளைய மரக்கொம்பு, இரு குன்றினைத் தாங்கும்—இரண்டு குன்றுகளைத் தாங்கும், உயற்பிறைமேற்சேரும்—வானிலுள்ள பிறையை அது தன் உச்சியில் பொருந்தும், கருமணல் கிள்ளையை – கருமை பொருந்திய கிளியை, கொவ்வைச் செழுங்கனிகள்-கோவைக் கொடியில் பழுக்கும் செழுமையான கனிகள், ஈரவிழுங்கி உமிழ்ந்திடும்—முற்றிலும் விழுங்கி உமிழ்ந்துவிடும், என்னும் திரள்படிறர் – என்று கூறும் திரண்ட பொய்யர், நேரும் பவர்க்கநிலையை—தமக்கு உண்டாகும் நெருக்கடி நிலையை, நினைவு அரிதே—நினைவிற் கொள்ளுதல் இல்லை.

(பொ—ரை) 1. ஓர் இளைய மரக்கொம்பு இரண்டு குன்றுகளைத் தாங்கும். அது தன் உச்சியில் வானிலுள்ள பிறையைப் பொருந்தும், கருமை பொருந்திய கிளியைக் கோவைக் கொடியில் பழுக்கும் செழுமையான கனிகள் முற்றிலும் விழுங்கி உமிழ்ந்துவிடும் என்று கூறும் திரண்ட பொய்யர் தமக்கு உண்டாகும் நெருக்கடி நிலையை நினைவிற் கொள்ளுதல் இல்லை.

(ப—ரை) 2. ஓர் இளங்கொம்பு-ஓர் இளமைபொருந்திய பூங்கொம்பு போன்ற பெண், இருகுன்றினைத் தாங்கும்- இரண்டு குன்றுபோன்ற தனங்களைத் தாங்கும், உயர்பிறை- வளரும் பிறைபோன்ற நெற்றியை, மேற்சேரும்-தன் உச்சியில் பொருந்தும், கருமணல் கிள்ளை—கரிய மணலாகிய அறலினைப் போன்ற கூந்தலையுடையவள், கிள்ளை—கிளிபோல் பேசும் பேச்சை, ஐ கொவ்வைச் செழுங்கனிகள்—அழகிய கோவைப் பழம்போன்ற இதழ்கள், விழுங்கி உமிழ்ந்திடும்—உட்கொண்டு வெளிவிடும், என்னும்—என்று கூறும், திரள்படிறர்—திரண்ட வஞ்சகர், நேரும் பவர்க்கநிலையை—அதனால் உண்டாகும் நரக நிலையை, நெஞ்சத்து நினைவு அரிது ஏ—உள்ளத்தில் நினைத்தல் இல்லை.

(பொ—ரை) 2. ஓர் இளமை பொருந்திய பூங்கொம்பு போன்ற பெண் இரண்டு குன்றுபோன்ற தனங்களைத்தாங்கும் வளரும் பிறைபோன்ற நெற்றியைத் தன் உச்சியில் பொருந்தும், கரிய மணலாகிய அறலினைப் போன்ற கூந்தலையுடையவள் கிளிபோல் பேசும் பேச்சை அழகிய கோவைப்பழம் போன்ற இதழ்கள் உட்கொண்டு வெளிவிடும் என்று கூறும் திரண்ட வஞ்சகர் அதனால் உண்டாகும் நரக நிலையை உள்ளத்தில் நினைத்தல் இல்லை.

அருஞ்சொற்பொருள்; மணல்—மண்ணுதல், பொருந்துதல்; கொவ்வை—கோவைக்கொடி; படிறர்—வஞ்சகர்; பவர்க்கம்—நெருக்கடி, நரகம்; திர—முற்றிலும்; கொம்பு—கொம்பு போன்ற பெண், இருகுன்று-இரண்டு தனங்கள்; பிறை-பிறை போன்ற நெற்றி; கருமணல்—அறல்போன்ற கூந்தலையுடையவள்; கிள்ளை—கிளிபோன்ற பேச்சு; கொவ்வைக்கனி—சிவந்த இதழ்கள்

(இ—பு) கொம்பு, குன்று, பிறை, கிள்ளை, கருமணல், கொவ்வைக்கனி ஆகியவை உவமை ஆகுபெயர்கள். அவை முறையே கொம்பு போன்றவள், குன்று போன்ற தனம்,

பிறை போன்ற நெற்றி, கிளியின் பேச்சைப் போன்ற இனிய பேச்சு, கரிய மணல் போன்ற கூந்தலையுடைய பெண், கொவ்வைக்கனி போன்ற சிவந்த இதழ்கள் ஆகியவற்றைக் குறித்தன. அரிதுஏ—ஏ ஈற்றசை.

இது நேரசையை முதலாகக் கொண்ட கட்டளைக் கலித்துறை.

*பார்க்கப் படாத கொடும்புலி பாம்பு படம்விரித்த*
*மார்க்க மிருதுதிக் கையோ டிரண்டு மதத்தகயத்*
*தீர்க்கங் கொடியார் மறைப்பவு நோக்கியுஞ் சென்றடுத்துள்*
*வேர்க்க மருண்டவண் வீழ்ந்தார்பிற் கேடு விளம்பரிதே.*
**45**

(ப—ரை) 1. பார்க்கப்படாத கொடும்புலி—பார்க்கத் தகாத கொடிய புலியும், படம்விரித்த பாம்பு—படம் விரித்த பாம்பும், இரு துதிக்கையோடு-கரிய தும்பிக்கையுடன்கூடிய, மதத்து இரண்டு கயத்து—மதத்தையுடைய இரண்டு யானை களும், மார்க்கம்—உலவும் வழியில், அம்கொடியார் ஈர்க்க—அழகிய கொடிகள் இழுக்கவும், ஆர் மறைப்பவும்—ஆத்தி மரங்கள் மறைக்கவும், நோக்கியும்—பார்த்தும், சென்று அடுத்து—அங்குபோய்ச் சேர்ந்து, வேர்க்க—உடல் வியர்க்க, உள்மருண்டு – உள்ளம் மயங்கி, அவண் வீழ்ந்தார் – அங்கு விழுந்தவர்கள், பிற்கேடு—பிறகு கெடுதல், விளம்பு அரிது—சொல்லுதற்கு அரியதே.

(பொ—ரை) 1. பார்க்கத்தகாத கொடிய புலியும் படம் விரித்த பாம்பும், கரிய தும்பிக்கையுடன் கூடிய மதத்தை யுடைய இரண்டு யானைகளும் உலவும் வழியில் அழகிய கொடிகள் இழுக்கவும், ஆத்திமரங்கள் மறைக்கவும் பார்த் தும் அங்கு போய்ச் சேர்ந்து உடல் வியர்க்க உள்ளம் மயங்கி அங்கு விழுந்தவர்கள் பிறகு கெடுதல் சொல்லுதற்கு அரியதே.

(ப—ரை) 2. பார்க்கப்படாத-பார்க்கத்தகாத, கொடும் புலி-கொடுமை பொருந்தியவையாகிய, இருதுதிக்கையோடு-இரண்டு தும்பிக்கையைப் போன்ற-தொடைகளுடன், பாம்பு விரித்த படம் மார்க்கம்—பாம்பினது படத்தைப் போன்ற விரிந்த அல்குல் வழியையும், இரண்டு மதத்த கயத்த—இரண்டு வலிய யானைத் தந்தங்களையொத்த நகில்களையும், ஈர்க்கம்—ஈரையுடைய தலையையும் உடைய, கொடியார்—கொடியவர், மறைப்பவும்—அவற்றை மறைக்கவும், நோக்கியும்—அவற்றை பார்த்தும், சென்று அடுத்து—அவரிடம் போய்ச் சேர்ந்து, வேர்க்க—உடல் வியர்க்கவும், உள்மருண்டு—உள்ளம் மயங்கவும், அவண் வீழ்ந்தார் – அங்கே விரும்பி முயங்கியவர், பிற்கேடு—பிறகு கெடுதல், விளம்பு அரிதே—சொல்லுதற்கு அரியதே.

(பொ—ரை) 2. பார்க்கத்தகாத கொடுமை பொருந்திய வையாகிய இரண்டு தும்பிக்கையைப் போன்ற தொடைகளுடன் பாம்பினது படத்தைப் போன்ற விரிந்த அல்குல் வழியையும், இரண்டு வலிய யானைத் தந்தங்களை ஒத்த நகில்களையும் ஈரையுடைய தலையையும் உடைய கொடியவர் அவற்றை மறைக்கவும் அவற்றைப் பார்த்தும் அவரிடம் போய்ச் சேர்ந்து உடல் வியர்க்கவும், உள்ளம் மயங்கவும், அங்கே விரும்பி முயங்கியவர் பிறகு கெடுதல் சொல்லுதற்கு அரியதே.

அருஞ்சொற்பொருள்: மார்க்கம்—வழி; அம்—அழகிய; கொடியார் – கொடிகள், கொடியவர்; ஆர் – ஆத்திமரம்; கொடும்புலி-கொடுமை பொருந்தியவை, புலி; புல்லி-பொருந்தியவை; துதிக்கை—தும்பிக்கை போன்ற தொடை; பாம்பு படம்—பாம்பினது படத்தைப் போன்ற அல்குல்; மதத்த—வலிய; கயத்த—யானைத் தந்தங்களை ஒத்த நகில்களையுடைய; கயம்—யானை, முதல் ஆகுபெயராய்த் தந்தங்களை உணர்த்தி அவை உவமையாகுபெயராய் நகில்களை உணர்த்தின. கம்—தலை; ஈர்க்கம்—ஈரையுடைய தலை.

(இ—பு) துதிக்கை தொடைக்கும், படம் அல்குலுக்கும் ஆகுபெயர். கயம் முதலாகுபெயராய்த் தந்தத்தைக் குறித்துப் பிறகு உவமையாகுபெயராய் நகிலைக் குறித்தது. கேடு— முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

இதுவும் நேர்அசை முதலில் வந்த கட்டளைக் கலித்துறை.

*செம்மையி தழ்க்குமு தங்கட் குவளைச் செழுமலர்கள்*
*கொம்மை முகத்தாட் கமலம் விளங்குங் கொடிகள்குளிர்*
*விம்மு சமனீர் நிலைசேர்ந் தளற்றின் மிகவழுந்தி*
*வெம்மை யகலப் படருற்றெந் நாளும் விலகலின்றே. 46*

(ப—ரை) 1. செம்மையிதழ்க் குமுதம்—சிவந்த இதழ்களையுடைய குமுதமும், கள்குவளைச் செழுமலர்கள்—தேனையுடைய குவளையாகிய செழுமையான பூக்களும், கொம்மை முகம் தாள் கமலம் – அழகிய முகத்தையும், தண்டையும் உடைய தாமரையும், விளங்கும் கொடிகள்—விளங்குகின்ற கொடிகள், குளிர்விம்மு சமன்நீர்நிலை சேர்ந்து—குளிர் மிகுந்ததும் சமநிலைப்படுவதுமான நீர்நிலையைப் பொருந்தி, அளற்றின் மிக அழுந்தி—சேற்றில் மிக அழுந்தி, வெம்மைஅகலப் படர் உற்று—வெப்பம் மிகத் துன்பத்தை அடைந்து, எந்நாளும் விலகல் இன்றே—எந்நாளும் அச்சேற்றை விட்டு விலகுதல் இல்லை.

(பொ—ரை) 1. சிவந்த இதழ்களையுடைய குமுதமும், தேனையுடைய குவளையாகிய செழுமையான பூக்களும், அழகிய முகத்தையும், தண்டையுமுடைய தாமரையும், விளங்குகின்ற கொடிகள் குளிர் மிகுந்ததும் சமநிலைப்படுவதுமான நீர்நிலையைப் பொருந்தி சேற்றில் மிகவும் அழுந்தி வெப்பம் மிகத் துன்பத்தை அடைந்து அச்சேற்றை விட்டு எந்நாளும் விலகுதல் இல்லை.

(ப—ரை) 2. செம்மை இதழ்க் குமுதம்—சிவந்த இதழ் களாகிய உதடுகளையுடைய குமுதம் போன்ற வாயும், குவளை செழுமலர்கண் – குவளைப் பூவைப் போன்ற கண்களும், கமலம் கொம்மை முகம் தாள் – தாமரைப் பூவைப் போன்ற தனமும், முகமும், அடிகளும், விளங்கும் கொடிகள்-விளங்கு கின்ற பூங்கொடி போன்ற பெண்களுடைய, குளிர்விம்மு— குளிர்மிக்க, சமன்சேர்நிலை சேர்ந்து—நடுவிலுள்ள குய்யத்தை அடைந்து, அளற்றில் மிக அழுந்தி—அச்சேற்றில் மிகவும் அழுந்தினவர், வெம்மை அகல—விருப்பம் மிக அல்லது வெப் பம் நீங்கச் சன்னி நோய் கண்டு, படர்உற்று—துன்பமுற்று, எந்நாளும் விலகல் இன்றே – எந்நாளும் அந்தத் துன்பத் திலிருந்து விலகுதல் இல்லை.

(பொ—ரை) 2. சிவந்த இதழ்களாகிய உதடுகளையுடைய குமுதம் போன்ற வாயும், குவளைப் பூவைப் போன்ற கண் களும், தாமரைப் பூவைப் போன்ற தனமும், முகமும், அடி களும் விளங்குகின்ற பூங்கொடி போன்ற பெண்களுடைய குளிர்மிக்க நடுவிலுள்ள குய்யத்தை அடைந்து அச்சேற்றில் மிகவும் அழுந்தினவர் விருப்பம் மிக அல்லது வெப்பம் நீங்கச் சன்னி நோய் கண்டு துன்பமுற்று எந்நாளும் அந்தத் துன்பத் திலிருந்து விலகுதல் இல்லை.

அருஞ்சொற்பொருள் : கொம்மை – அழகு, தனம்; தாள்—தண்டு, அடி; அளறு—சேறு; வெம்மை—விருப்பம், வெப்பம்; அகல—நீங்க, மிக; படர்—துன்பம்; விம்மு—மிகு.

(இ—பு) குமுதம்—குமுதம் போன்ற வாய்க்கு உவமை ஆகுபெயர். கொடிகள்—கொடிகளைப்போன்ற பெண்களுக்கு உவமை ஆகுபெயர்.

இதுவும் நேரசையை முதலிற்கொண்ட கட்டளைக் கலித்துறை.

*அறுகும் பசுந்தட்டை வைக்கோ லும் பிண்ணுக் கதுசலத்தை*
*மறுகுந் தவிடும் தழைக ளொடுங்காடி மற்றையவு*
*மிறுகும் விருப்புற்றுட் கொண்டிரு கான்மா டெருமைகளு*
*நிறுவும் பருங்கன் றுடன்மிகும் பாலையு நேர்வதெண்ணே.*
**47**

(ப—ரை) 1. அறுகும்—அறுகம்புல்லும், பசுந்தட்டை—பசுந்தாளும், வைக்கோலும், பிண்ணுக்கும், அதுசலத்தை மறுகுந் தவிடும்—அப்பிண்ணுக்குடன் நீர்விட்டுப் பிசைந்த தவிடும், தழைகளொடும்—தழைகளோடும், காடியும் மற்றையவும்—புளித்த நீரும் பிறவும், இறுகும் விருப்புற்று உட்கொண்டு-மிக்க விருப்பங்கொண்டு உட்கொண்டு, இருகான்-பெரிய காட்டில், மாடு, எருமைகளும்—மேயவிட்ட மாடுகளும், எருமைகளும், நிறுவும் பருங்கன்றுடன்—நிலைக்கும் பெரிய கன்றோடு, மிகும் பாலையும்—மிகுதியான பாலையும், நேர்வது எண்ணே—தருவதை ஆராய்வாயாக.

(பொ—ரை) 1. அறுகம்புல்லும், பசுந்தாளும், வைக்கோலும், பிண்ணுக்கும், அப்பிண்ணுக்குடன் நீர்விட்டுப் பிசைந்த தவிடும், தழைகளும், புளித்த நீரும் பிறவும் மிக்க விருப்பங்கொண்டு உட்கொண்டு, பெரிய காட்டில் மேயவிட்ட மாடுகளும், எருமைகளும் நிலைக்கும் பெரிய கன்றோடு மிகுதியான பாலையும் தருவதை ஆராய்வாயாக.

(ப—ரை) 2. அறுகும்-யானையின் மருப்பைப் போன்ற தனங்களையும், பசுந்தட்டையும்—பசிய மூங்கிலைப் போன்ற தோள்களையும், வைக்கோலும்-கூர்மை பொருந்திய அம்பு போன்ற கண்களையும், பின்நாகது சலத்தை—பிளவுபட்ட நாவையுடைய பாம்பின் படத்தைப் போன்ற வெடிப்பிலிருந்து வழியும் நீரையுடைய அல்குலையும், மறு—மறுவோடு கூடிய மதியைப் போன்ற முகத்தையும், குந்தம்விடும் தழைகளொடும்—குந்தத்தைப் போன்ற கூரிய மயிற்பீலியின் அடிப்பாகத்தை ஒத்த பற்களையும், காடி-மணநெய்யையும், மற்றை

யவும்-பிறவற்றையும், இறுகும் விருப்புற்று-மிகவும் விரும்பி ஒழுகுவதால், இருகால் மாடுகள்-இரண்டு கால்களையுடைய மாடுகள் எனவும், எருமைகள்-எருமைகள் எனவும் கூறும் வசையை, நிறுவும் பருங்கன்றுடன்-நிலைநிறுத்தும் பெரிய சினத்துடன், மிகும் பாலையும்-வளரும் பகைமையையும், நேர்வது எண்ணே-அது உண்டாக்குவதை எண்ணுவாயாக.

(பொ—ரை) 2. யானையின் மருப்பைப் போன்ற தனங்களையும், பசிய மூங்கிலைப் போன்ற தோள்களையும், கூர்மை பொருந்திய அம்பு போன்ற கண்களையும், பிளவுபட்ட நாவை யுடைய பாம்பின் படத்தைப் போன்ற வெடிப்பிலிருந்து வழியும் நீரையுடைய அல்குலையும், மறுவோடு கூடிய மதியைப் போன்ற முகத்தையும், குந்தத்தைப்போற் கூரிய மயிற்பீலியின் அடிப்பாகத்தை ஒத்த பற்களையும், மண நெய்யையும், பிறவற்றையும் மிகவும் விரும்பி ஒழுகுவதால் இரண்டு கால்களையுடைய மாடுகள் எனவும், எருமைகள் எனவும் கூறும் வசையை நிலைநிறுத்தும் பெரிய சினத்துடன் பெரிய பகைமையையும் அது உண்டாக்குவதை எண்ணு வாயாக.

அருஞ்சொற்பொருள் : அறுகு- அறுகம்புல், யானை; பசுந்தட்டை-பசுமையான தாள், பசிய மூங்கில்; வைக்கோல்-வைக்கோல், கூர்மையான அம்பு; பிண்ணுக்கு-பிண்ணுக்கு, பிளவுபட்ட நாக்கு; பிண்ணுக்கது-பிண்ணுக்கு அது, பிள் + நா + கது; கது-வெடிப்பு; சலம்-நீர், புண்ணீர்; மறுகும் தவிடும்-பிசையும் தவிடும், மறு + குந்தம் + விடும்; மறு-கறை; குந்தம்-ஓர் ஆயுதம்; தழைகள்-தழைகள், மயிற்பீலி கள்; காடி-புளித்த நீர், நெய்; இறுகும்-அழுத்தும்; கன்று-கனன்றல், சினத்தல்; பால்-பகல், பகை.

(இ—பு) அறுகு-யானை இங்கு முதலாகு பெயராய் யானையின் மருப்புக்கு ஆகிப் பிறகு உவமை ஆகுபெயராய்த் தனங்களுக்கு ஆயிற்று. தட்டை-மூங்கில் போன்ற தோள்

களுக்கு ஆயிற்று, உவமைஆகுபெயர். கோல்—அம்புபோன்ற கண்களுக்கு உவமை ஆகுபெயர். மறு—மறுவையுடைய மதிக்குத் தானியாகு பெயராகிப் பின் மதியைப் போன்ற முகத்துக்கு உவமைஆகுபெயராயிற்று. தழைகள்—மயிற்பீலி கள், முதலாகுபெயராய் அவற்றின் கூரிய அடிப்பாகத்தைக் குறித்தும் பிறகு உவமைஆகுபெயராய்ப் பற்களைக் குறித்தது. கன்று—கனன்று, கனன்றல் இடைக்குறை. பால்—தொழிற் பெயர். பகு—முதனிலை. பகு—பகல், பால்.

இது நிரையசையை முதலாகக்கொண்டு வந்த கட்டளைக் கலித்துறை.

*ஏத்திய பண்டித வாய்மைநல் லார்தம் மிடைக்கந்தக*
*மாத்திரை கொண்டு நடுக்கல் வியாதியு மாய்ந்தொழியக்*
*காத்திரத் துற்ற வலிகளெல் லாம்போய்க் கலாமதிபோ*
*லாய்த்தரைக் கண்ணே துளங்குவர் நூலறி வாளருமே.*
***48***

(ப—ரை) 1. நூலறிவாளர்-நூல்களைக் கற்ற அறிவாளர் கள், ஏத்திய—புகழ்பெற்ற, பண்டித வாய்மை நல்லார் தம் இடை—மருத்துவத் துறையில் வல்ல உண்மையான நல்ல மருத்துவரிடம், கந்தக மாத்திரை கொண்டு—கந்தக மாத்திரை யை வாங்கி உட்கொண்டு, நடுக்கல் வியாதியும் மாய்ந்து ஒழிய—குளிர் காய்ச்சல் நோயும் தணிந்து நீங்க, காத்திரத்து உற்ற வலிகள் எல்லாம் போய்—உடம்பில் தோன்றிய வலிகள் எல்லாம் நீங்கி, கலாமதிபோல்ஆய்—முழுமதியைப்போல ஒளி பெற்று, தரைக்கண்ணே துளங்குவர்—உலகில் விளங்குவர்.

(பொ—ரை) 1. நூல்களைக் கற்ற அறிவாளர்கள் புகழ் பெற்ற மருத்துவத் துறையில் வல்ல உண்மையான நல்ல மருத்துவரிடம் கந்தக மாத்திரையை வாங்கி உட்கொண்டு, குளிர் காய்ச்சல் நோயும் தணிந்து நீங்கி, உடம்பில் தோன்றிய

வலிகள் எல்லாம் நீங்க, முழுமதியைப்போல ஒளிபெற்று உலகில் விளங்குவர்.

(ப—ரை) 2. நூலறிவாளர் ஏத்திய—நூலறிவுள்ளவர்கள் பாராட்டிய, இதம் வாய்மை பண்டு நல்லார் தம் அகம் இடை—நன்மையும் வாய்மையும் முன்னர் பொருந்திய பெண்களின் மார்பிடத்தையே, கந்துஆக—பற்றுக்கோடாகக் (கொண்டதால்), திரைகொண்டு—இளமையிலேயே தோலில் சுருக்கம் விழுந்து கிழத்தன்மை உண்டாகி, நடுக்கல்வி ஆதியும்—நிலைத்த கல்வி அறிவு முதலியவைகளும், மாய்ந்து ஒழிய—கெட்டு ஒழிய, காத்திரத்து உற்ற வலிகள் எல்லாம் போய்—உடம்பில் பொருந்திய ஆற்றல் எல்லாம் போய், க(ல்)லாமதிபோல்ஆய்—கல்லாத அறிவினரைப்போல் ஆகி, தரைக்கண்ணே துளங்குவர்—உலகில் துன்புறுவர்.

(பொ—ரை) 2. நூலறிவுள்ளவர் பாராட்டிய நன்மையும் வாய்மையும் முன்னர் பொருந்திய பெண்களின் மார்பிடத்தையே பற்றுக்கோடாகக் கொண்டதால் இளமையிலேயே தோலிற் சுருக்கம் விழுந்து கிழத்தன்மை உண்டாகி, நிலைத்த கல்வியறிவு முதலியவைகளும் கெட்டு ஒழிய, உடம்பில் பொருந்திய ஆற்றல் எல்லாம் போய், கல்லாத அறிவினரைப் போல் ஆகி உலகில் துன்புறுவர்.

அருஞ்சொற்பொருள்: ஏத்திய—பாராட்டிய; பண்டிதம்—மருத்துவம்; நடுக்கல் வியாதி—குளிர்காய்ச்சல்; காத்திரம்—உடல், கலாமதி—எல்லாக் கலைகளையும் உடைய முழுமதி, கல்லாமதி-கல்லாத அறிவு; கந்து-பற்றுக்கோடு; அகம்-ஆகம், மார்பு; திரை—தோற் சுருக்கம்; வலி—ஆற்றல்; துளங்குவர்—துன்புறுவர், விளங்குவர்; பண்டு—முன்னர்.

(இ—பு) கலாமதி—கலையையுடைய மதி இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை. கலா மதி என்ற தொடரில் கலா—கல்லாத, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். இடை குறைந்து வந்தது.

இது நேரசை முதலில் வந்த கட்டளைக் கலித்துறை.

*அரந்தை யகல வுலகை வெறுத்துநல் லாரையுற்ருேன்*
*பொருந்தய னேக்கா முகனுய்க் கவிகள் புகழமெய்யாய்ப்*
*பிருங்கி முனிபோ னடந்துகல் லாலமர் பேரருளோ*
*னிருந்துள பார்வை வழிசெல்ல வீட்டினே யெய்துவனே.*
**49**

(ப—ரை) 1. அரந்தை அகல—துன்பம் நீங்க, உலகை வெறுத்து-உலக போகத்தை வெறுத்து, நல்லாரை உற்ருேன்-நல்லவரை அடைந்தோன், பொருந்த அயல்நோக்கா முகனுய்-மனம்பொருந்திப் பிறரைப் பார்க்காத முகத்தன் ஆகி, கவிகள் புகழ மெய்யாய்—புலவர் புகழுதற்குரிய உண்மையுடைய வனுகி, பிருங்கி முனிபோல் நடந்து—பிருங்கி முனிவரைப் போல ஒழுகி, கல் ஆல் அமர் பேர் அருளோன்—கல் ஆலமரத் தின் நிழலில் அமர்ந்திருந்து பெரிய அருளேப் புரிவோனுகிய சிவபெருமான், இருந்து உள பார்வை வழிசெல்ல—வீற்றிருந்து காட்டும் அருட்பார்வையின் வழி ஒழுக, வீட்டினே எய்து வன்—முத்தியை அடைவான்.

(பொ—ரை) 1. துன்பம் நீங்க உலக போகத்தை வெறுத்து நல்லவரை அடைந்தோன், மனம் பொருந்திப் பிறரைப் பார்க்காத முகத்தன் ஆகி, புலவர் புகழுதற்குரிய உண்மையுடையவனுகி, பிருங்கி முனிவரைப்போல் ஒழுகி, கல்லால மரத்தின் நிழலில் அமர்ந்திருந்து பெரிய அருளேப் புரிவோனுகிய சிவபெருமான் வீற்றிருந்து காட்டும் அருட் பார்வையின் வழி ஒழுகி முத்தியை அடைவான்.

(ப—ரை) 2. அரத்தை அகல—துன்பம் வளர, உலகை வெறுத்து—உயர்ந்தோரை வெறுத்து, நல்லாரை உற்ருேன்—பெண்களே அடைந்தோன், பொருந்து அயன்நோக் காமுக னுய்—படைத்தற்குப் பொருந்திய பிரமதேவனும் நோகவல்ல காம வேட்கையன் ஆகி, கவிகள் புகழ மெய்யாய்—குரங்கு களும் புகழ்பெறுமாறு வந்த கூன் உடம்பினனுய், பிருங்கி முனிபோல் நடந்து—வண்டு தேனேயுண்ணப் பற்பல பூக்களே

நாடுவதுபோலப் பற்பல பூவையரை நாடி, கல் ஆல் அமர் பேர் அருளோன்—கல்லால மரத்தின்கீழ் அமர்ந்த பேர் அருளை உடைய தென்முகக் கடவுளின், பார்வை இருந்து உள வழிச் செல்ல—பார்வை இருந்துவருகின்ற தென்திசை வழியாக எம புரம் செல்ல, ஈட்டினை எய்துவன்—நையப் புடைத்தலைப் பெறுவான். ஏ—ஈற்றசை.

(பொ—ரை) 2. துன்பம் வளர, உயர்ந்தோரை வெறுத்துப் பெண்களை அடைந்தோன், படைத்தற்குப் பொருந்திய பிரம னும் நோகவல்ல காம வேட்கையன் ஆகி, குரங்குகளும் புகழ்பெறுமாறு வளைந்த கூன் உடம்பினனாய் வண்டு தேனை யுண்ணப் பற்பல பூக்களை நாடுவது போலப் பற்பல பூவை யரை நாடி கல்லால மரத்தின்கீழ் அமர்ந்த பேர் அருளையுடைய தென்முகக் கடவுளின் பார்வை இருந்துவருகின்ற தென்திசை வழியாக எமபுரம் செல்ல நையப் புடைத்தலைப் பெறுவான்.

அருஞ்சொற்பொருள்: அரந்தை-துன்பம்; அகல-நீங்க, வளர; உலகு—உலகபோகம்; கவிகள்-புலவர்கள், குரங்குகள்; நடந்து-ஒழுகி; வீடு—முத்தி; நோ—நோவும்; காமுகன்—காம வேட்கையன்; பிருங்கிமுனி—வண்டு; ஈடு—கடுமையான அடி, நையப் புடைத்தல்; அயன்—பிரமன்.

(இ—பு) அயல்—அயலார், ஆகுபெயர். நோக்கா—நோக் காத, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். மெய்—மெய் யன், பண்பாகுபெயர். அயனேக்கா முகன்—அயல்நோக்கா முகன் எனவும், அயன் நோ காமுகன் எனவும் பிரிந்து சிலேடைப் பொருள் பயக்கும். அயன் நோக்கா முகன்— இவனைப் படைத்தது பற்றிப் பிரமனும் நோதலை உறும் காமுகன், இரண்டாம் உருபும் பயனும் உடன் தொக்க தொகை.

இது நிரையசையை முதலாகக் கொண்ட கட்டளைக் கலித்துறை.

*வான்மதி முத்தந் தனக்குவந் தளிக்க வணங்கிய முகிலினைக் கரத்தாற்*
*றுன்மிகத் தடவி வரைகளைக் குழையத் தழுவியே யாளியைப் பிடியால்*
*மேன்மையுற் றடக்கி யானையின் றுதிக்கை வெவ்வராப் படத்தினைத் தனிக்கொண்*
*மான்மனத் தினர்மெய்ச் சூடிலா ராகி வளைத்தவெவ் வழலினுங் குளிப்பார்.*
**50**

(ப—ரை) 1. வான்மதி முத்தம் தனக்கு உவந்து அளிக்க- வானத்திலுள்ள சந்திரன் தனக்கு மகிழ்ச்சியுடன் முத்தம் தர, வணங்கிய முகிலினை-தனக்கு வணக்கம் செலுத்திய மேகத்தை கரத்தால்தான் மிகத் தடவி-கையால்தான் மிகவும் தடவிக் கொடுத்து, வரைகளை குழையத் தழுவியே-மலைகளைக் குழையு மாறு தழுவி, யாளியைப் பிடியால் அடக்கி மேன்மையுற்று- யாளியைப் பெண் யானையால் அடக்கி மேன்மைகொண்டு, யானையின் துதிக்கை வெவ்வராப் படத்தினைத் தனிக்கொள்- யானையின் தும்பிக்கையையும் கொடிய பாம்பின் படத்தையும் தனியே கொள்ளும். மால்மனத்தினர்—பித்துற்ற மனத்தினர், மெய்ச் சூடிலாராகி-உடம்பில் சூடு உறைக்காதவர் ஆகி, வளைத்த வெவ்வழலினுங் குளிப்பார்-தம்மை வளைத்த கொடிய நெருப்பிலும் குளிப்பார்கள்.

(பொ—ரை) 1. வானத்திலுள்ள சந்திரன் தனக்கு மகிழ்ச்சியுடன் முத்தம் தர, தனக்கு வணக்கம் செலுத்திய மேகத்தைக் கையால்தான் மிகவும் தடவிக்கொடுத்து, மலை களைக் குழையுமாறு தழுவி, யாளியைப் பெண் யானையால் அடக்கி மேன்மைகொண்டு, யானையின் தும்பிக்கையையும், கொடிய பாம்பின் படத்தையும் தனியே கொள்ளும் பித்துற்ற மனத்தினர் உடம்பில் சூடு உறைக்காதவர் ஆகித் தம்மை வளைத்த கொடிய நெருப்பிலும் குளிப்பார்கள்.

(ப—ரை) 2. வான்மதி—வானத்திலுள்ள மதிபோன்ற முகத்தாள், தனக்குஉவந்து முத்தம்அளிக்க—தனக்கு மகிழ்ச்சியோடும் முத்தம் கொடுக்க, வணங்கிய முகிலினை—வணங்கிய மேகத்தைப்போன்ற கூந்தலையுடைய தலையை, கரத்தால்தான் மிகத் தடவி—கையால்தான் மிகவும் தடவி, வரைகளைக் குழையத் தழுவி—மலைபோன்ற தனங்களைக் குழையுமாறு தழுவி, ஏ ஆளியை—கண்ணாகிய அம்பால் ஆளுபவளை, பிடியால் அடக்கி மேன்மையுற்று—தன் கைப்பிடியால் அடக்கி மேல் நிலையுற்று, யானையின் துதிக்கை—யானையின் தும்பிக்கையைப் போன்ற தொடைகளிடையேயுள்ள, வெவ்வராப் படத்தினை—கொடிய அரவின் படத்தைப் போன்ற நிதம்பத்தைத், தனிக்கொள் மால் மனத்தினர்—ஒன்றாகிக் கொள்ளும் மயக்க மனத்தினர், மெய்ச்சூடு இலார் ஆகி—மெய்யான உணர்வு இலராகி, வளைத்த வெவ்வழலினுங் குளிப்பர்—தம்மை வளைத்துக்கொள்ளும் கொடிய நரகத் தீயிலும் முழுகுவர்.

(பொ—ரை) 2. வானத்திலுள்ள மதிபோன்ற முகத்தாள் தனக்கு மகிழ்ச்சியோடும் முத்தம் கொடுக்க, வணங்கிய மேகத்தைப் போன்ற கூந்தலையுடைய தலையைக் கையால் தான் மிகவும் தடவி, மலைபோன்ற தனங்களைக் குழையுமாறு தழுவிக் கண்ணாகிய அம்பால் ஆளுபவளைத் தன் கைப்பிடியால் அடக்கி மேல் நிலையுற்று, யானையின் தும்பிக்கையைப் போன்ற தொடைகளிடையேயுள்ள கொடிய அரவின் படத்தைப் போன்ற நிதம்பத்தை ஒன்றாகிக் கொள்ளும் மயக்க மனத்தினர் மெய்யான உணர்வு இலர் ஆகித் தம்மை வளைத்துக் கொள்ளும் கொடிய நரகத் தீயிலும் முழுகுவர்.

அருஞ்சொற்பொருள்: மதி-சந்திரன், சந்திரனைப்போன்ற முகம்; முகில்—மேகம், மேகத்தைப்போல் கரிய கூந்தல்; வரை-மலை, மலைபோன்ற தனம்; ஏ-அம்பு; யாளி-சிங்கத்தைப் போன்ற உடம்போடு முகத்தில் யானையின் தும்பிக்கையைப் போன்ற நீண்ட தும்பிக்கையும் உடையது, அது சிங்கத்தையும் யானையையும் கூடக் கொல்லவல்ல ஆற்றல்உடையது

ஆளி—ஆளுபவள்; பிடி—பெண் யானை, கைப்பிடி; அரவின் படம்—பாம்புப்படம், பாம்பின் படத்தைப் போன்ற நிதம்பம்; மெய்ச்சூடு—உண்மை உணர்வு; அழல்—தீ, தீநரகு.

(இ—பு) மதி, முகில், வரை, தும்பிக்கை, படம் ஆகியவை உவமையாகுபெயராய் முறையே முகத்தையும், கூந்தலையும், தனத்தையும், தொடையையும், நிதம்பத்தையும் குறித்தன.

இது எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*சிறிய விடைச்சி பெருங்குயத்தி செங்கண் வலச்சி கரும்பறைச்சி*
*வறிய வேளா ளச்சியுள மறத்தி துப்பா ரொட்டச்சி*
*தெறிகாற் றூத வேடச்சி தீய கடிப்பள் ளத்தியெனு*
*நெறிதீர் பேதை தொடக் குண்பார் நேரார் ஒருதன் சாதியையே.*
51

(ப—ரை) 1. சிறியஇடைச்சி-சிறிய இடைச்சி, பெருங் குயத்தி—பெரிய குயத்தி, செங்கண்வலச்சி—சிவந்த கண்ணை யுடைய வலைச்சி, கரும்பறைச்சி—கரிய பறைச்சி, வறிய வேளாளச்சி—வறுமைப்பட்ட வேளாளச்சி, உளமறத்தி— உள்ளமறத்தி, துப்பார் ஒட்டச்சி—வலிமைமிக்க ஒட்டச்சி, தெறிகால்தூத வேடச்சி – அலைந்து திரியும் காலையுடைய ஒற்றறியும் வேடச்சி, தீய கடிப்பள்ளத்தி—இனிய ஓசையைச் செய்யும் பள்ளத்தி, எனும் பேதை—என்னும்படியான பெண் ணோடு கொள்ளும், நெறிதீர் தொடக்கு உண்பார்—நெறியல் லாத தொடர்பைக் கொண்டவர்கள், தம் ஒருசாதியை நேரார்— தம்முடைய ஒரு சாதியினரை நேசிக்கார்.

(பொ—ரை) 1. சிறிய இடைச்சி, பெரிய குயத்தி, சிவந்த கண்ணையுடைய வலைச்சி, கரிய பறைச்சி, வறுமைப் பட்ட வேளாளச்சி, உள்ளமறத்தி, வலிமைமிக்க ஒட்டச்சி,

அலைந்து திரியும் காலையுடைய ஒற்றறியும் வேடச்சி, இனிய ஓசையைச் செய்யும் பள்ளத்தி என்னும்படியான பெண்ணோடு கொள்ளும் நெறியல்லாத தொடர்பைக் கொண்டவர்கள், தம்முடைய ஒரு சாதியினரை நேசிக்கார்.

(ப—ரை) 2. சிறிய இடைச்சி—சிறிய இடையையுடையவளும், பெருங்குயத்தி—பெரிய தனத்தையுடையவளும், செங்கண் வலைச்சி—சிவந்த கண்ணாகிய வலையை உடையவளும், கரும்பு அறைச்சி—கரும்புபோல் இனிய சொல்லைப் பேசுபவளும், வறிய வேளாளச்சி—சிறிதும் உதவுதல் அற்றவளும், உளம்மறத்தி—உள்ளத்தில் கொடுமையையுடையவளும், துப்பார் ஒட்டச்சி—வன்மையாகச் சூளுரைப்பவளும், தெறிகால் தூத வேடச்சி—அழிக்கும் காலனுக்குத் தூதாக இனிய வேடந் தாங்குபவளும், தீய கடிப்பள்ளத்தி—தீய கடிதடமாகிய படுகுழியையுடையவளும், எனும்-என்று கூறும்படியான, நெறிதீர் பேதை—நல்ல நெறியினின்று விலகிய பேதை ஆகிய பெண்ணின், தொடக்கு உண்பார்—சூதக வாயைத் துய்ப்பார், தம் ஒரு சாதியை நேரார்—தம்முடைய ஒரே சாதியை மட்டும் நேசியார்.

(பொ—ரை) 2. சிறிய இடையையுடையவளும், பெரிய தனத்தையுடையவளும், சிவந்த கண்ணாகிய வலையையுடையவளும், கரும்புபோல் இனியசொல்லைப் பேசுபவளும், சிறிதும் உதவுதல் அற்றவளும், உள்ளத்தில் கொடுமையையுடையவளும், வன்மையாகச் சூளுரைப்பவளும், அழிக்கும் காலனுக்குத் தூதாக இனிய வேடந் தாங்குபவளும், தீய கடிதடமாகிய படுகுழியையுடையவளும் என்று கூறும்படியான, நல்ல நெறியினின்று விலகிய பேதையாகிய பெண்ணின் சூதக வாயைத் துய்ப்பவர் தம்முடைய ஒரே சாதியை மட்டும் நேசியார்.

அருஞ்சொற்பொருள் : குயம்—தனம்; அறை—சொல்; வேள்—உதவி; மறம்—கொடுமை; ஒட்டம்—சூள்; தெறி—அழி;

கால்–காலன்; கடி–கடிதடம்; தொடக்கு–சூதகவாய்; நேரார்–நேசியார்.

(இ—பு) இப்பாட்டில் இரண்டாவது பொருளில் இடைச்சி, குயத்தி, வலைச்சி, பறைச்சி, வேளாளச்சி, மறத்தி, ஒட்டச்சி, வேடச்சி, பள்ளத்தி ஆகிய ஒன்பது சாதிப் பெண்ணின் பெயர்கள் தொனிப் பொருளில் வந்துள.

இது அறுசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*கரும ணற்பெருமை செந்த ழற்கணிரு கந்து*
*கத்திறமை மைந்தர் தம்*
*மிருகை பெற்றுள விடத்து முற்றுமதி யெழில்வி*
*ழுக்கதிரெ ழாமுனம்*
*விரவு றும்பவள முத்த வாய்மையைவி ளக்கி*
*லாவழிய ளக்கலா*
*மரவி ஞேர்தகைமை தீண்டல் வேளையறி வார்*
*பயந்தசெய லானுமே.*

**52**

(ப—ரை) 1. கரும் அணல்-பெரிய கரிய படமும், செந்தழற்கண்–செந்நெருப்புப் போன்ற கண்களும், இருகந்துஉகு அத்திறமையும்–பெரிய யானையையும் வீழ்த்தவல்ல அந்த ஆற்றல்மிக்க விடமும், மைந்தர் தம் இருகைபெற்று-வலியவர் தம் இருகைகளில் அகப்பட்டும், உளவிடத்தும்–விடம் பெற்றுள்ள தன்மையும் பெற்று, விழுக்கதிர்-மறைதலைப் பெற்ற சூரியன் எழுவதற்குமுன், மதி எழில் உற்று–சந்திரனுடைய அழகை வாங்கி, முத்து பவளம் விரவுறும்அம்வாய்–முத்துப் போன்ற பற்களுடன் பவளம்போன்ற செந்நிறம் பொருந்திய அழகிய வாயில், மையை விளக்கி-தன் விடத்தின் கருமையைப் புலப்படுத்தி, இலாவழி அளக்கல்ஆம்–உயிர் உடலில் இல்லாது பிரியும் காலத்தை அளந்து சொல்லுதற்கு ஆகும், அரவினேர் தகைமை – பட அரவின் ஒப்பற்ற தீமைத் தன்மையை,

தீண்டல் வேளை–அது தீண்டும் காலத்து, பயந்த செயலானும் அறிவார்–அது விளைவித்த செயலாலும் அறிவார்கள்.

(பொ—ரை) 1. பெரிய கரிய படமும், செங்நெருப்புப் போன்ற கண்களும், பெரிய யானையையும் வீழ்த்தவல்ல அந்த ஆற்றல்மிக்க விடமும், வலியவர் தம் இருகைகளில் அகப்பட்டும், விடம் பெற்றுள்ள தன்மையும் பெற்று, மறைதலைப் பெற்ற சூரியன் எழுவதற்குமுன் சந்திரனுடைய அழகை வாங்கி முத்துப் போன்ற பற்களுடன் பவளம் போன்ற செந்நிறம் பொருந்திய அழகிய வாயில் தன் விடத்தின் கருமையைப் புலப்படுத்தி, உயிர் உடலில் இல்லாது பிரியும் காலத்தை அளந்து சொல்லுவதற்கு ஆகும் பட அரவின் ஒப்பற்ற தீமைத் தன்மையை அந்த அரவு தீண்டும் காலத்து அது விளைவித்த செயலாலும் அறிவார்கள்.

(ப—ரை) 2. கருமணல் பெருமை–கருமணலாகிய அறலைப் போலக் கருத்து நீண்ட பெரிய கூந்தலும், செந்தழல் கண்–சிவந்த நெருப்பைப் போன்ற கண்களும், மைந்தர் தம் இருகைபெற்றுளவிடத்தும்-வலிய ஆடவர் தங்களின் இரண்டு கைகளுக்குள் அகப்பட்டவிடத்தும், இருதிறமை கந்துகம் உற்று–இரண்டு வலிய பந்துகள்போன்ற தனங்களும் பெற்று, விழுக்கதிர் எழாமுனம்–மறைதலைப்பெற்ற சூரியன் எழுவதற்குமுன், மதி எழில் உற்று–முகம் சந்திரனுடைய அழகைப் பெற்று, பவளம் விரவுறும் முத்துஅம்வாய்மையை–செம்மை நிறம் கலந்து முத்துப்போன்ற பற்களுடன் விளங்கும் அழகிய வாயின் தன்மையையும், விளக்கு இலா வழி அளக்கல் ஆம்–வெளிச்சம் இல்லாதவிடத்து அளப்பதற்கு ஆகும், அரவின் ஓர் தகைமையை–பட அரவின் ஒப்பற்ற தீமைத் தன்மையையும், தீண்டல்வேளை-தீண்டும்காலத்து, பயந்த செயலானும் அறிவார்–விளைவித்த செயலானும் அறிவார்கள்.

தீண்டல் வேளை பயந்த செயலானும் என்பதற்குத் தீட்டுக்காலத்துப் பயப்பட்ட செயலானும் என்றும் பொருள்

கொள்ளலாம். அரவினோர் என்பதற்குப் படத்தையுடைய பாம்பைப் போன்றவர் என்றலும் ஆம்.

(பொ—ரை) 2. கருமணலாகிய அறலைப்போலக் கருத்து நீண்ட பெரிய கூந்தலும், சிவந்த நெருப்பைப் போன்ற கண்களும், வலிய ஆடவர் தங்களின் இரண்டு கைகளுக்குள் அகப்பட்டவிடத்தும், இரண்டு வலிய பந்துகள் போன்ற தனங்களும் பெற்று, மறைதலைப்பெற்ற சூரியன் எழுவதற்குமுன் முகம் சந்திரனுடைய அழகைப்பெற்று செம்மைநிறம் கலந்து முத்துப் போன்ற பற்களுடன் விளங்கும் அழகிய வாயின் தன்மையையும், வெளிச்சம் இல்லாதவிடத்து அளப்பதற்கு ஆகும் படஅரவின் ஒப்பற்ற தீமைத் தன்மையையும் தீண்டும் காலத்து விளைவித்த செயலானும் அல்லது தீட்டுக் காலத்துப் பயப்பட்ட செயலானும் அறிவார்கள்.

அருஞ்சொற்பொருள்: கரும்அணல் – கரிய படம்; கருமணல்–அறல்; கந்துகம்–பந்து; கந்து–யானைகட்டும் தறி, ஆகுபெயரால் யானையைக் குறித்தது. முத்த-முத்துப்போன்ற பற்கள்; தீண்டல்–தீண்டுதல், தீட்டு; பயந்த–விளைவித்த, பயப்பட்ட.

(இ—பு) விழுக்கதிர்–விழுதலையுடைய சூரியன் இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை. கந்து–யானைகட்டும் தறி இங்கு யானைக்கு ஆகுபெயராயிற்று.

இது எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

*பஞ்சி யொத்துமெது வாய சைந்துநடை பன்னு*
*மன்னமென லாகும்வாய்*
*கிஞ்சு கத்துடன ருந்தி முக்கனிகள் கிள்ளை*
*யாமுருவு பைம்பொனேர்*
*மஞ்ச மைந்துமயி லாமி ருண்டுமலர் மன்னி*
*யோதியளி யாகுமிவ்*
*வஞ்சி மைந்தருயிர் தங்கள் பாசமுறு மாக*
*வர்ந்தியம ஞமரோ.*

*53*

(ப—ரை) 1. பஞ்சிஒத்து—பஞ்சு போன்று மென்மை வாய்ந்து, மெதுவாயசைந்து—மெதுவாக அசைந்து, நடை பன்னும் அன்னம் எனலாகும்—நடக்கும் நடையால் புகழும் அன்னம் எனலாகும், வாய் கிஞ்சுகத்துடன்—வாய் முள் முருக்கம் பூவைப்போல் சிவந்து, முக்கனிகள் அருந்தி—மூன்று வகைக் கனிகளாகிய மா, பலா, வாழைப் பழங்களை அருந்திய சுவையைப் பெற்றதாய்க், கிள்ளைஆம்—கிளிபோல் இனிய சொல்லைப் பேசுவதாகும், உருவு-உருவம், பைம்பொன்நேர்-பசும்பொன்னை ஒக்கும், மஞ்சுஅமைந்து மயிலாம்—அழகு பொருந்தி மயிலாகும், ஓதி—கூந்தல், இருண்டு மலர்மன்னி அளியாகும்-இருண்டு மலர்பொருந்தி வண்டுகள் படிவதாகும் இவ்வஞ்சி—இவ்வாறு ஒவ்வொன்றின் தன்மையைக் கவர்ந்து கொண்ட பெண், மைந்தருயிர்—ஆடவர் உயிரை, தங்கள்பாசம் உறுமாக—தங்களுடைய பாசம் என்னும் கயிறு பொருந்த, கவர்ந்து இயமன் ஆம்—கவர்ந்துகொண்டு இயமன் ஆவர், அரோ—அசை.

(பொ—ரை) 1. பஞ்சுபோன்று மென்மை வாய்ந்து, மெதுவாக அசைந்து நடக்கும் நடையால் புகழும் அன்னம் எனலாகும்; வாய் முள்முருக்கம் பூவைப்போல் சிவந்து மூன்றுவகைக் கனிகளாகிய மா, பலா, வாழைப் பழங்களை அருந்திய சுவையைப் பெற்றதாய்க், கிளிபோல் இனிய சொல்லைப் பேசுவதாகும். உருவம் பசும்பொன்னை ஒக்கும். அழகு பொருந்திய மயிலாகும். கூந்தல் இருண்டு மலர் பொருந்தி வண்டுகள் படிவதாகும். இவ்வாறு ஒவ்வொன்றின் தன்மையைக் கவர்ந்துகொண்ட பெண் ஆடவர் உயிரைத் தங்களுடைய பாசம் என்னும் கயிறு பொருந்தக் கவர்ந்து கொண்டு இயமன் ஆவர்.

(ப—ரை) 2. பஞ்சிஒத்து—கண் பஞ்சடைந்து, மெது வாய் அசைந்து—நாடி மெதுவாக நடந்து, நடைபன்னும் அன்னம் எனலாகும்—நடையால் புகழப்படும் அன்னம் என லாகும், வாய் கிஞ்சுகத்துடன் முக்கனிகள் அருந்தி—வாய்

பெருவருத்தத்துடன் முக்கனியின் சாறுகளை அருந்தி, கிள்ளை யாம்—கிள்ளும் இருமல் உடையதாகும், பைம்பொன் நேர் உருவு—பசிய பொன்னை ஒத்த உருவம், மஞ்சு அமைந்து—மேகம் படிந்து, இருண்டும் அயிலாம்—கறுத்துத் துன்புறுத்து வதாகும், அலர்மன்னி ஒதி அளியாகும்—பழி நிலைத்துக் கூறப் பட்டு இரங்கத்தக்கதாகும், இவ்வஞ்சி மைந்தர் உயிர்—இவ் வஞ்சி ஆடவர்களின் உயிரை, தங்கள் பாசம் உறுமா கவர்ந்து இயமன்ஆம்—தம்முடைய ஆசைக் கயிற்றால் அகப்படுத்திக் கவர்ந்து விடுவதால் எமன் ஆவாள்.

(பொ—ரை) 2. கண் பஞ்சடைந்து, நாடி மெதுவாக நடந்து நடையால் புகழப்படும் அன்னம் எனலாகும். வாய் பெரு வருத்தத்துடன் முக்கனியின் சாறுகளை அருந்திக் கிள்ளும் இருமல் உடையதாகும். பசிய பொன்னை ஒத்த உருவம் மேகம் படிந்து கறுத்துத் துன்புறுத்துவதாகும். பழி நிலைத்துக் கூறப்பட்டு இரங்கத்தக்கதாகும். இவ்வஞ்சி ஆடவர்களின் உயிரைத் தம்முடைய ஆசைக்கயிற்றால் அகப் படுத்திக் கவர்ந்து விடுவதால் எமன் ஆவாள்.

அருஞ்சொற்பொருள்: பஞ்சி—பஞ்சு; நடை—நடத்தல், துடிப்பு; பன்னும்—புகழப்படும்; கிஞ்சுகம்—முள்முருக்கம் பூ, சிறிய சுகம் எனவே பெருவருத்தம்; கிள்ளை—கிளி; கிள்ளும்—இருமல்; மஞ்சு—அழகு, மேகம்; ஓதி—கூந்தல், கூறி; வஞ்சி—வஞ்சிக்கொடி போன்றவள், வஞ்சிப்பவள்; பாசம்—கயிறு, ஆசை; உறுமா(க)—பொருந்த; உறுமா(று)—அகப்படுத்தி.

(இ—பு) உறுமா—உறும்ஆக என்பதன் கடைக்குறை. உறுமா(று)—உறும்ஆறு என்பதன் கடைக்குறை எனலும் ஆகும்.

இதுவும் எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*மேரு வரையிரண்டு மேவுற் றிடுமிசைந்து*
*பூரணம திக்குட் பொலிந்துபிறை—சாரு*
*மனந்தன்முடி மேல்வெளியென் றம்முழும கன்றான்*
*புனைந்திடுமெய்ம் மானியிவன் போன்ம்.* **54**

(ப—ரை) 1. மேருவரை இரண்டு மேவுற்றிடும்–மேரு மலை இரண்டு பொருந்தியிருக்கும், இசைந்து பூரண மதிக்குள் பொலிந்து பிறைசாரும்–விரும்பி முழுமதிக்குள் பொலிவோ டும் பிறை பொருந்தும், அனந்தன் முடி.மேல்–அனந்தன் என்னும் பாம்பின் முடிமீது, வெளிசாரும்–வெட்டவெளி பொருந்தும், என்ற அம்முழுமகன்–என்று கூறிய அந்த அறிவிலாதவன், தான்புனைந்திடுமெய்ம்மான்–தான் புனைந்து கூறும் உடம்பினை உடையவள், இவன்போன்ம்–இவனைப் போலவே பேதையாவாள்.

(பொ—ரை) 1. மேருமலை இரண்டு பொருந்தியிருக்கும். விரும்பி முழுமதிக்குள் பொலிவோடும் பிறை பொருந்தும், அனந்தன் என்னும் பாம்பின் முடிமீது வெட்டவெளி பொருந்தும் என்று கூறிய அந்த அறிவிலாதவன், தான் புனைந்து கூறும் உடம்பினை உடையவள் இவனைப் போலவே பேதையாவாள்.

(ப—ரை) 2. மேருவரையிரண்டு மேவுற்றிடும்–மேரு மலை போன்ற தனங்கள் இரண்டு பொருந்தியிருக்கும், பூரண மதிக்குள் இசைந்து–முழுமதி போன்ற முகத்தில் விரும்பி, பிறை பொலிந்து சாரும்–பிறைபோலும் நெற்றி விளக்கத் துடன் பொருந்தியிருக்கும், அனந்தன் முடிமேல்–அரவின் படத்தைப்போன்ற அல்குலின் உச்சிமீது, வெளிசாரும்–வான வெளிபோல் கண்ணுக்குப் புலப்படாத இடை பொருந்தும், என்ற அம்முழுமகன்—என்று கூறும் அந்தப் பேதை, தான் புனைந்திடும்–தான் புனைந்து கூறும், மெய்ம்மானி இவன் போன்ம் – உடம்பின் தன்மையை உடையவள் இவனைப் போலவே பேதையாவாள்.

(பொ—ரை) 2. மேருமலை போன்ற தனங்கள் இரண்டு பொருந்தியிருக்கும், முழுமதி போன்ற முகத்தில் விரும்பிப் பிறைபோலும் நெற்றி விளக்கத்துடன் பொருந்தியிருக்கும், அரவின் படத்தைப்போன்ற அல்குலின் உச்சிமீது வானவெளி போல் கண்ணுக்குப் புலப்படாத இடைபொருந்தும் என்று கூறும் அந்தப் பேதை தான் புனைந்து கூறும் உடம்பின் தன்மையையுடையவள் இவனைப் போலவே பேதையாவாள்.

அருஞ்சொற்பொருள்: மேருவரை-மேருமலை, மேருமலை போன்ற தனங்கள்; அனந்தன்—ஆதிசேடன், அரவு போன்ற அல்குல்; வெளி—வெட்டவெளி, வெளிபோன்ற இடை; முழு மகன்—பேதை; மெய்மானி—உடம்பினை உடையவள்.

(இ—பு) வரை, மதி, பிறை, அனந்தன், வெளி ஆகியவை உவமையாகுபெயராய் முறையே தனங்கள், முகம், நெற்றி, அல்குல், இடை ஆகியவற்றைக் குறித்தன.

இது இருவிகற்பத்தான் வந்த நேரிசை வெண்பா.

*சாலவேள் செலுத்திடச் சரித்துத் தன்னுரு*
*நீலமென் னத்தக நிகழ்ந்து பச்சைமே*
*லேலுறப் பிணிமுக மெனவி ளங்கலான்*
*மாலியன் மடந்தையை மயிலென் பாரரோ.* **55**

(ப—ரை) 1. வேள்சாலச் செலுத்திடச் சரித்து-முருகன் பொருத்தமாக அமர்ந்து செலுத்தச் சுமந்து செல்லுதலாலும், தன்னுரு நீலம் என்னத்தக நிகழ்ந்து-தன்னுடைய நிறம் நீலம் என்று சொல்லுமாறு அமைந்திருத்தலானும், பச்சைமேல் ஏல் உற—புதரின்மேல் பொருத்தமாக அமர்ந்திருத்தலாலும், பிணிமுகம்என விளங்கலால்—கண்டவர் மனத்தைக் கவரும் முகத்தினையுடைய மயில் என விளங்குதலானும், மால்இயல் மடந்தையை—மயக்கும் இயல்பையுடைய அழகியதை, மயில் என்பார்—மயில்என்று கூறுவார்கள். அரோ—அசை.

(பொ—ரை) 1. முருகன் பொருத்தமாக அமர்ந்து செலுத்தச் சுமந்து செல்லுதலாலும், தன்னுடைய நிறம் நீலம் என்று சொல்லுமாறு அமைந்திருத்தலானும், புதரின்மேல் பொருத்தமாக அமர்ந்திருத்தலானும், கண்டவர் மனத்தைக் கவரும் முகத்தினையுடைய மயில் என விளங்குதலானும் மயக்கும் இயல்புடைய அழகியதை மயில் என்று கூறுவார்கள்.

(ப—ரை) 2. சாலவேள் செலுத்திடச் சரித்து–மிகுதியான விருப்பம் செலுத்த அதற்கேற்ப ஒழுகுதலானும், தன்னுரு நீலம் எனத்தக நிகழ்ந்து–தன் உருவம் இரத்தினம் என்று கூறுமாறு நடப்பதாலும், மேல் பச்சை ஏல் உற-உடம்பின் மேல் பச்சை ஏற்பப் பொருந்தலானும், பிணிமுகம் என விளங்கலால்–கண்டவர்களைப் பிணிக்கும் முகத்தைப் பெற்றிருத்தலானும், மால் இயல் மடந்தையை–மயக்கும் இயல்புடைய பெண்ணை, மயில் என்பார்-மயில் என்று கூறுவார்கள். அரோ–அசை.

(பொ—ரை) 2. மிகுதியான விருப்பம் செலுத்த அதற்கேற்ப ஒழுகுதலாலும், தன் உருவம் இரத்தினம் என்று கூறுமாறு நடப்பதாலும், உடம்பின்மேல் பச்சை பொருந்தலாலும் கண்டவர்களைப் பிணிக்கும் முகத்தைப் பெற்றிருத்தலாலும், மயக்கும் இயல்புடைய பெண்ணை மயில் என்று கூறுவார்கள்.

அருஞ்சொற்பொருள்: வேள்–முருகன்; பச்சை–புதர்; பிணிமுகம்–மயில்; நீலம்–இரத்தினம்; பிணிமுகம்–பிணிக்கும் முகம்; மால்இயல்–மயக்கும் இயல்பு; சரித்து–நடந்து, ஒழுகி; ஏல்உறப்–ஏற்பப் பொருந்தலாலும்.

(இ—பு) பிணிமுகம்–பிணிக்கும் முகம் வினைத்தொகை·

இது கலிவிருத்தம்.

மேகம் வாரிதி வெற்புவிண் டோற்றுவ
தாக மைந்த ரமர்ந்துழந் துற்றுமாய்ந்
தேக லாலணங் கேயுல கென்பரிம்
மோக நீக்கின் முனிவர ராவரே. **56**

(ப—ரை) 1. மேகம்-மேகமும், வாரிதி-கடலும், வெற்பு-மலையும், விண்—ஆகாயமும் ஆகியவை, தோற்றுவதாக—தோன்றுவதாக, மைந்தர்—இளைஞர், அவற்றுள், மேகம் அமர்ந்து—மேகத்தில் அமர்ந்து, கடல் உழந்து—கடலில்விழுந்து வருந்தி, மலைஉற்று—மலையை அடைந்து, மாய்ந்து—மடிந்து, விண் ஏகலால்—விண்ணுலகம் செல்லுதலால், அணங்கே—பெண்ணே, உலகு என்பர்—அவற்றின் தொகுப்பை உலகு என்று கூறுவார்கள். இம்மோகம் நீக்கின்—இந்த மோகத்தை நீக்கினால், மைந்தர் முனிவரர் ஆவர்—இளைஞர்கள் முனிவர்கள் ஆவார்கள்.

(பொ—ரை) 1. மேகமும், கடலும், மலையும், ஆகாய மும் ஆகியவை தோன்றுவதாக இளைஞர் அவற்றுள் மேகத் தில் அமர்ந்து கடலில் விழுந்து வருந்தி, மலையை அடைந்து மடிந்து விண்ணுலகம் செல்லுதலால் பெண்ணே அவற்றின் தொகுப்பை உலகு என்று கூறுவார்கள். இந்த மோகத்தை நீக்கினால் இளைஞர்கள் முனிவர்கள் ஆவார்கள்.

(ப—ரை) 2. மைந்தர்—குமரர், மேகம்—மேகம் போன்ற கூந்தல், தோன்றுவதாக—தோன்ற, அமர்ந்து—அதை விரும்பி யும், வாரிதி—கடல் போன்ற கண்களால், உழந்து—வருந்தியும், வெற்பு—மலைபோன்ற தனங்களை, உற்று மாய்ந்து—அடைந்து மடிந்தும், விண்ஏகலால்—விண்ணுலகம் செல்லுதலால், உலகு அணங்கே என்பர்-உலகு பெண்ணே என்பார்கள், இம்மோகம் நீக்கின்-இந்த மோகத்தை நீக்கினால், மைந்தர் முனிவரர் ஆவர்-அக்குமரர் முனிவர்கள் ஆவார்கள்.

(பொ—ரை) 2. குமரர், மேகம் போன்ற கூந்தல்தோன்ற அதை விரும்பியும், கடல்போன்ற கண்களால் வருந்தியும், மலைபோன்ற தனங்களை அடைந்து மடிந்தும் விண்ணுலகம் செல்லுதலால் உலகு பெண்ணை என்பார்கள். இந்த மோகத்தை நீக்கினுல் அக்குமரர் முனிவர்கள் ஆவார்கள்.

அருஞ்சொற்பொருள்: வாரிதி–கடல்; வெற்பு–மலை; அமர்ந்து–விரும்பி; அணங்கு–பெண்; மோகம்-காம மயக்கம்.

(இ—பு) மேகம், வாரிதி, வெற்பு, ஆகியவை உவமை ஆகுபெயராக முறையே கூந்தலையும், கண்ணையும், தனங்களையும் குறித்தன.

இதுவுங் கலிவிருத்தம்.

*ஆம்பல் மலர வமுதுலவ வீழ்முத்தந்*
*தாம்பொலிய நோக்கிச் சகோரங்கள்—சோம்பகல*
*மான்றுலங்கப் பின்னர் மருத்தோன்றத் தேய்ந்திடலா*
*லான்றமதி பேதைமுக மாம்.* **57**

(ப—ரை) 1. ஆம்பல் மலர–ஆம்பல் மலர்வதாலும், அமுது உலவ–அமுது பொருந்தியிருப்பதாலும், வீழ்முத்தம் தாம் பொலிய நோக்கி–விழுகின்ற முத்துக்களைப் போன்ற நீர்த்துளிகள் அழகுற்று விளங்குதலைப் பார்த்து, சகோரங்கள் சோம்பு அகல–சக்கரவாகப் பறவைகள் சோம்பலை நீக்கிச் சுறுசுறுப்புக் கொள்வதாலும், மான் துலங்க–மான் தோன்றுவதாலும், பின்னர் மறுத்தோன்ற–பிறகு களங்கம் தோன்றுதலாலும், தேய்ந்திடலால்-தேய்வதாலும், ஆன்றமதி-நிறைந்த சந்திரன், பேதை முகம் ஆம் – பெண்ணின் முகத்திற்கு ஒப்பாகும்.

(பொ—ரை) 1. ஆம்பல் மலர்வதாலும், அமுது பொருந்தியிருப்பதாலும், விழுகின்ற முத்துக்களைப் போன்ற நீர்த்துளிகள் அழகுற்று விளங்குதலைப் பார்த்துச் சக்கரவாகப் பறவைகள் சோம்பலை நீக்கிச் சுறுசுறுப்புக் கொள்வதாலும், மான் தோன்றுவதாலும், பிறகு களங்கம் தோன்றுதலாலும், தேய்வதாலும் நிறைந்த சந்திரன் பெண்ணின் முகத்திற்கு ஒப்பாகும்.

(ப—ரை) 2. ஆம்பல் மலர—ஆம்பலைப் போன்ற வாயிலிருந்து புன்னகை தவழ, அமுது உலவ—அமுதம் உடலில் நிலைமாற, வீழ்முத்தம் தாம் பொலிய நோக்கி—விருப்பமூட்டும் பற்கள் விளங்குமாறு பார்த்து, சகோரங்கள் சோம்பு அகல—சக்கரவாகப் பறவைகளைப் போன்ற தனங்கள் ஊக்கம் உற்று விம்ம, மான் துலங்க—மானின் விழிபோன்ற கண்கள் விளங்க, மறுத்தோன்ற—களங்கம் புலப்பட, தேய்ந்திடலால்—பொலிவு குறைந்து விடுவதால், பேதை முகம்—பெண்ணின் முகம், ஆன்ற மதி ஆம்—முழுச் சந்திரனை ஒக்கும்.

(பொ—ரை) 2. ஆம்பலைப் போன்ற வாயிலிருந்து புன்னகை தவழ, அமுதம் உடலில் நிலைமாற, விருப்பமூட்டும் பற்கள் விளங்குமாறு பார்த்து, சக்கரவாகப் பறவைகளைப் போன்ற தனங்கள் ஊக்கம்உற்று விம்ம, மானின் விழிபோன்ற கண்கள் விளங்க, களங்கம் புலப்படப் பொலிவு குறைந்து விடுவதால், பெண்ணின் முகம் முழுச் சந்திரனை ஒக்கும்.

அருஞ்சொற்பொருள்: ஆம்பல்—ஆம்பற் பூ, ஆம்பல் போன்ற வாய்; முத்தம்-முத்துப்போன்ற நீர்த்துளிகள், பற்கள் சகோரம்—சக்கரவாகப் பறவை; மான்—மதியில் தோன்றும் மானின் உருவம், மானின் விழிபோன்ற கண்கள்.

(இ—பு) ஆம்பல்—உவமை ஆகுபெயராய் வாயைக் குறித்தது. மான்—மானின் விழிக்கு முதலாகு பெயராகிப் பெண்ணின் கண்ணுக்கு உவமை ஆகு பெயராயிற்று.

இது இருவிகற்ப நேரிசை வெண்பா.

*வெண்மை நிறத்தார் விதிதான் வெளிப்படவே*
*திண்மையா தாரமிவர் தேறுங்கா—லுண்மை*
*மிகத்தா மதநடையா மின்னு ரதனற்*
*சகத்தோது மன்னமெனத் தான்.* **58**

(ப—ரை) 1. வெண்மை நிறத்தார்—வெள்ளை நிறமானவர், விதிதான் வெளிப்படவே திண்மையாதாரம்—பிரமன் வெளியே ஊர்ந்துசெல்லுதற்கு உறுதியான ஊர்தியாக உள்ளவர், தேறுங்கால்—தெளியுமிடத்து, உண்மை மிக மின்னர் தாமத நடையார்—உண்மையில் பெண்களைப்போல மிகவும் மெதுவாக நடப்பவர், அதனல், சகத்து—உலகம், அன்னம் என ஓதும்—அவரை அன்னப்பறவையார் என்று கூறும்.

(பொ—ரை) 1. வெள்ளை நிறமானவர், பிரமன் வெளியே ஊர்ந்து செல்லுதற்கு உறுதியான ஊர்தியாக உள்ளவர், தெளியுமிடத்து உண்மையில் பெண்களைப்போல மிகவும் மெதுவாக நடப்பவர். அதனல் உலகம் அவரை அன்னப்பறவையார் என்று கூறும்.

(ப—ரை) 2. தேறுங்கால்—தெளியுமிடத்து, மின்னர்—மின்னலைப்போலப் பகட்டுகின்ற பெண்கள், வெண்மைநிறத்தார்—பேதைமைக் குணத்தினர், விதிதான் வெளிப்படவே திண்மையாதாரம்—பிரமன் படைப்பாகிய மக்கட் பேற்றுக்கு உறுதியான அடிப்படை ஆவர், உண்மை மிகத் தாமத நடையார்—உண்மையில் பெரும்பாலும் மெதுவாக நடப்பவர், (அல்லது) உள்ளத்தில் குற்றம் மிகத் தாம் மயக்க ஒழுக்கம் உடையவர், அதனல், சகத்து—உலகினர், அவரை அன்னம் என ஓதும்—அத்தகைய மகளிரை அன்னம் என்று கூறுவர்.

(பொ—ரை) 2. தெளியுமிடத்து மின்னல் போலப் பகட்டுகின்ற பெண்கள் பேதைமைக் குணத்தினர். பிரமன் படைப்பாகிய மக்கட் பேற்றுக்கு உறுதியான அடிப்படை ஆவர். உண்மையில் பெரும்பாலும் மெதுவாக நடப்பவர்

(அல்லது) உள்ளத்தில் குற்றம் மிகத் தாம் மயக்க ஒழுக்கம் உடையவர், அதனால் உலகினர் அத்தகைய மகளிரை அன்னம் என்று கூறுவர்.

அருஞ்சொற்பொருள் : வெள்ளை நிறம்–அறியாமைக் குணம்; விதி–பிரமன், விதியால் படைக்கப்பட்ட மக்கள்; தாமத நடை–மெதுவான நடை (அல்லது) மயக்க ஒழுக்கம்; சகம்–உலகம்; தேறுதல்–தெளிதல்.

(இ—பு) விதி கர்த்தா ஆகுபெயராய் மக்களைக்குறித்தது.

இதுவும் இருவிகற்ப நேரிசை வெண்பா.

*சார்கணிச்சி முத்தலைவே றண்டொத்த தோளோடு*
*மார்வின் மகிடமமர்ந் தாடவரை—நேர்தனது*
*பாசத்தா லுள்ளுயிரும் பற்றிக் கவர்ந்திடலா*
*லாசைப்பெண் ணேபெருங்கூற் றாம்* 59

(ப—ரை) 1. சார்கணிச்சி முத்தலைவேல்ஒடு–பொருந்தும் கணிச்சி என்று கூறப்படுகின்ற மூன்று தலைகளையுடைய வேற்படையாகிய சூலத்தோடும், தண்டு ஒத்த தோளோடு–தண்டாயுதம் பொருந்திய தோள்களுடன், ஆர்வின் மகிடம் அமர்ந்து–விருப்புடன் எருமையில் அமர்ந்து, ஆடவரை–ஆண்களை, தனது பாசத்தால்–தன்னுடைய பாசக் கயிற்றால், உள் உயிரும் பற்றிக் கவர்ந்திடலால்–உள்ளத்தையும் உயிரையும் பற்றிக் கவர்ந்து விடுதலால், ஆசைப்பெண்ணே–ஆசையூட்டும் பெண்ணே, பெண் அன்று, பெருங்கூற்று ஆம்–பெரிய எமனே ஆவாள்.

(பொ—ரை) 1. பொருந்தும் கணிச்சி என்று கூறப்படுகின்ற, மூன்று தலைகளையுடைய வேற்படையாகிய சூலத்தோடும் தண்டாயுதம் பொருந்திய தோள்களுடனும் விருப்பமுடன் எருமையில் அமர்ந்து ஆண்களைத் தனது பாசக் கயிற்றால் உள்ளத்தையும் உயிரையும் பற்றிக் கவர்ந்து விடுத

லால் ஆசையூட்டும் பெண்ணே, பெண் அன்று, பெரிய எமனே ஆவாள்.

(ப—ரை) 2. முத்துஅலைவேல்-முத்துக்களைப் போன்ற கண்ணீராகிய துன்புறுத்தும் வேலுடனும், கண்சார் இச்சி-கண்களில் பொருந்தும் காதலாகிய ஆயுதத்துடனும், தண்டு ஒத்த தோளோடும்—மூங்கிலைப் போன்ற தோள்களுடனும், ஆர்வின் மகிழ்தம் அமர்ந்து – ஆர்வத்துடன் மகிழ்வையும், கொடையையும் விரும்பி, ஆடவரை—ஆண்களிடம், நேர் தனது பாசத்தால்—காட்டுகின்ற தனது அன்பால், உள்ளும் உயிரும் பற்றிக் கவர்ந்திடலால்—அவர்களுடைய உள்ளத்தை யும் உயிரையும் பற்றிக் கவர்ந்துகொள்ளுதலால், பெண்ணே—பெண் அன்று, பெருங்கூற்றும்—பெரிய எமன் ஆகும்.

(பொ—ரை) 2. முத்துக்களைப் போன்ற கண்ணீராகிய துன்புறுத்தும் வேலுடனும், கண்களில் பொருந்தும் காதலாகிய ஆயுதத்துடனும், மூங்கிலைப்போன்ற தோள்களுடனும், ஆர்வத்துடன் மகிழ்வையும் கொடையையும் விரும்பி ஆண்களிடம் காட்டுகின்ற தனது அன்பால் அவர்களுடைய உள்ளத்தையும் உயிரையும் பற்றிக் கவர்ந்துகொள்ளுதலால் பெண்ணே பெரிய எமன் ஆகும்.

அருஞ்சொற்பொருள்: கணிச்சி-மூன்று தலைகளையுடைய ஓர் ஆயுதம்; தண்டு—மூங்கில்; மகிடம்—எருமை; பாசம்—பாசக்கயிறு; கூற்று—எமன்; அலை—துன்புறுத்தும்; மகிழ்—மகிழ்ச்சி; தம்—கொடை; அமர்ந்து-விரும்பி.

(இ—பு) முத்தலைவேல்—முத்து அலை வேல். முத்துப் போன்ற கண்ணீராகிய துன்புறுத்தும் வேல். முத்து உவமை ஆகுபெயராய்க் கண்ணீரைக் குறித்தது. அலைவேல்- வினைத் தொகை. மகிடம்—மகிழ்தம், மகிழும்தம் உம்மைத்தொகை (மகிழ்—மகிழ்ச்சி, தம்—கொடை).

இது இருவிகற்ப நேரிசை வெண்பா.

*தூர்த்தன்மருந் துண்டுபுண்கண் சூழ்ந்துடனாற் றிக்குமுகம்*
*பார்த்தவனாய்ச் சிற்றிடையார் பாசத்தா—லார்ப்புற்*
*றியல்போய்க் கரத்தோடு மேற்றமரர் விண்கோ*
*னயன்மா லரன்போலு மால்.* **60**

(ப—ரை) தூர்த்தன்–காமுகன், மருந்து உண்டு–மருந்துஉண்ணலால், அமரர்–மருந்தாகிய அமிழ்தம் உண்ணும் தேவரையும், உடல்கண் புண் சூழ்ந்து–உடம்பில் புண் நிறை தலால், விண்கோன் – உடம்பெல்லாம் கண்ணையுடைய விண்ணவர் தலைவனாகிய இந்திரனையும், நால் திக்கு முகம் பார்த்தவனாய்–நான்கு திக்குகளையும் பார்க்கும் முகத்தனாகி, அயன்–நான்முகனாகிய பிரமனையும், சிற்றிடையார் பாசத்தால் ஆர்ப்புற்று-சிறிய இடையையுடைய பெண்களின் ஆசையால் கட்டுண்டு, மால் – சிறிய இடைச்சியருடைய கயிற்றால் கட்டுண்ட கண்ணனையும், இயல் போய்–தன் இயற்கைத் தன்மை போய்ப் பித்தனாகி, கரத்து ஓடும் ஏற்று–கையில் ஓட்டையும் ஏற்பதால், அரன்–சிவபெருமானையும், போலும் (ஆல்)–போன்றவன் ஆவான்.

(பொ—ரை) காமுகன் மருந்து உண்ணலால் மருந்தாகிய அமிழ்தம் உண்ணும் தேவரையும், உடம்பில் புண் நிறைதலால் உடம்பெல்லாங் கண்ணையுடைய விண்ணவர் தலைவனாகிய இந்திரனையும், நான்கு திக்குகளையும் பார்க்கும் முகத்தன் ஆவதால் நான்முகனாகிய பிரமனையும், சிறிய இடையையுடைய பெண்களின் ஆசையால் கட்டுண்ணலால் சிறிய இடைச்சியருடைய கயிற்றால் கட்டுண்ட கண்ணனையும், தன் இயற்கைத் தன்மை போய்ப் பித்தன் ஆகிக் கையில் ஓட்டையும் ஏற்பதால் சிவபெருமானையும் போன்றவன் ஆவான்.

அருஞ்சொற்பொருள்: தூர்த்தன்–காமுகன்; மருந்து–மருந்து, அமிழ்தம்; விண்–விண்ணவர்; பாசம்–ஆசை, கயிறு.

(இ—பு) உண்டு, சூழ்ந்து, ஆர்ப்புற்று, ஏற்று என்கின்ற செய்து என்னும் வாய்ப்பாட்டு வினை எச்சங்கள் காரணப் பொருளில் வந்தன. விண் இடவாகுபெயராய் விண்ணவரைக் குறித்தது.

இதுவும் இருவிகற்ப நேரிசை வெண்பா.

*பித்தனெடு மாலோன் பிறழ்போத னோர்குமரன்*
*றத்தகலா விக்கினநா தன்போகி—யித்தலைவ*
*னுக்கிரனூர் வைரவனே டோதைய னந்தகன்பேர்*
*தக்கவதாற் றூர்த்தன்மதர்த் தான்.* **61**

(ப—ரை) 1. பித்தன்—சிவபெருமான், நெடுமாலோன்—நீண்ட திருமால், பிறழ்போதன்—விளங்குகின்ற தாமரையில் அமர்ந்துள்ள பிரமன், ஓர்குமரன்—ஒப்பற்ற முருகன், தத்து அகலஆம் விக்கினநாதன்—ஆபத்து நீங்க உதவும் விக்கினேசுவரன், போகி-இந்திரன், இத்தலைவன்-இவ்விடத்துத் தலைவன், உக்கிரனூர்—உக்கிரகுமாரன், வைரவன்—வைரவர், ஓதுஐயன்—வேதம் ஓதுகின்ற அந்தணன், அந்தகன்—எமன் ஆகிய பேர்கள், தக்கஅதலால்—நிலைத்த அதனால், தூர்த்தன் மதர்த் தான்—காமுகன் செருக்குற்றான்.

(பொ—ரை) 1. சிவபெருமான், நீண்ட திருமால், விளங்குகின்ற தாமரையில் அமர்ந்துள்ள பிரமன், ஒப்பற்ற முருகன், ஆபத்து நீங்க உதவும் விக்கினேசுவரன், இந்திரன், இவ்விடத்துத் தலைவன், உக்கிரகுமாரன், வைரவன், வேதம் ஓதுகின்ற அந்தணன், எமன் ஆகியபேர்கள் நிலைத்த அதனால் காமுகன் செருக்குற்றான்.

(ப—ரை) 2. பித்தன்—பித்துப் பிடித்தவன், நெடு மாலோன்—பெரிய பைத்தியன், பிறழ்போதன்—மாறுபட்ட அறிவுடையவன், ஓர்குமரன்—ஒரு கொம்பில்லாத விலங்கைப்

போன்றவன், தத்து அகலா—ஆபத்து நீங்காத, விக்கினநாதன்—கேடன், போகி—போகம் விரும்பி, இ தலைவன் உக்கிரனார்—இங்கு முக்கிய வலிய கொடுமையன், வைரவன்-நாய்க்குணன், ஓதையன்—அண்டவாதன், அந்தகன்—குருடன் ஆகியோர்கள், தக்கதால்-தேவர்க்கும் பொருந்துவதால், தூர்த்தன்-காமுகன், மதர்த்தான்—களிப்புற்றான்.

(பொ—ரை) 2. பித்துப் பிடித்தவன், பெரிய பைத்தியக்காரன், மாறுபட்ட அறிவுடையவன், ஒரு கொம்பில்லாத விலங்கைப் போன்றவன், ஆபத்து நீங்காத கேடன், போகம் விரும்பி, இங்கு முக்கிய வலிய கொடுமையன், நாய்க்குணன், அண்டவாதன், குருடன் என்று பொருள்படும் பெயர்கள் தேவர்க்கும் பொருந்துவதால் காமுகன் களிப்புற்றான்.

அருஞ்சொற்பொருள்: பித்தன்—சிவபெருமான், பித்துப் பிடித்தவன்; மாலோன்—திருமால், மயக்க உணர்வினன்; பிறழ்—விளங்குகின்ற, மாறுபட்ட; போதன்—போதிலுள்ள வனாகிய பிரமன், அறிவன்; குமரம்—கொம்பில்லாத விலங்கு; குமரன்-கொம்பில்லாத விலங்குபோன்றவன்; தத்து-ஆபத்து; விக்கினநாதன்—விக்கினேசுவரன், கேடன்; போகி—இந்திரன், போகம் விரும்பி; உக்கிரனார்-உக்கிரகுமாரன், கொடுமையன்; வைரவன்-வைரவர், நாய்போன்றவன்; ஓதையன்-ஓது ஐயன்-வேதம் ஓதுகின்ற அந்தணன்; ஓதம்ஐயன்—அண்டவாதன்; அந்தகன்—எமன், குருடன்; மதர்த்தான்—செருக்குற்றான், களிப்புற்றான்.

(இ—பு) அகலா—அகலாத, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். இ—இவ்விடம், இடப்பெயர் குறித்து நின்றது.

இதுவும் இருவிகற்ப நேரிசை வெண்பா.

*இளங்கொம் பொடுதளிர்க ளேற்றவடு வுற்றுத்*
*துளங்கியமாத் தென்திசைக் கால்சூழ—வளங்குலைந்து*
*வெம்மை யழல்படர்ந்து வீழ்ந்து பதைபதைக்கு*
*மிம்மை மறுமையுமென் னே.* **62**

(ப—ரை) 1. தென்திசைக்கால் சூழ—தென்றற் காற்று வர, இளங்கொம்பொடு—சிறுகிளைகளுடன், தளிர்கள்—தளிர்களையும், ஏற்ற வடு உற்று—தக்க வடுக்களையும் பெற்றுத், துளங்கிய மா — விளங்கிய மாமரம், வளங்குலைந்து — வளம் கெட்டு, வெம்மை அழல் படர்ந்து—பெரு நெருப்புப் பற்றி, இம்மை மறுமையும் வீழ்ந்து-இவ்வுலக வாழ்வும்,மறுவாழ்வும் அழிந்து, பதைபதைக்கும்—துன்புறும், என்(ஏ)—இது என்ன கொடுமை. ஏ—ஈற்றசை.

(பொ—ரை) 1. தென்றற் காற்று வரச் சிறுகிளைகளுடன் தளிர்களையும் தக்க வடுக்களையும் பெற்று விளங்கிய மா மரம் வளங்கெட்டு பெரு நெருப்புப் பற்றி இவ்வுலக வாழ்வும் மறுவாழ்வும் இழந்து துன்புறும். இது என்ன கொடுமை.

(ப—ரை) 2. துளங்கிய மா — விளங்கிய திருமகளைப் போன்ற அழகியினுடைய, இளங்கொம்பொடு—இளம் நகில்களில், தளிர்கள் ஏற்ற—தளிர்போன்ற கைகளால் பெற்ற, வடு உற்று—வடுக்களை அடைந்து, வளங்குலைந்து—செழுமை சீர் குலைந்து, வெம்மை அழல் படர்ந்து—காம விருப்பத்தால் வெப்பம் உயர்ந்து, தென்திசைக்கால்சூழ—தென்திசையிலிருக்கும் காலன் வந்து வளைக்க, இம்மையும் மறுமையும் வீழ்ந்து பதைபதைக்க—இம்மை வாழ்வும் மறுமை வாழ்வும் இழந்து துன்புறும், என்(ஏ)—என்னே இவரது நிலை. ஏ—ஈற்றசை.

(பொ—ரை) 2. விளங்கிய திருமகளைப் போன்ற அழகியினுடைய இளம் நகில்களில் தளிர்போன்ற கைகளால் பெற்ற வடுக்களை அடைந்து செழுமை சீர்குலைந்து காம விருப்பத் தால் வெப்பம் உயர்ந்து தென்திசையிலிருக்கும் காலன் வந்து

வளைக்க இம்மை வாழ்வும், மறுமை வாழ்வும் இழந்து துன்புறும் இவரது நிலை எவ்வளவு இரங்கத்தக்கது?

அருஞ்சொற்பொருள்: மா-மாமரம், திருமகள்; கொம்பு-யானையின் தந்தம் போன்ற நகில்; தளிர்—இளந்தளிர், தளிர் போன்ற கை; வடு—மாவடு, நகக்குறி; வெம்மை—வெப்பம், விருப்பம்; தென்திசைக்கால்-தென்றற்காற்று, தென்திசையில் இருக்கும் காலன்.

(இ—பு) கொம்பு, தளிர் ஆகியவை உவமை ஆகுபெயராய் நகிலையும், கையையும் குறித்தன. கால்—காலன் விகுதி குறைந்து நின்றது.

இதுவும் இருவிகற்ப நேரிசை வெண்பா.

*கடன்மேகம் வெற்புக் கதிர்மதி யாகாய*
*மடர்பூவை வேட்புற் றகலார்—படர்வேள்*
*சமன்வேத ஞர்கைச் சமர்த்துணர்வி லென்று*
*மமர்வாரோ வாச்சகடொப் பாய்.* **63**

(ப—ரை) 1. கடல், மேகம், வெற்பு—மலை, கதிர்மதி—ஒளிபொருந்திய சந்திரன், ஆகாயம், அடர்பூவை—அடர்ந்த பூவுலகம் ஆகியவற்றை, வேட்புஉற்று—விரும்பி, அகலார்—அவற்றில் வைத்த பற்று நீங்காதவர்கள், படர்வேள்—தொடரும் மன்மதன், சமன்-எமன், வேதனர்-பிரமன் ஆகியோருள், உணர்வில்—மன்மதன் ஊட்டும் காம உணர்விலும், சமர்த்தில்—எமனுடைய ஆற்றலிலும், கையில்—பிரமனுடைய கையிலும், ஓவாச் சகடு ஒப்பாய்—சுழலுதல் ஒழியாத வண்டிச் சக்கரத்தைப்போல, அமர்வார்—தங்குவார்கள்.

(பொ—ரை) 1. கடல், மேகம், மலை, ஒளிபொருந்திய சந்திரன், ஆகாயம், அடர்ந்த பூவுலகம் ஆகியவற்றை விரும்பி அவற்றில் வைத்த பற்று நீங்காதவர்கள், தொடரும் மன்மதன், எமன், பிரமன் ஆகியோருள் மன்மதன் ஊட்டும் காம உணர்விலும், எமனுடைய ஆற்றலிலும், பிரமனுடைய கையிலும்

சுழலுதல் ஒழியாத வண்டிச் சக்கரத்தைப் போலத் தங்கு வார்கள்.

(ப—ரை) 2. கடல்–கடலைப் போல் அகன்ற கண்களை யும், மேகம்–மேகம் போன்ற கூந்தலையும், வெற்பு–மலை போன்ற தனங்களையும், கதிர்மதி – ஒளிவீசும் சந்திரனைப் போன்ற முகத்தையும், ஆகாயம்–வானவெளியைப் போன்ற இடையையும், அடர்பூவை–பொருந்திய பெண்ணை, வேட்பு உற்று–விரும்பி, அகலார்–நீங்காதவர், படர்வேள்–அணுகி மன்மதன் ஊட்டும், உணர்வில்–காம உணர்விலும், சமன் கையில்–எமன்கையிலும், வேதனுர் கைச் சமர்த்திலும்–பிரம னுடைய கை வலிமையிலும், ஓவாச் சகடு ஒப்பாய்–சுழலுதல் ஒழியாத வண்டிச் சக்கரத்தைப் போல, அமர்வார்–அகப்படு வார், அதாவது பிறத்தல், மோகித்தல், இறத்தல் என்ற இடையருத சுழலில் அகப்படுவார்கள்.

(பொ—ரை) 2. கடலைப்போல் அகன்ற கண்களையும், மேகம் போன்ற கூந்தலையும், மலை போன்ற தனங்களையும், ஒளிவீசும் சந்திரனைப் போன்ற முகத்தையும், வானவெளி யைப் போன்ற இடையையும், பொருந்திய பெண்ணை விரும்பி நீங்காதவர் அணுகி மன்மதன் ஊட்டும் காம உணர்விலும், எமன் கையிலும், பிரமனுடைய கை வலிமையிலும் சுழலுதல் ஒழியாத வண்டிச் சக்கரத்தைப்போல அகப்பட்டு வருந்துவர். அதாவது பிறத்தல், மோகித்தல், இறத்தல் என்ற இடையருத சுழலில் அகப்படுவார்கள்.

அருஞ்சொற்பொருள்: பூ–பூவுலகம்; வேள்–மன்மதன்; சகடு–சக்கரம்.

(இ—பு) கடல் கண்களுக்கும், மேகம் கூந்தலுக்கும், வெற்பு–தனங்களுக்கும், மதி–முகத்திற்கும், ஆகாயம்–இடைக்கும் உவமை ஆகுபெயர். வேள், உணர்வில், சமன் சமர்த்தில், வேதனுர் கையில் என்று பொருந்தி எதிர் நிரல் நிறையணியாயிற்று.

இது இருவிகற்ப நேரிசை வெண்பா.

*நாகரிகர் கொண்டாடு நற்சித் திரப்பாவை*
*யாகநிறப் பச்சை யகன்றொழியிற்—போகுவர்ப்பாற்*
*கையிற் றொடார்பாரார் கண்ணதனாற் பச்சைக்கே*
*மையற்கொண் டந்நிறஞ் சார்வார்.* *64*

(ப—ரை) 1. நாகரிகர் கொண்டாடும்–புதுமை விரும்பிகள் கொண்டாடுகின்ற, நற்சித்திரப் பாவை–நல்ல சித்திரப் பாவையினுடைய, ஆகநிறப்பச்சை–உடம்பின் பச்சைநிறம், அகன்று ஒழியில்–விட்டு நீங்கில், போகு உவர்ப்பால்–மிக்க வெறுப்பால், கையில் தொடார்–அதைக் கையாலும் தொடமாட்டார்கள், கண்ணதனால் பாரார்–கண்ணாலும் பார்க்க மாட்டார்கள், பச்சைக்கே மையல்கொண்டு–பச்சை நிறத்திற்கே மயங்கி, அந்நிறம் சார்வார்–அந்த நிறத்தை விரும்பி அடைவார்.

(பொ—ரை) 1. புதுமை விரும்பிகள் கொண்டாடுகின்ற நல்ல சித்திரப் பாவையினுடைய உடம்பின் பச்சை நிறம் விட்டு நீங்கில் மிக்க வெறுப்பால் அதைக் கையாலும் தொடமாட்டார்கள், கண்ணாலும் பார்க்கமாட்டார்கள், பச்சை நிறத்திற்கே மயங்கி அந்த நிறத்தை விரும்பி அடைவார்.

(ப—ரை) 2. நாகரிகர்–புதுமை விரும்பிகள், கொண்டாடும்–பாராட்டும், நல்சித்திரப் பாவை–நல்ல அழகுடைய பெண்ணினுடைய, ஆகப் பச்சைநிறம்–உடலின் தோல்நிறம், அகன்று ஒழியின்–நீங்கிக் கெடில், போகு உவர்ப்பால்–மிக்க வெறுப்பால், கையில் தொடார்–அவளைக் கையாலும் தொடமாட்டார்கள், கண்ணதனல் பாரார்–கண்ணாலும் பார்க்க மாட்டார்கள், பச்சைக்கே மையல்கொண்டு–தோலின் நிறத்திற்கே மோகம் கொண்டு, அந்நிறம் சார்வார்–இளைத்து அந்தத் தோலே ஆவார்கள்.

(பொ—ரை) 2. புதுமை விரும்பிகள் பாராட்டும் நல்ல அழகுடைய பெண்ணினுடைய உடலின் தோல் நிறம் நீங்கிக் கெடில், மிக்க வெறுப்பால், அவளைக் கையாலும் தொட மாட்டார்கள், கண்ணாலும் பார்க்கமாட்டார்கள், தோலின் நிறத்திற்கே மோகம் கொண்டு இளைத்து அந்தத் தோலே ஆவார்கள்.

அருஞ்சொற்பொருள்: சித்திரப்பாவை-ஓவியப்பெண், அழகிய பெண்; ஆகம்நிறம்—உடலின் நிறம்; பச்சை—பசுமை நிறம், தோல்; போகு-மிக்க; உவர்ப்பு-வெறுப்பு; மையல்—மயக்கம், மோகம்.

(இ—பு) போகு உவர்ப்பு – மிக்க வெறுப்பு, வினைத் தொகை. பச்சை—பசுமை, பண்புப் பெயர். பச்சை—தோல் தோலின் நிறத்தைக் குறிக்கும்போது பண்பாகுபெயர்.

இதுவும் இருவிகற்ப நேரிசை வெண்பா.

*வெண்மையாய் நீலம் விரவுற்றோர் செம்மையிலா*
*தெண்மையூ தாப்பச்சை யின்மஞ்சள்—வண்மைத்தா*
*மென்றுகறுத் தெவ்வருண மேனும்பொன் வண்ணமென*
*மன்றவிளை யார்தமைத்தாழ் வார்.* **65**

(ப—ரை) 1. வெண்மையாய் நீலம் விரவுற்றோர்—தலை முடி நரைத்து சிறிது கருமை கலக்கப் பெற்றவர், செம்மை யிலாது—நேர்மையில்லாமல், எண்மை ஊதாப் பச்சையில்—எளிமையான ஊதாத் தோலினும், மஞ்சள் வண்மைத்து ஆம் என்று—மஞ்சள்நிறத் தோல் வளமையுடையதாகும் என்று எண்ணி, கறுத்து—பிற நிறங்களை வெறுத்து, எவ்வருண மேனும்-எக்குலத்தவராயினும், பொன்வண்ணம் என-பொன் னிறம் நல்லதென, மன்ற இளையார் தமைத்தாழ்வார்—மிகவும் இளைய பெண்களை வணங்குவர்.

(பொ—ரை) 1. தலைமுடி நரைத்துச் சிறிது கருமை கலக்கப் பெற்றவர், நேர்மையில்லாமல் எளிமையான ஊதாத் தோலினும் மஞ்சள்நிறத் தோல் வளமையுடையதாகும் என்றெண்ணி, பிற நிறங்களை வெறுத்து, எக்குலத்தவராயினும் பொன்னிறம் நல்லதென மிகவும் இளைய பெண்களை வணங்குவர்.

(ப—ரை) 2. வெண்மையாய்–அறிவிலராய், செம்மையிலாது நீலம் விரவு உற்றோர்–உள்ளத்தில் நேர்மையில்லாமல் வஞ்சகம் கலந்தவர், பச்சையில்–தோலில், ஊதா எண்மை–ஊதாநிறம் எளியது, மஞ்சள் வண்மைத்து ஆம் என்று–மஞ்சள்நிறம் வளமையுடையது என்று, கறுத்த எவ்வருணமேனும்–பகைமையுற்ற எந்தக் குலத்தவர் எனினும், பொன் வண்ணம் என–பொன்னின் விரும்புதற்குரிய நிறம் என, மன்ற இளையார்தமை–மிக்க இளமைபொருந்திய பெண்களை, தாழ்வார்–விரும்புவர்.

(பொ—ரை) 2. அறிவிலராய் உள்ளத்தில் நேர்மையில்லாமல் வஞ்சகம் கலந்தவர், தோலில் ஊதாநிறம் எளியது, மஞ்சள்நிறம் வளமையுடையது என்று பகைமையுற்ற எந்தக் குலத்தவர் எனினும், பொன்நிறம் விருப்புதற்குரிய நிறம் என மிக்க இளமை பொருந்திய பெண்களை விரும்புவர்.

அருஞ்சொற்பொருள்: செம்மை–நேர்மை; எண்மை–எளிமை; வண்மைத்து–வளமுடையது; வருணம்–குலம், நிறம்; மன்ற–மிக.

(இ—பு) எண்மை–பண்புப்பெயர். எள்மை–எள்ளும் கருமை என்ற பொருளில் வினைத் தொகையாகும்.

இதுவும் இருவிகற்ப நேரிசை வெண்பா.

*கண்ணுங் குழலுங் களங்கரமும் வண்டாகும்*
*பெண்ணை யெதிர்நோக்கல் பேசலுட—னெண்ணல்*
*பரிசித்த லும்புன்கண் பாரிக்கு மாற்றைத்*
*தரிசிப் பவர்விடரே தான்.* 66

(ப—ரை) 1. கண்ணும் வண்டாகும்-கண்ணும் அம்பு போன்றதாகும், குழலும் வண்டாகும்-கூந்தலும் வண்டு படிவதாகும், களமும் வண்டாகும்–கழுத்தும் சங்கு போன்ற தாகும், கரமும் வண்டாகும்–கையும் வளையல் பொருந்திய தாகும், பெண்ணை–இத்தகைய பெண்ணை, எதிர்நோக்கல்உம்–எதிரே கூர்ந்து பார்த்தலும், பேசலும்–பேசுதலும், உடல் பரிசித்தல்உம்–உடம்பைத் தொடுதலும், எண்ணல்உம்–நினைத் தலும், புன்கண்பாரிக்கும்–துன்பத்தைப் பெருக்கும், மாற்று ஐயை–தம்மை வஞ்சிக்கும் அழகை, தரிசிப்பவர் விடரே–ஆவலுடன் பார்ப்பவரும் காமுகரே. (தான்–அசை)

(பொ—ரை) 1. கண்ணும் அம்பு போன்றதாகும், கூந்தலும் வண்டு படிவதாகும், கழுத்தும் சங்கு போன்ற தாகும், கையும் வளையல் பொருந்தியதாகும், இத்தகைய பெண்ணை எதிரே கூர்ந்து பார்த்தலும், பேசுதலும், உடம்பைத் தொடுதலும், நினைத்தலும் துன்பத்தைப் பெருக் கும். தம்மை வஞ்சிக்கும் அழகை ஆவலுடன் பார்ப்பவரும் காமுகரே.

(ப—ரை) 2. கண் வண்டாகும் பெண்ணை–கண் அம்பு போன்றதாக உள்ள பெண்ணை, எதிர்நோக்கல் புன்கண் பாரிக்கும்–நேரே கூர்ந்து பார்த்தலும் துன்பத்தைப் பெருக் கும், குழல் வண்டாகும் பெண்ணை–கூந்தலில் வண்டுபடியும் பெண்ணுடன், பேசலும் புன்கண் பாரிக்கும்–பேசுவதும் துன்பத்தைப் பெருக்கும், களம் வண்டாகும் பெண்ணை–கழுத்து சங்கு போன்றதாக உள்ள பெண்ணை, எண்ணலும் புன்கண் பாரிக்கும்–நினைத்தலும் துன்பத்தைப் பெருக்கும்,

கரம் வண்டாகும் பெண்ணை—கையில் வளையல் அணிந்துள்ள பெண்ணை, பரிசித்தலும் புன்கண்—தொடுதலும் துன்பத்தை விளைவிக்கும், பாரிக்கு மாற்றை – மனைவிக்கு வேருக மற்ருெருத்தியை, தரிசிப்பவர்—நயந்து பார்ப்பவர், விடரே—காமுகரே.

(பொ—ரை) 2. கண் அம்பு போன்றதாக உள்ள பெண்ணை நேரே கூர்ந்து பார்த்தலும் துன்பத்தைப் பெருக்கும், கூந்தலில் வண்டு படியும் பெண்ணுடன் பேசுவதும் துன்பத்தைப் பெருக்கும், கழுத்துச் சங்குபோன்றதாக உள்ள பெண்ணை நினைத்தலும் துன்பத்தைப் பெருக்கும், கையில் வளையல் அணிந்துள்ள பெண்ணைத் தொடுதலும் துன்பத்தை விளைவிக்கும். மனைவிக்கு வேருக மற்ருெருத்தியை நயந்து பார்ப்பவர் காமுகரே.

அருஞ்சொற்பொருள்: குழல்—கூந்தல்; களம்—கழுத்து; வண்டு—அம்பு; சங்கு—வளையல்; பாரிக்கும்—பெருக்கும்; பாரிக்கு—மனைவிக்கு; மாற்றை—வேருெருத்தியை; விடர்—காமுகர்.

(இ—பு) பேசலுடன் எண்ணல்—உடன் மூன்றன் உருபு.

இதுவும் இருவிகற்ப நேரிசை வெண்பா.

*கற்கண்டு பாகு சருக்கரை தேன்முக் கனிசுவையுஞ்*
*சொற்கொண்டு நல்குவன் பொற்குட மேந்திமுன்*
*ருேன்றநிற்ப*
*னிற்கொண்டு கொல்லோ வறியையென் பாள்வஞ்சி*
*நேர்ந்தமைந்தர்*
*முற்கிண்டும் யாவும் வலியத்தந் தேங்கி முடிவர்பின்னே.*
**67**

(ப—ரை) 1. கற்கண்டும், பாகும் – வெல்லப்பாகும், சருக்கரையும், தேனும், முக்கனிகளும்—மா, பலா, வாழை

யாகிய மூன்றுவகைக் கனிகளும், சுதையும்-பாலும், ஆகிய வற்றை, சொல்கொண்டு நல்குவன் – சொற்களிலேயே அமையத் தருவேன், பொற்குடம் ஏந்தி-பொன்னால் ஆன குடங்களைப் போன்ற தனங்களைச் சுமந்து, முன்தோன்ற நிற்பன்–எதிரில் அவை தெரிய நிற்பேன், வறியை-வறியவனே, நிற்கு உண்டு கொல்–இவை எல்லாம் உன்னிடம் உண்டோ? என்பாள் வஞ்சி–என்று கூறுவாள் வஞ்சிக்கொடி போன்ற பெண், நேர்ந்த மைந்தர்–உடன்பட்ட இளைஞர்கள், முன்–முதலிலே, கிண்டும் யாவும் வலியத்தந்து–தொடுதல் முதலிய யாவையும் தாமே தந்து, பின்னே ஏங்கி முடிவர்–பிறகு ஏங்கி மடிவர்.

(பொ—ரை) 1. கற்கண்டும், வெல்லப்பாகும், சருக்கரையும், தேனும், மா, பலா, வாழையாகிய மூன்றுவகைக் கனிகளும், பாலும் ஆகியவற்றை சொற்களிலேயே அமையத் தருவேன். பொன்னால் ஆகிய குடங்களைப் போன்ற தனங்களைச் சுமந்து எதிரில் அவை தெரிய நிற்பேன். வறியவனே இவை எல்லாம் உன்னிடம் உண்டோ? என்று கேட்பாள் வஞ்சிக்கொடி போன்ற பெண். உடன்பட்ட இளைஞர்கள் முதலிலே தொடுதல் முதலிய யாவையும் தாமே தந்து பிறகு ஏங்கி மடிவர்.

(ப—ரை) 2. கற்கண்டும், பாகும், சருக்கரையும், தேனும், முக்கனியும், சுதையும்–பாலும் ஆகியவற்றுடன், சொல்கொண்டு-நெல்லையும் எடுத்துக்கொண்டுவந்து, பொற்குடம் ஏந்தி முன்தோன்ற–பொன்னை உடைய குடத்தையும் ஏந்திக்கொண்டு என்முன்னே வரின், நிற்பன்–உன்பக்கம் நிற்பேன், வறியை–வறியவனே, நிற்கு உண்டு கொல்–இவை யெல்லாம் உன்னிடம் உண்டோ? என்பாள் வஞ்சி–என்று கூறுவாள் யாவரையும் வஞ்சிப்பவள், நேர்ந்த மைந்தர்-உடன்பட்ட இளைஞர், முன்கிண்டும் யாவும் வலியத்தந்து–முன்னே குத்திக் காட்டுகின்ற யாவையும் தாமாகவே தந்து, பின்னே ஏங்கி முடிவர்-பிறகு ஏக்கங்கொண்டு மடிவர்.

(பொ—ரை) 2. கற்கண்டும், பாகும், சருக்கரையும், தேனும் முக்கனியும், பாலும் ஆகியவற்றுடன் நெல்லையும் எடுத்துக்கொண்டு வந்து, பொன்னையுடைய குடத்தையும் ஏந்திக்கொண்டு என்முன்னே வரின் உன்பக்கம் நிற்பேன். வறியவனே இவையெல்லாம் உன்னிடம் உண்டோ என்று கூறுவாள் யாவரையும் வஞ்சிப்பவள். உடன்பட்ட இளைஞர் முன்னே குத்திக் காட்டுகின்ற யாவையும் தாமாகவே தந்து பிறகு ஏக்கங்கொண்டு மடிவர்.

அருஞ்சொற்பொருள்: பாகு–வெல்லப்பாகு; சுதை–பால்; சொல்–சொல், நெல்; வஞ்சி–வஞ்சிப்பவள், வஞ்சிக் கொடி போன்றவள்; கிண்டு–தொடுதல், குத்திக்காட்டுதல்.

(இ—பு) வஞ்சி–வஞ்சிக்கொடி, உவமையாகுபெயர். பொற்குடம் – பொன்னாலாகிய குடம், மூன்றும் உருபும் பயனும் உடன்தொக்க தொகை. குடம்–குடத்தைப்போன்ற தனத்திற்கு உவமையாகுபெயர். வறியை–குறிப்பு வினையாலணையும் பெயர். அண்மை விளியாய் நின்றது. பொற்குடம்–பொன்னையுடைய குடம். இரண்டன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை. தோன்ற நிற்பன்–என்பதில் தோன்ற என்பது செய என் வாய்ப்பாட்டு வினை எச்சம் காரணப் பொருளில் வந்துளது.

இதுவும் நேரசை முதலில் வந்த கட்டளைக் கலித்துறை.

*பயந்திடு மானைக்கைப் பற்றி யதன்வயப் பட்டிசைந்து*
*நயந்திடு வார்தா மதன்குளம் பால்வடு நண்ணலுற்று*
*வியந்திட மர்க்கட மாவார் சணற்பர்தம் வீட்டிடையே*
*யியங்கிய குக்குடந் தானே விலங்கிட் டிழிந்தெனவே.*

**68**

(ப—ரை) 1. பயந்திடும் மானைக் கைப்பற்றி—பயப்படு கின்ற குதிரையைக் கையால் பிடித்து, அதன் வயப்பட்டு இசைந்து நயந்திடுவார்—அதன் வயமாகி அதை விரும்புவோர், தாம் அதன் குளம்பால்—தாம் அதனுடைய குளம்பினால், வடு நண்ணல் உற்று-காயமாகிய அடையாளம் பொருந்தப்பெற்று, சணற்பர் தம் வீட்டிடையே—சணல் நாற்றைக் கொண்டு கயிறு திரிப்போருடைய வீடுகளுக்கிடையே, இயங்கிய குக் குடம்—நடந்த கோழி, தானே விலங்கிட்டு இழிந்து எனவே—தானே காலில் கயிற்றை விலங்குபோல் மாட்டிக்கொண்டு வீழ்ந்தது என்று கூறுமாப்போலே, வியந்திட—எல்லோரும் வியக்குமாறு, மர்க்கடம் ஆவர்-அதனால் ஆட்டி வைக்கப்படும் குரங்குபோல் ஆவார்கள்.

(பொ—ரை) 1. பயப்படுகின்ற குதிரையைக் கையால் பிடித்து அதன் வயமாகி அதை விரும்புவோர், தாம் அதனு டைய குளம்பினால், காயமாகிய அடையாளம் பொருந்தப் பெற்று சணல் நாற்றைக் கொண்டு கயிறு திரிப்போருடைய வீடுகளுக்கு இடையே நடந்த கோழி தானே காலில் கயிற்றை விலங்குபோல் மாட்டிக்கொண்டு வீழ்ந்தது என்று கூறுமாப் போலே, எல்லோரும் வியக்குமாறு அதனால் ஆட்டி வைக்கப் படும் குரங்குபோல் ஆவார்கள்.

(ப—ரை) 2. பயந்திடும்—மக்களைப் பெறும், மானைக் கைப்பற்றி—மானின் விழியினைப் போன்ற விழியினையுடைய பெண்ணைக் கைப்பிடித்து, அதன் வயப்பட்டு இசைந்து நடந்திடுவோர்-அவள் வயப்பட்டு உடன்பட்டு விரும்புவோர், தாம் அதன் குளம்பால்—தாம் அந்த மானின் குளம்புபோன்ற அல்குலால், வடு நண்ணல் உற்று-குற்றம் பொருந்தப்பெற்று, சணற்பர் தம் வீட்டிடையே—சணல் கயிறு திரிப்பவர்களின் வீடுகளுக்கு இடையே, இயங்கிய குக்குடம்—நடந்துசென்ற கோழி, தானே விலங்கிட்டு இழிந்து எனவே—தானே கயிற்று விலங்கில் மாட்டிக்கொண்டு வீழ்ந்ததுபோல, வியந்திட—பிறர்

எல்லோரும் வியக்குமாறு, மர்க்கடம் ஆவர்—அவளால் ஆட்டி வைக்கப்படும் குரங்கு ஆவார்கள்.

(பொ—ரை) 2. மக்களைப் பெறும் மானின் விழியினைப் போன்ற விழியினையுடைய பெண்ணைக் கைப்பிடித்து அவள் வயப்பட்டு உடன்பட்டு விரும்புவோர் தாம் அந்த மானின் குளம்பு போன்ற அல்குலால் குற்றம் பொருந்தப் பெற்று. சணற் கயிறு திரிப்பவர்களின் வீடுகளுக்கு இடையே நடந்து சென்ற கோழி தானே கயிற்று விலங்கில் மாட்டிக்கொண்டு வீழ்ந்தது போலப் பிறர் எல்லோரும் வியக்குமாறு அவளால் ஆட்டி வைக்கப்படும் குரங்கு ஆவார்கள்.

அருஞ்சொற்பொருள்: பயந்திடும்—பயப்படும், பெறும்; மான் – குதிரை, மான் போன்ற விழியினையுடைய பெண்; குளம்பு – குதிரையின் குளம்பு, மான் குளம்பு போன்ற அல்குல்; வடு—காயம், குற்றம்; சணற்பர்—சணல்கயிறு திரிப்ப வர்; குக்குடம்—சேவல்கோழி; மர்க்கடம்—குரங்கு.

(இ—பு) வீழ்ந்து—வீழ்ந்தது என்பதன் விகாரம். மான்—மானின் விழிக்கு முதலாகுபெயர் ஆகிப் பிறகு அது உவமை ஆகுபெயராய்ப் பெண்ணைக் குறித்தது.

இது நிரையசை முதலில் வந்த கட்டளைக் கலித்துறை.

*தித்திக்கும் பாகு மகிழக் கொடுத்துத் திகழ்ந்தொளிரு*
*முத்துப் பலபல காட்டுங் கரும்பு முரியுமவா*
*சித்திக்கொன் றூலையிற் பட்டுக் கரைந்து திரிப்பவுரு*
*வத்தித் தறைபட்டு நைந்து பல்காலும் வளர்ந்தழிந்தே.*

***69***

(ப—ரை) 1. திகழ்ந்து ஒளிரும்—திகழ்ந்து விளங்கும், முத்துப் பலபல காட்டும்—முத்துக்கள் பற்பலவற்றைக் காட்டு

கின்ற, கரும்பு-கரும்பானது, அவா-விருப்பம்போல, சித்தித்து –விளைவு கைகூடி, கொன்று–வெட்டப்பட்டு, ஆலையிற்பட்டு –ஆலையில் கொடுக்கப்பட்டு, திரிப்பக் கரைந்து–சுழலும் கதிர் களால் தேய்ந்து, உருஅத்தி–உருவம் நசுக்கப்பட்டு, தறை பட்டு–தட்டையாக்கப்பட்டு, நைந்து பல்காலும் வளர்ந்து அழிந்தே–சிதைந்து பல தடவையும் தொடர்ந்து நலிவுற்றே, தித்திக்கும் பாகு – இனிக்கும் சர்க்கரைப் பாகு, மகிழக் கொடுத்து–மகிழுமாறு கொடுத்து, முரியும்–அழியும்.

(பொ—ரை) 1. திகழ்ந்து விளங்கும் முத்துக்கள் பற்பல வற்றைக் காட்டுகின்ற கரும்பானது, விருப்பம்போல விளைவு கைகூடி வெட்டப்பட்டு ஆலையில் கொடுக்கப்பட்டு, சுழலும் கதிர்களால் தேய்ந்து உருவம் நசுக்கப்பட்டுத் தட்டையாக்கப் பட்டுச் சிதைந்து பல தடவையும் தொடர்ந்து நலிவுற்றே இனிக்கும் சர்க்கரைப்பாகு மகிழுமாறு கொடுத்து அழியும்.

(ப—ரை) 2. தித்திக்கும் பாகு–இன்பூட்டும் தோளை, மகிழக் கொடுத்து–மகிழுமாறு கொடுத்து, திகழ்ந்து ஒளிரும் முத்து–திகழ்ந்து ஒளிவீசும் முத்துக்கள் ஆகிய பற்கள், பலபல காட்டும்–பற்பலவற்றைக் காட்டுகின்ற, கரும்பு–யாவராலும் விரும்பப்படும் கரும்பு போன்றவளால், அவா சித்திக்க– காமுகன் தன் விருப்பம் கைகூட, ஒன்றுஆல்–கலந்த ஆலிலை போலும் குய்யத்தால் உண்டாகிய, ஐயிற்பட்டு–இருமல் நோயில் அகப்பட்டு, கரைந்து–மெலிந்து, உருதிரிப்ப–உருவம் வேறுபடுத்தப்பட்டு, வத்தி–வற்றி, தறைபட்டு–தரையில் தடுமாறி விழுந்து, நைந்து–வருந்தி, பல்காலும்–பலதடவை யும், வளர்ந்து அழிந்தே முரியும்–தொடர்ந்து தேய்ந்தே மாளுவான்.

(பொ—ரை) 2. இன்பூட்டும் தோளை மகிழுமாறு கொடுத்துத் திகழ்ந்து ஒளிவீசும் முத்துக்கள் ஆகிய பற்கள் பற்பலவற்றைக் காட்டுகின்ற கரும்பு போன்றவளால் காமுகன் தன் விருப்பம் கைகூடக் கலந்த ஆலிலை போலும்

குய்யத்தால் உண்டாகிய இருமல் நோயில் அகப்பட்டு மெலிந்து உருவம் வேறுபடுத்தப்பட்டு, வற்றித் தரையில் தடுமாறி விழுந்து வருந்திப் பல தடவையும் தொடர்ந்து தேய்ந்தே மாளுவான்.

அருஞ்சொற்பொருள்: சித்தித்து-கைகூடி; கொன்று-வெட்டப்பட்டு; உரு-உருவம்; அத்தி-நசுக்கப்பட்டு; தறை-தட்டை; பாகு-சர்க்கரைப் பாகு, தோள்; முத்து-முத்துப் போன்ற பற்கள்; சித்திக்க-கைகூட; ஒன்று-கலந்த; ஆல்-ஆலிலைபோலும் குய்யம்; ஐ-இருமல்; வத்தி-வற்றி; தறை-தரை.

(இ—பு) சித்தி-சித்தித்து என்பதன் விகாரம். கரும்பு-கரும்பு போன்ற இனிய சொற்களைப் பேசுபவள் அல்லது கரும்புபோல் விரும்பப்படுபவள் என்ற பொருளில் உவமை ஆகுபெயர். ஆல்-ஆலிலைக்கு முதலாகுபெயராகி, ஆலிலை போன்ற குய்யத்திற்கு உவமையாகுபெயராயிற்று. வத்தி-வற்றி, வினை எச்சம்.

இது நேரசை முதலில் வந்துள்ள கட்டளைக் கலித்துறை.

*எழுந்திருச கோரமதி யின்றொடர்பு கண்டே*
*யழுங்கியவ தன்பகைய ராவினைய டற்பா*
*னிழிந்துமிகு தோற்பையுமி சைந்துபெயர் கெட்ட*
*விழைந்தவிடர் மானமொடு வெவ்வழல்வி ழுந்தார்.*

**70**

(ப—ரை) 1. எழுந்த இரு சகோரம்—உயர எழுந்த இரண்டு சக்கரவாகப் பறவைக்கும், மதி—சந்திரனுக்கும் உண்டான, தொடர்பு கண்டு—நட்பைப் பார்த்து, அழுங்கிய—பொறாமை கொண்ட, அதன்பகை அராவினை—அந்த மதியின் பகையாகிய பாம்பை, அடர்ப்பான் இழிந்து—தண்டிக்கும் பொருட்டு இறங்கி, மிகு தோற்பையும் இசைந்து—மிக்க

தோல்வியையும் பெற்று, பெயர் கெட்ட—புகழ் அழிந்ததால், விழைந்த விடர்—விடத்தை விரும்பிய காமுகர், மானமொடு—மானத்தோடு, வெவ்வழல் விழுந்தார்—கொடிய தீயில் விழுந்தார்கள்.

(பொ—ரை) 1. உயர எழுந்த இரண்டு சக்கரவாகப் பறவைக்கும் சந்திரனுக்கும் உண்டான நட்பைப் பார்த்துப் பொறுமை கொண்ட அந்த மதியின் பகையாகிய பாம்பைத் தண்டிக்கும் பொருட்டு இறங்கி, மிக்க தோல்வியையும் பெற்றுப் புகழ் அழிந்ததால் விடத்தை விரும்பிய காமுகர் மானத்தோடு கொடிய தீயில் விழுந்தார்கள்.

(ப—ரை) 2. எழுந்த இரு சகோரம்—புடைத்தெழுந்த இரண்டு சக்கரவாகப் பறவையைப் போன்ற தனங்களுக்கும், மதியின்—சந்திரனைப் போன்ற முகத்திற்கும், தொடர்புகண்டு—உற்ற உறவினைப் பார்த்து, அழுங்கிய—வருந்திய, அதன்பகை அராவினை—அந்த மதியின் பகையாகிய பாம்பின் படத்தைப் போன்ற அல்குலை, அடர்ப்பான் இழிந்து — தண்டிக்கும் பொருட்டுத் தாழ்ந்து, மிகு தோற்பையும் இசைந்து—மிக்க தோல்வியையும் அடைந்து, பெயர் கெட்ட—புகழ் கெட்டதால், விழைந்த விடர்—விடத்தை விரும்பிய காமுகர், மானமொடு வெவ்வழல் விழுந்தார் — குற்றத்தோடும் கொடிய நரகில் விழுந்தார்கள்.

(பொ—ரை) 2. புடைத்தெழுந்த இரண்டு சக்கரவாகப் பறவையைப் போன்ற தனங்களுக்கும், சந்திரனைப் போன்ற முகத்திற்கும் உற்ற உறவினைப் பார்த்து வருந்திய, அந்த மதியின் பகையாகிய பாம்பின் படத்தைப் போன்ற அல்குலைத் தண்டிக்கும் பொருட்டுத் தாழ்ந்து மிக்க தோல்வியையும் அடைந்து, புகழ் கெட்டதால், விடத்தை விரும்பிய காமுகர், குற்றத்தோடும் கொடிய நரகில் விழுந்தார்கள்.

அருஞ்சொற்பொருள்: சகோரம்—சக்கரவாகப் பறவைகள், அப்பறவையைப் போன்ற தனங்கள்; அழுங்கிய—பொருமை கொண்ட; அடர்ப்பான்—தண்டிக்கும்பொருட்டு; தோற்பு—தோல்வி; பெயர்—புகழ்; மதி—சந்திரன்; விடர்—காமுகர்; மானம்—குற்றம்.

(இ—பு) சகோரம்—தனங்களுக்கு உவமையாகுபெயர். அரா—பாம்பின் படம் முதலாகுபெயர். படத்தைப் போன்ற அல்குலுக்கு உவமையாகுபெயர்.

இது கலிவிருத்தம்.

*சந்திர மண்டல முற்றெழு பந்துத வழ்ந்தன நாகவுலோ*
*கந்தனின் முத்துருள் வித்தலை யிட்டுமை கண்டமு*
*ருந்துமணிற்*
*சிந்திய மைகுழை காரறல் வெள்ளிதெ றுந்துக*
*ளானவிவை*
*முந்துண ராநரர் மர்க்கட மாவரை முக்கொர்ச*
*திப்பெயர்வார்.*
*71*

(ப—ரை) 1. சந்திரமண்டலம்உற்று-சந்திரமண்டலத்தை அடைந்து, எழுபந்துகள்—மேலும் உயர்ந்துசெல்லும் பந்துகள், தவழ்ந்தன-உருண்டனவாய், நாகஉலோகந்தனில்-தேவர் உலகத்தில், முத்துஉருள்வித்து—முத்துக்களை உருட்டுவித்து, அலையிட்டு—கடலில் வீழ்த்தியும், ஐகண்டம்—ஐந்து கண்டங்களிலும் உள்ள, முருந்து மணில்—வெண்மை பொருந்திய மண்ணில், சிந்திய—சிந்தின, மைகுழை—மையும் குழைகளும் முறையே, கார் அறல் வெள்ளி—கருமணலும் வெள்ளியுமாகத், தெறும் துகளான் இவை—துன்புறுத்தும் துகள்களாயின இவைகளை, முந்து உணரா நரர்—முன் உணராத மனிதர், மர்க்கடமா—குரங்குகளாக, ஓர் வரை முக்கு—ஒரு மலை முடக்கிற்கு, சதிப்பெயர்வார்—விரைவாக ஓடுவார்கள்.

(பொ—ரை) 1. சந்திரமண்டலத்தை அடைந்து மேலும் உயர்ந்துசெல்லும் பந்துகள் உருண்டனவாய்த் தேவர் உலகத்தில் முத்துக்களை உருட்டுவித்துக் கடலில் வீழ்த்தின; ஐந்து கண்டங்களிலும் உள்ள வெண்மை பொருந்திய மண்ணில் சிந்தின மையும் குழைகளும் முறையே கருமணலும் வெள்ளியுமாகத் துன்புறுத்தும் துகள்களாயின என இவைகளை முன் உணராத மனிதர்கள் குரங்குகளாக ஒரு மலை முடக்கிற்கு விரைவாக ஓடுவார்கள்.

(ப—ரை) 2. சந்திரமண்டல முற்று—சந்திரனைப் போன்ற முகத்தை எய்தி, எழு பந்து தவழ்ந்தன—எழுகின்ற பந்துகள், தவழ்ந்தனபோல், நாக உலோகந்தனில்—மலையிடமாகிய தனங்களினிடத்தில் படுமாறு, முத்து உருள் வித்து-முத்துக்களைப் போன்ற கண்ணீரைச் சிந்தி, அலையிட்டு—கருமணலில் வீழ்த்தி, மை கண்டமுருந்து மண்ணிற் சிந்திய—நீரோடு பொருந்திய மண்ணில் உதிர்த்த, மை குழை—மையும் குழைகளும், கார் அறல் வெள்ளி தெறுந்துகள்—கரிய மணலும் வெள்ளியைத் தோற்கடிக்கும் வெண்மையான சங்கின் துகளும், ஆனஇவை —ஆயின இவற்றை, முந்து உணரா நரர்—முன்னர் உணராத மக்கள், மர்க்கடமா—குரங்குகள் ஆகி, வரை—மணந்து கொண்ட, முக்கு—முயற்சிமிக்க, ஓர்சதிப்பெயர்வார்-ஒப்பற்ற கற்புடையாளையும் பிரிந்து உழல்வார்.

(பொ—ரை) 2. சந்திரனைப் போன்ற முகத்தை எய்தி, எழுகின்ற பந்துகள் தவழ்ந்தனபோல் மலையிடமாகிய தனங்களினிடத்தில் படுமாறு முத்துக்களைப் போன்ற கண்ணீரைச் சிந்தி கருமணலில் வீழ்த்தி, நீரோடு பொருந்திய மண்ணில் உதிர்த்த மையும் குழைகளும், கரிய மணலும் வெள்ளியைத் தோற்கடிக்கும் வெண்மையான சங்கின் துகளும் ஆயின. இவற்றை முன்னர் உணராத மக்கள் குரங்குகள் ஆகி மணந்து கொண்ட முயற்சி மிக்க ஒப்பற்ற கற்புடையாளையும் பிரிந்து உழல்வார்.

அருஞ்சொற்பொருள்: நாகஉலோகம்-தேவர் உலோகம், மலையிடமாகிய தனங்கள்; முத்து—முத்துகள், முத்துகளைப் போன்ற கண்ணீர்; அலை—கருமணல், கூந்தல்; தெறுதல்—தோற்கடித்தல்; முக்கு—முயற்சி; சதி—கற்புடைய மனைவி; மர்க்கடம்—குரங்கு.

(இ—பு) மை குழை – மையும் குழையும் உம்மைத் தொகை. மர்க்கடம் ஆ(க)—ஆக என்பது ஆ எனக் குறைந்து நின்றது கடைக்குறை. சந்திரமண்டலம்—முகம், பந்து—முலை, நாகம்—மலை, முலை, முத்து—கண்ணீர் ஆகியவை உவமையாகு பெயர்கள்.

இது அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*பெருந்த னம்படைத் தேழைபே தையரெனப்*
*பிறழ்ந்தவர் நச்சுக்கள்*
*ளருந்து வித்திட அவர்புயங் கண்ணென வரியகண்*
*காலென்னத்*
*தரும்ப தங்குழ லெனக்குழ லினைப்பயோ தரமெனத்*
*துடைதொண்டை*
*பொரும்ப யோதர நகமெனப் பிதற்றினோர்*
*பொருளெலா மிழப்போரே.*
**72**

(ப—ரை) 1. நச்சுக்கள் அருந்துவித்திட—நஞ்சுபோன்ற கள்ளை ஊட்டுவிக்க, பிறழ்ந்தவர்—அறிவு மயங்கியவர், பெருந் தனம் படைத்த—பெரிய செல்வத்தைப் பெற்ற. பேதையர்—பேதைமையுடையவரை, ஏழை என—ஏழை என்றும், அவர் புயம் கண் என—அவர்களுடைய தோளைக் கண் எனவும், அரிய கண் கால் என—அரிய கண்ணைக் கால் எனவும், தரும் பதம் குழல் என-தரும் பாதத்தைக் குழல் எனவும், குழலினைப் பயோதரம் எனவும்—குழலினை மேகம் எனவும், துடையைத் தொண்டை எனவும் – தொடைகளைக் தொண்டை எனவும்,

பொரும் பயோதரம்—பொருந்திய மலையை, நகம் எனவும்—நகம் எனவும், பிதற்றினோர்-பிதற்றினவர்கள், பொருள்எலாம் இழப்போரே-பொருள்கள் யாவற்றையும் இழப்பவரே யாவர்.

(பொ—ரை) 1. நஞ்சு போன்ற கள்ளை ஊட்டுவிக்க அறிவு மயங்கியவர் பெரிய செல்வத்தைப் பெற்ற பேதைமையுடையவரை ஏழை என்றும், அவர்களுடைய தோளைக் கண் எனவும், அரிய கண்ணைக் கால் எனவும், தரும் பாதத்தைக் குழல் எனவும், குழலினை மேகம் எனவும், துடையைத் தொண்டை என்வும், பொருந்திய மலையை நகம் எனவும் பிதற்றினோர் பொருள்கள் யாவற்றையும் இழப்பவரே யாவர்.

(ப—ரை) 2. நச்சுக்கள் அருந்துவித்திடப் பிறழ்ந்தவர்—கண்ணால் காமப் போதை யூட்டப் பெற்றதால் அறிவு மயங்கியவர், பெருந்தனம்படைத்த-பெரியநகில்களைப் பெற்றுள்ள, பேதையர்—பெண்களை, ஏழை என—ஏழை என்ற பெயரால் அழைக்கவும், அவர் புயம்—அவருடைய தோள்களை, கண் என—கணுவையுடைய மூங்கில் எனவும், அரிய கண்—அரிய கண்ணை, கால் என—காலன் எனவும், தரும் பதம்—பேசும் சொல்லை, குழல் என—குழலைப் போல இனியது எனவும், குழலினை-கூந்தலை, பயோதரம் என-மேகம் எனவும், துடை—தொடையை, தொண்டை என—யானைத் துதிக்கை எனவும், பொரும் பயோதரம்-தாக்கும் நகிலை, நகம் என-மலை எனவும், பிதற்றினோர்—உளறினோர், பொருள் எலாம் இழப்போரே—அறம் முதலிய எல்லாப் பொருள்களையும் இழப்பவரே யாவர்.

(பொ—ரை) 2. கண்ணால் காமப் போதை யூட்டப் பெற்றதால் அறிவு மயங்கியவர், பெரிய நகில்களைப் பெற்றுள்ள பெண்களை ஏழை என்ற பெயரால் அழைக்கவும் அவருடைய தோள்களைக் கணுவையுடைய மூங்கில் எனவும், அரிய கண்ணைக் காலன் எனவும், பேசும் சொல்லைக் குழலைப் போல இனியது எனவும், கூந்தலை மேகம் எனவும், தொடையை யானைத் துதிக்கை எனவும், தாக்கும் நகிலை மலை

எனவும் உளறினோர் அறம் முதலிய எல்லாப் பொருள்களையும் இழப்பவரே யாவர்.

அருஞ்சொற்பொருள்: பிறழ்ந்தவர்-அறிவு மயங்கியவர், தனம்—செல்வம், நகில்; பேதையர்—பேதைமையுடையவர்; புயம்—தோள்; கண்—கணு, மூங்கில்; கால்—காலன்; பதம்—பாதம்; குழல்—கூந்தல், புள்ளாங்குழல்; பயோதரம்—மேகம், நகில்; நகம்—மலை; தொண்டை—யானைத் துதிக்கை.

(இ—பு) நச்சுக் கள்—நஞ்சு போன்ற கள், உவமைத் தொகை. கண்-கணு, சினையாகுபெயராய் மூங்கிலைக் குறித்தது. மேகம், பண்பாகு பெயராய்க் கருமையைக் குறித்தது. கால்—காலன் என்ற சொல்லின் விகாரம்.

கருத்துநயம்: கள்ளால் அறிவு மயங்கியவர் ஓர் உறுப்பை மற்றோர் உறுப்பாகக் காண்கின்றனர். அவருக்குத் தோள் கண்ணாகவும், கண் காலாகவும், கால் குழலாகவும், குழல் மேகமாகவும், துடை தொண்டையாகவும், நகில் நகமாகவும் தோன்றுகிறது. இந்நிலையில் அவர்கள் தம் கையில் உள்ள எல்லாப் பொருள்களையும் இழக்கின்றனர். ஆனால் காமத்தால் அறிவு மயங்கியவர் கள்ளால் அறிவு மயங்கியவரைப் போலவே ஓர் உறுப்பை மற்றோர் உறுப்பாகக் கண்டபோதிலும், சொல்லளவில் ஓர் உறுப்பை மற்றோர் உறுப்பாகக் கூறினும் பொருளில் அதே உறுப்பைச் சுட்டுகின்ற பொருள் உணர்ச்சியுடையவராக இருந்துகொண்டே எல்லாப் பொருள்களையும் ஒருங்கே இழக்கின்றனர். இதனால் கள்ளால் அறிவு மயங்கியவரினும் காமத்தால் அறிவு மயங்கியவர் பெருங்கேடு அடைதல் நயமாக உணர்த்தப்படுகிறது.

அன்றியும் அறிவு மயங்கிய நிலையில் தோள் கண்ணாகவும், கண் காலாகவும், கால் குழலாகவும், குழல் மேகமாகவும் தோன்றும்போது திரிபுணர்ச்சி எவ்வாறு மேலும் மேலும் வேறுபட்டுத் திரிந்து செல்கிறது என்பது அழகாக உணர்த்தப்படுகிறது.

பொருளுணர்ச்சியைத் திரித்துக் கைப்பொருளை இழக்கச் செய்யும் கள்ளினும், பொருளுணர்ச்சியைச் சிறக்கச் செய்து எல்லாப் பொருளையும் இழப்பிக்கும் காமம் மிகக் கொடியது என்று விளக்கியவாறு.

இதுவும் அறுசீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*நிகழ்தையல் வத்திரநற் சோம னெனக் கூழையினை*
*நீளமென்ன*
*நகுமுத்தம் பவளமென வம்புயமோ மூங்கிலென*
*நடுவைக் கோடென்*
*றிகழ்கின்ற கடிதடத்தைப் பணவரவென் றிடும்படிற*
*ரெனும்பேர்த் தூர்த்த*
*ருகுபொய்தல் கெடவரற்பே ரவர்குழுவின்*
*ணெனக்கொடுயி ரொடுமாண்டோரே.*
***73***

(ப—ரை) 1. நிகழ் தையல் வத்திரம் நற்சோமன் என— உள்ள தையல் ஆடையை நல்ல ஆடை எனவும், கூழையினை நீளம் என்ன—குட்டையை நீட்டம் எனவும், நகு முத்தம் பவளம் என—ஒளிரும் முத்தைப் பவழம் எனவும், அம்புயமோ மூங்கில் என—தாமரையை மூங்கில் எனவும், நடுவைக் கோடு என—நடுவுநிலையை ஓரம் எனவும், இகழ்கின்ற கடிதடத்தை— இகழ்கின்ற புது வழியை, பணவரவு என்றிடும்—பண வரவிற் குரியவழி என்றும் கூறுகின்ற, படிறர் எனும் பேர்த்தூர்த்தர்— வஞ்சகர் என்னும் பெயரையுடைய காமுகர், உகுபொய்தல்— உதிர்க்கும் பொய்யால், கெடவரல் பேரவர் குழு—கெட வருக என்ற விளையாட்டு மகளிர் கூட்டம், விண் எனக் கொடு— சொர்க்கம் என்று கொண்டதால், உயிரொடு மாண்டோரே— உயிர் இருக்கவே இறந்தவர் ஆவர்.

(பொ—ரை) 1. உள்ள தையல் ஆடையை நல்ல ஆடை எனவும், குட்டையை நீட்டம் எனவும், ஒளிரும் முத்தைப்

பவழம் எனவும், தாமரையை மூங்கில் எனவும், நடுவுநிலையை ஓரம் எனவும், இகழ்கின்ற புதுவழியைப் பணவரவிற்குரிய வழி என்றும் கூறுகின்ற வஞ்சகர் என்னும் பெயரையுடைய காமுகர் உதிர்க்கும் பொய்யால் கெடவருக என்ற விளையாட்டு மகளிர் கூட்டம் சொர்க்கம் என்று கொண்டதால் உயிர் இருக்கவே இறந்தவர் ஆவர்.

(ப—ரை) 2. நிகழ்தையல் வத்திரம்—வரும் பெண்ணின் முகம், நற்சோமன் என—முழுமதி எனவும், கூழையினை—கூந்தலை, நீளம் என—நீளமானது எனவும், நகுமுத்தம்—சிரிக்கின்ற வாயை, பவளம் என—பவழம் போலச் சிவந்தது எனவும், அம்புயமோ—அழகிய தோளோ, மூங்கில் என—மூங்கில் எனவும், நடுவை-இடுப்பை, கோடு எனவும்-கொம்பு எனவும், இகழ்கின்ற கடிதடத்தை—இகழ்கின்ற குய்யத்தை, பண அரவு என்றிடும்-படத்தையுடைய பாம்பு என்று கூறும், படிறர் எனும் பேர்த்தூர்த்தர்—வஞ்சர் என்னும் பெயரை யுடைய காமுகர், உகுபொய்தல்—பிரியும் தோழியால், கெட வரற் பேரவர் குழு—விளையாட்டு மகளிர் என்னும் பெயர் பெற்ற கூட்டம், விண் எனக் கொடு—சொர்க்கம் என்று கொண்டு அவரைக் கூடுதலால், உயிரொடு மாண்டோரே—அவர் உயிர் இருக்கவும் இறந்தவரே யாவர்.

(பொ—ரை) 2. வரும் பெண்ணின் முகம் முழுமதி எனவும், கூந்தலை நீளமானது எனவும், சிரிக்கின்ற வாயைப் பவழம்போல் சிவந்தது எனவும், அழகிய தோளோ மூங்கில் எனவும், இடுப்பைக் கொம்பு எனவும், இகழ்கின்ற குய்யத்தை படத்தையுடைய பாம்பு என்றும் கூறும், வஞ்சர் என்னும் பெயரையுடைய காமுகர், பிரியும் தோழியால் விளையாட்டு மகளிர் என்னும் பெயர்பெற்ற கூட்டம் சொர்க்கம் என்று கொண்டு அவரைக் கூடுதலால், அவர் உயிர் இருக்கவும் இறந்தவரே யாவர்.

அருஞ்சொற்பொருள்: வத்திரம் – ஆடை, முகம்; சோமன் – ஆடை, சந்திரன்; கூழை – கூந்தல், குட்டை; அம்புயம்–தாமரை, அழகிய தோள்; கடிதடம்–புதிய வழி, குய்யம்; பணவரவு–பணம் வருதற்குரிய வழி, பணம்அரவு–படத்தையுடைய பாம்பு; தூர்த்தர்–காமுகர்; பொய்தல்–பொய் விளையாட்டு, தோழி; கெடவரல்–கெட வருக, விளையாட்டு; 'கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு' தொல்காப்பியம். 'ஓரையாடும் பொய்தல் மகளிரொடு' என்று வரும் வரியில் பொய்தல் விளையாட்டைக் குறிக்கிறது. விண்–சொர்க்கம்.

(இ—பு). முத்தம்–பற்களுக்கு உவமையாகு பெயராகிப் பின் வாய்க்குத் தானியாகு பெயராயிற்று. அம்புயம்–அப்புஜம் (அம்பு–நீர், ஜம்–பிறந்தது) நீரில் பிறந்தது என்ற பொருளில் தாமரையைக் குறித்தது காரண இடுகுறிப் பெயர். அழகிய புயம் என்ற பொருளில் பண்புத் தொகை. பணஅரவு–படத்தையுடைய பாம்பு, இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.

இதுவும் அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

## வேறு

*மயக்குநடை யன்னங்கண் மீனுற் சாயல்*
*மஞ்ஞைகு ழன் மேகத்தாற் குருக்கண்யானை*
*புயக்கழையாற் சொற்கிளி பற்களுமுள் வித்தாற்*
*புகலல்குற் பட்டமிடை யந்த ரத்தா*
*னயப்படுமிந் நாரியர்தா மஞ்சட் பூச்சு*
*நன்னீரா டுதலாடை நலம்பூண் வாசச்*
*செயற்கைகளால் விளங்குவரல் லாலி யற்கை*
*தீநாற்ற மசுசியரு வருப்பின் சேர்வே.* 74

(ப—ரை) மயக்கும் அன்னம் நடை ஆல்—ஆளை மயக்குகின்ற அன்னத்தைப் போன்ற நடையாலும், மீன் கண் ஆல்—கயல்மீனைப்போல் பிறழுகின்ற கண்ணாலும், மஞ்ஞை சாயல் ஆல்—மயில் போன்ற சாயலாலும், மேகம் குழல் ஆல்—மேகம் போன்ற கரிய கூந்தலாலும், யானை குருக்கண் ஆல்—யானையின் கொம்புகளைப்போல் விளங்குகின்ற இடமாகிய தனங்களாலும், கழை புயம் ஆல்—மூங்கில் போன்ற தோள்களாலும், கிளி சொல் ஆல்—கிளிபோல் பேசுகின்ற இனிய சொல்லாலும், உள் கழுமு பல் ஆல்—வாயினுள்ளே நிறைந்திருக்கின்ற பற்களாலும், வித்தம் புகல் ஆல்—பொன் போன்ற உடலாலும், பட்டம் அல்குல் ஆல்-சீலையால் மறைக்கப்பட்டுள்ள அல்குலாலும், அந்தரம் இடை ஆல்—வெளியைப் போன்ற இடையாலும், நயப்படும் இந்நாரியர் தாம்—விரும்பப்படுகின்ற இந்தப் பெண்கள், மஞ்சட்பூச்சு—மஞ்சள் பூசுதல், நன்னீர் ஆடுதல்—நல்ல நீரில் குளித்தல், நலம் ஆடை—நல்ல ஆடைகளை உடுத்தல், நலம் பூண்—நல்ல அணிகளைப் பூணுதல், நலம் வாசம்—நல்ல மணப் பொடிகளைப் பூசுதல் ஆகிய, செயற்கைகளால்—செயற்கைப் பொருள்களால், விளங்குவர் அல்லால்—சிறந்து தோன்றுவார்களேயல்லாமல். இயற்கை—இயற்கையில். தீ நாற்றம்—தீய நாற்றமும், அசுசி—அசுத்தமும், அருவருப்பின் சேர்வே – அருவருக்கத்தக்கவைகளும் சேர்ந்துள்ள ஒரு தொகுப்பே ஆவர்.

(பொ—ரை) ஆளை மயக்குகின்ற அன்னத்தைப் போன்ற நடையாலும், கயல்மீனைப் போலப் பிறழுகின்ற கண்ணாலும், மயில் போன்ற சாயலாலும், மேகம் போன்ற கரிய கூந்தலாலும், யானையின் கொம்புகளைப்போல் விளங்குகின்ற தனங்களாலும், மூங்கில் போன்ற தோள்களாலும், கிளிபோல் பேசுகின்ற இனிய சொல்லாலும், வாயினுள்ளே நிறைந்திருக்கின்ற பற்களாலும், பொன் போன்ற உடலாலும், சீலையால் மறைக்கப்பட்டுள்ள அல்குலாலும், வெளியைப் போன்ற இடையாலும், விரும்பப்படுகின்ற இந்தப் பெண்கள்

மஞ்சள் பூசுதல், நல்ல நீரில் குளித்தல், நல்ல ஆடைகளை உடுத்தல், நல்ல அணிகளைப் பூணுதல், நல்ல மணப் பொடிகளைப் பூசுதல் ஆகிய செயற்கைப் பொருள்களால் சிறந்து தோன்றுவார்களேயல்லாமல், இயற்கையில் தீய நாற்றமும், அசுத்தமும், அருவருக்கத்தக்கவைகளும் சேர்ந்துள்ள ஒரு தொகுப்பே ஆவர்.

அருஞ்சொற்பொருள்: மஞ்ஞை—மயில், குழல்—கூந்தல், குருக்கண்-விளங்குகின்ற இடம், யானை-யானையின் தந்தங்கள், கழை—மூங்கில், புயம்—தோள்கள், கழுமு—நிறை, வித்தம்—பொன், புகல்—உடம்பு, பட்டம்—சீலை, அந்தரம்—வெளி, அசுசி—அசுத்தமானது, சேர்வு—தொகுப்பு.

(இ—பு) யானை முதலாகு பெயராய்த் தந்தங்களைக் குறித்தது. வித்தம் என்ற சொல் வித்து என விகாரப்பட்டது.

இது எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*தெள்ளு மிரவுரவஞ் செந்துத்தா னம்பூதி*
*பிள்ளுறுமா பூதிகும் பீபாக—மள்ளலொடு*
*கூடசா லம்பெண் குழல்வாய்மெய் கொம்மைவயின்*
*றேடுதுடக் குப்பகமேழ் தீ.* 75

(ப—ரை) பெண் குழல்—பெண்ணினுடைய கூந்தல், தெள்ளும் இரவுரவம்—தெளிவான இரவுரவம் என்னும் நரகம், வாய்—வாயானது, செந்துத்தானம்—செந்துத்தானம் என்னும் நரகம், மெய்—உடல், பூதி—பூதி என்னும் நரகம், கொம்மை—முலை, பிள்ளுறு மாபூதி—துண்டாக்குகின்ற மாபூதி என்னும் நரகம், வயின்—வயிறு, கும்பீபாகம்—கும்பீபாகம் என்னும் நரகம், தோடு துடக்கு—பொருந்திய சூதகம், அள்ளல்—அள்ளல் என்னும் பெயரையுடைய சேறு நிறைந்த நரகம், பகம்—அழகு, கூடசாலம் என்னும் நரகம் ஆகி, ஏழ்தீ—இவை ஏழும் ஏழு தீய நரகங்களாகும்.

(பொ—ரை) பெண்ணினுடைய கூந்தல் தெளிவான இரவுரவம் என்னும் நரகம், வாயானது செந்துத்தானம் என்னும் நரகம், உடல் பூதி என்னும் நரகம், முலை துண்டாக்குகின்ற மாபூதி என்னும் நரகம், வயிறு கும்பீபாகம் என்னும் நரகம், பொருந்திய சூதகம் அள்ளல் என்னும் சேறு நிறைந்த நரகம், அழகு கூடசாலம் என்னும் நரகம் ஆக இவை ஏழும் ஏழு தீய நரகங்களாகும்.

அருஞ்சொற்பொருள்: குழல்—கூந்தல்; தெள்ளும்—தெளிவான; பிள்—பிளவு, துண்டு; வயின்—வயிறு; தோடு—பொருந்திய; துடக்கு—சூதகம்; அள்ளல்—சேறு; பகம்—அழகு, இரவுரவம், செந்துத்தானம், பூதி, மாபூதி, கும்பீபாகம், அள்ளல், கூடசாலம் ஆகியவை ஏழு நரகங்களாகும்.

இது இருவிகற்ப நேரிசை வெண்பா.

*தீயெழு பேத மிருண்மிக்க மேகமுஞ் செய்யபுசிப்*
*பாயு மிடமும் பலவுட லுங்களி றுந்தசையுந்*
*தோயு மலச்சேற் றிருப்புங் குழைந்திழி சோணிதமு*
*மாய மறைப்பு மிரவுர வாதி மகளிர்கண்ணே.* 76

(ப—ரை) இருள் மிக்க மேகமும்—கருமை மிகுந்த மேகத்தைப் போன்ற கூந்தலும், புசிப்பு ஆயும் செய்ய இடமும்—உண்ணும் உணவின் சுவையை ஆராயும் சிவந்த வாயும், புலவு உடலும்—புலால் நாற்றம் வீசும் உடம்பும், களிறுஆம் தசையும்—யானையின் தந்தங்களைப் போன்ற தனங்களாகிய தசைத் திரளும். தோயும் மலச் சேற்று இருப்பும்—பொருந்துகின்ற மலத்தின் இருப்பிடமாகிய குடலும், குழைந்து இழி சோணிதமும்—குழைந்து வழியும் செந்நீரும், மாய மறைப்பும்—மயக்குகின்ற மறைவிடமும் ஆகிய இவ் வேழும், மகளிர் கண்ணே—பெண்களிடத்தில் உள்ள, இரவுர வம் ஆதி—இரவுரவம், செந்துந்தானம், பூதி, மாபூதி, கும்பீ

பாகம், அள்ளல், கூடசாலம் என்று கூறப்படும், ஏழு தீ பேதம்–ஏழு நரக வகையாகும்.

(பொ—ரை) கருமை மிகுந்த மேகத்தைப் போன்ற கூந்தலும், உணவின் சுவையை ஆராயும் சிவந்த வாயும், புலால் நாற்றம் வீசும் உடம்பும், யானையின் தந்தங்களைப் போன்ற தனங்களாகிய தசைத்திரளும், பொருந்துகின்ற மலத்தின் இருப்பிடமாகிய குடலும், குழைந்து வழியும் செந்நீரும், மயக்குகின்ற மறைவிடமுமாகிய இவ்வேழும் பெண்களிடத்திலுள்ள இரவுரவம், செந்துத்தானம், பூதி, மாபூதி, கும்பீபாகம், அள்ளல், கூடசாலம் என்று கூறப்படும் ஏழு நரக வகைகளாகும்.

அருஞ்சொற்பொருள்: புசிப்பு–உணவு, புலவு–புலால் நாற்றம்.

(இ—பு) மேகம்–கூந்தலுக்கு உவமையாகுபெயர். யானை – தந்தங்களுக்கு முதலாகு பெயராகிப் பிறகு தனங் களுக்கு உவமையாகு பெயராயிற்று.

இது நேரசை முதலாக வந்த கட்டளைக் கலித்துறை.

*பல்லிதழ்க் கஞ்சிமுத் தந்துகிர் வாரியிற் பாய்ந்தனகண்*
*கொல்லுமம் மங்கண்டு மான்யானை கான்போங்*
*குழன்முகத்தாற்*
*செல்லொடு திங்கள்விண் ணுற்றதிஃ தோர்ந்தெவர்க்*
*குந்தெரியா*
*வில்லடைந் தார்தவர் காமுகர் பட்டளற் றேகினரே.*

77

(ப—ரை) பல் இதழ்க்கு அஞ்சி முத்தும் துகிரும்– பல்லுக்குப் பயந்து முத்துக்களும், வாயின் உதடுகளுக்குப் பயந்து பவழமும், வாரியிற் பாய்ந்தன–கடலில் வீழ்ந்தன;

கண்கொல்லும் அம்மம்கண்டு மான்யானை—கண்களைக் கண்டு பயந்து மானும், கொல்லும் தனங்களைக் கண்டு பயந்து யானையும், கான்போம்—காட்டிற்குள் போயின; குழல் முகத்தால்—கூந்தலுக்குத் தோற்ற மேகத்துடன், செல்லொடு திங்கள்—முகத்திற்குத் தோற்ற சந்திரன், விண்ணுற்றது—வானத்தையடைந்தான்; இஃது ஓர்ந்து—இதை உணர்ந்து, தவர்எவர்க்கும் தெரியா இல் அடைந்தார்—தவம் செய்த மேலோர் எவர்க்குந் தெரியாத வீட்டை அடைந்தார்கள், காமுகர்பட்டு—காமுகர் அவர்களுடைய வலையில் அகப்பட்டு, அளற்று ஏகினர்—நரகத்தை அடைந்தனர்.

(பொ—ரை) பல்லுக்குப் பயந்து முத்துக்களும், வாயின் உதடுகளுக்குப் பயந்து பவழமும் கடலில் வீழ்ந்தன. கண்களைக் கண்டு பயந்து மானும், கொல்லும் தனங்களைக் கண்டு பயந்து யானையும் காட்டிற்குள் போயின. கூந்தலுக்குத் தோல்வியுற்ற மேகத்துடன், முகத்திற்குத் தோற்ற சந்திரன் வானத்தையடைந்தான். இத்தன்மையை உணர்ந்து தவஞ் செய்த மேலோர் எவர்க்குந் தெரியாத வீட்டை அடைந்தார்கள். காமுகர் அவர்களுடைய வலையில் அகப்பட்டு நரகத்தை அடைந்தனர்.

அருஞ்சொற்பொருள்: துகிர்—பவழம், அம்மம்—முலை, வாரி—கடல், செல்—மேகம், குழல்—கூந்தல், அளறு—நரகம்.

(இ—பு) அளற்று(ள்)அளறு+உள். நிலைமொழியில் றகரஒற்று வேற்றுமை உருபு தொகவும் இரட்டித்துநின்றது.

விளக்கம்: வென்ற தவத்தினர் மட்டும் வீடு பேற்றையடைய, தோற்ற ஏனையோர் தத்தம் இயல்புக்கேற்ற இடத்தையடைதல் நயமாக உணர்த்தப்பட்டுள்ளது. மேலும் வென்ற தவத்தினர் வெற்றிப் பரிசுபோல் வீடுபேற்றையடையாநிற்பத், தோற்ற நல்லன பலவும் தத்தமக்குப் பாதுகாப்பான இடத்தை நாடி ஒளியவும், காமுகர் மட்டும் தமக்கு விருப்பமில்லாத நரகத்தை அடைவதாகக் கூறுவதும் நயமுடையது.

தோற்றவர் ஓடுவதும், பயந்தவர் ஒளிவதும் இயற்கை எனவே தோல்வி அடைந்ததும் அவை தத்தமக்கு உரிய பாதுகாப்பான இடத்தை நோக்கி ஓடி உய்ந்தன. ஆனால் காமுகர் மட்டும் தமக்கு மேலும் துன்பத்தை விளைவிக்கின்ற நரகத்தை நாடுவதாகக் கூறுவது காமத்தின் கொடுமையை நன்கு வலியுறுத்துகிறது. இப்பாட்டில் ஏதுத் தற்குறிப்பேற்ற அணி அமைந்துள்ளது.

இதுவும் நேரசை முதலாக வந்த கட்டளைக் கலித்துறை.

*பேதை யொடுமாயை வஞ்சனி யாட்டிப் பெயர்க்கிசைய*
*மூது வருந்துவர் மையல்செய் வார்பொருண் முன்கவர்வா*
*ரோதி யலைப்பார் புமான்மைந்த னெனென் றுதாகரித்த*
*தேது விடனு டவப்பேர்கொ லாங்குழன் றேற்பித்ததே.*
*78*

(ப—ரை) பேதையொடு–பேதை என்ற பெயருடன், மாயை, வஞ்சனி, ஆட்டிப் பெயர்க்கு இசைய – மாயை, வஞ்சனி, ஆட்டி என்ற பெயர்களுக்குப் பொருந்த, முறையே, மூது அருந்துவர்–பழமையைச் சுவைப்பார், மையல் செய்வார்–மயக்குவார், பொருள் முன்கவர்வார்–பொருளை முன்னர் கவர்ந்துகொள்வார், ஓதி அலைப்பார்–பூனை எலியை வருத்துவதைப்போல் வருத்துவார், புமான்–ஆண்மகன், மைந்தன் நான்என்று–வலிமையுடையவன் நான் என்று, உதாகரித்தது– உதாரணமாகத் தன்னைக் காட்டுவதற்கும், விடன்–காமுகன், ஆங்கு உழன்று ஏற்பித்தது–அங்கே மனஞ் சுழன்று அத் துன்பங்களை ஏற்கச் செய்ததற்கும், ஏது–காரணம், நாட– ஆராயின், அப்பேர்கொல் – அவரவர்களுடைய பெயரே போலும். ஓதி அலைப்பார் என்பதற்கு வசை பாடிப் பாடி வருத்துவர் என்றும் கூறலாம்.

(பொ—ரை) பேதை என்ற பெயருடன், மாயை, வஞ்சனி, ஆட்டி என்ற பெயர்களுக்குப் பொருந்த முறையே

பழமையைச் சுவைப்பார், மயக்குவார், பொருளை முன்னர் கவர்ந்துகொள்வார், பூனை எலியை வருத்துவதைப் போல வருத்துவார். ஆண்மகன் வலிமையுடையவன் நான் என்று உதாரணமாகத் தன்னைக் காட்டுவதற்கும், காமுகன் அங்கே மனஞ் சுழன்று அத்துன்பங்களை ஏற்கச் செய்ததற்கும், காரணம் ஆராயின் அவரவர்களுடைய பெயரே போலும்.

அருஞ்சொற்பொருள்: மூது-பழமை; ஓதி-பூனை, பாடி; புமான்—ஆண்மகன்; உதாகரி—உதாரணங்காட்டு; உழன்று—மனஞ் சுழன்று; விடன்—காமுகன்; ஏது—காரணம்; நாட—ஆராய.

(இ—பு) ஆட்டி—வினையாலணையும் பெயர்.

விளக்கம்: பேதை என்ற பெயருக்கேற்பப் பழமையைச் சுவைப்பதும், மாயை என்ற பெயருக்கேற்ப மயக்குவதும், வஞ்சனி என்ற பெயருக்கேற்பப் பொருளை முன் கவர்வதும், ஆட்டி என்ற பெயருக்கேற்ப வருத்துவதும், அவரவர்க்குப் பெயரொடு பொருந்தும் இயல்பு ஆயிற்று. அதுபோலவே ஒரு நல்ல ஆண்மகன் அத்தகைய துன்பங்களை வெல்லும் வலிமை பெற்றதற்குக் காரணம் அவன் மைந்தன் என்ற பெயரைப் பெற்றதும், காமுகன் தன் மனஞ் சுழன்று அத்தகைய துன்பங்களை ஏற்பதற்குக் காரணம் அவன் விடன் என்னும் பெயரைப் பெற்றதும் ஆகுமோ என்று கூறுகிருர்.

இது நேரசை முதலில் வந்துள்ள கட்டளைக் கலித்துறை.

***மைந்தரை நெய்க்குடத் தோடிரும் பாக்கி மடந்தையர்தாஞ்***
***செந்தழல் காந்தமு மாய்முள்ளித் தேனைத் திளைத்தருந்தி***
***நைந்துடன் மெல்லிய ராகிமுக் காலா டைந்துகவன்***
***றந்தகன் கண்ணுற் றிடமுன்பு சென்றங் ககல்கிலரே.***

**_79_**

(ப—ரை) மைந்தரை—இளைஞர்களை, நெய்க்குடத்தோடு இரும்பு ஆக்கி—நெய்க்குடமும் இரும்பும் ஆக்கி, மடந்தையர் தாம்—பெண்களாகிய தாங்கள், செந்தழலும் காந்தமும் ஆய்—அந்த நெய்க்குடத்திலுள்ள நெய்யை உருக்கும் செந்நெருப்பும், இரும்பைக் கவரவல்ல காந்தமும் ஆகியதால், அவ்விளைஞர்கள், முள்ளித் தேனைத் திளைத்து அருந்தி—முள்ளிச் செடி போன்ற அப்பெண்ணிடத்துக் கலந்து அதன் தேன்போன்ற அவளுடைய நலத்தை நுகர்ந்து மயங்கி, உடல் நைந்து மெல்லியர் ஆகி—உடல் இளைத்து மெலிந்தவர் ஆகி, முக்காலால் நடந்து—ஊன்றுகோலாகிய காலோடும் மூன்று கால்களால் நடந்து, கவன்று—வருந்தி, அந்தகன் கண்ணுற்றிட—எமன் பார்க்க, முன்பு சென்று—அவனுடைய ஊருக்குத் தனக்குரிய இயற்கையான ஆயுள் முடிவதற்கு முன்னதாகவே போய், அங்கு அகல்கிலர்—அந்த எமபுரத்தை விட்டும் அவர்கள் நீங்கமாட்டாதவர் ஆகின்றனர்.

(பொ—ரை) இளைஞர்களை நெய்க்குடமும் இரும்பும் ஆக்கிப் பெண்களாகிய தாங்கள், அந்த நெய்க்குடத்திலுள்ள நெய்யை உருக்கும் செந்நெருப்பும் இரும்பைக் கவரவல்ல காந்தமும் ஆகியதால் அவ்விளைஞர்கள் முள்ளிச்செடி போன்ற அப்பெண்ணிடத்துக் கலந்து அதன் தேன் போன்ற அவளுடைய நலத்தை நுகர்ந்து, மயங்கி, உடல் இளைத்து மெலிந்தவர் ஆகி, ஊன்றுகோலாகிய காலோடும் மூன்று கால்களால் நடந்து வருந்தி எமன் பார்க்க அவனுடைய ஊருக்குத் தனக்குரிய இயற்கையான ஆயுள் முடிவதற்கு முன்னதாகவே போய் அந்த எமபுரத்தை விட்டும் அவர்கள் நீங்க மாட்டாதவர் ஆகின்றனர்.

அருஞ்சொற்பொருள்: கவன்று-வருந்தி, அந்தகன்-யமன்.

(இ—பு) முள்ளி-முள்ளிச் செடி போன்ற பெண், உவமையாகுபெயர்.

இதுவும் நேரசை முதலில் வந்துள்ள கட்டளைக் கலித்துறை.

*விளக்கிய பித்தளை போன்முடை மேனி மினுக்கெழிற்றீத்*
*தளைத்திடு பொன்விலங் காம்வஞ்ச வார்த்தையின்*
*றண்மைவலை*
*கொளத்துணி கத்தரி போன்றுண்ணல் கூடல்*
*குறித்தஉண்மா*
*லுளைக்குழி விட்டி லசுணங் கரிவீழ்ந் துழல்விடரே. 80*

(ப—ரை) விளக்கிய பித்தளைபோல்—விளக்கின பித்தளை பளபளப்பதைப்போல, முடைமேனி மினுக்கு எழில்வீழ்ந்து—முடைநாற்றம் வீசும் உடம்பின் மினுக்கிய அழகை விரும்பி, கூடல் உழல் விடர்—பெண்களைக் கூடற்கு வருந்துகின்ற காமுகன், எழில் தீ விட்டில்—அழகாகத் தோன்றும் நெருப்பில் விழும் விட்டிற் பூச்சியையும், தளைத்திடு பொன் விலங்குஆம்-பிணைக்கின்ற பொன்னால் செய்யப்பட்ட விலங்கு ஆகும், வஞ்ச வார்த்தையின் தண்மை வீழ்ந்து உழல் விடர்—அவர்களுடைய வஞ்சனை பொருந்திய பேச்சின் இனிமையைக் கேட்டற்கு விரும்பி வருந்துகின்ற காமுகர், கத்தரி அசுணம்—கத்தரி என்னும் கடிய பறையோசையைக் கேட்டு வருந்தும் அசுண மாவையும், வலை கொளத் துணி உண்ணல் குறித்த உள்மால்-அவர்கள் விரிக்கும் வலையில் விழத் துணிவுகொண்டு, அவர்களை நுகர்தற்குக் கருதிய, உளத்தில் மயக்கம் கொண்டவர்கள், உளைக் குழி வீழ்ந்து உழல் கரிபோன்று ஆம்—சேறு நிரம்பிய புதைகுழியில் விழுதலை விரும்பி வீழ்ந்து வருந்துகின்ற யானையையும்-போன்றவர்கள் ஆவார்கள்.

(பொ—ரை) விளக்கின பித்தளை பளபளப்பதைப்போல் முடைநாற்றம் வீசும் உடம்பின் மினுக்கிய அழகை விரும்பிப் பெண்களைக் கூடற்கு வருந்துகின்ற காமுகர், அழகாகத் தோன்றும் நெருப்பில் விழும் விட்டிற் பூச்சியையும், பிணைக்கின்ற பொன்னால் செய்யப்பட்ட விலங்கு ஆகும் அவர்களுடைய வஞ்சனை பொருந்திய பேச்சின் இனிமையைக் கேட்டற்கு விரும்பி வருந்துகின்ற காமுகர், கத்தரி என்னும்

கடிய பறையோசையைக் கேட்டு வருந்தும் அசுண மாவை யும் அவர்கள் விரிக்கும் வலையில் விழத் துணிவு கொண்டு அவர்களை நுகர்தற்குக் கருதிய உளத்தில் மயக்கம் கொண்ட வர்கள் சேறுநிரம்பிய புதைகுழியில் விழுதலை விரும்பி விழுந்து வருந்துகின்ற யானையையும் போன்றவர்கள் ஆவார்கள்.

அருஞ்சொற்பொருள்: முடை மேனி—முடை நாற்றம் வீசும் உடல், மினுக்கு எழில்—மினுக்கிய அழகு, விடர்—காமு கர், விட்டில்—விட்டிற் பூச்சி, கத்தரி—ஒருவகைப் பறவை, அசுணம்—அசுணமா, துணி—துணிவு, உண்ணல்—நுகர்தல், மால்—மயக்கம் கொண்டவர், உளைக்குழி—சேறு நிறைந்த புதைகுழி.

(இ—பு) துணி—துணிவு, முதனிலைத் தொழிற்பெயர்.

விளக்கம்: பெண்களின் மினுக்கிய அழகுக்கு நெருப்பும், அவ்வழகை விரும்பிக் கூடும் காமுகர்க்கு அந்நெருப்பில் விழும் விட்டிற் பூச்சிகளும் உவமை. அப்பெண்களின் வஞ்சனை பொருந்திய இனிய பேச்சுக்கு பொன் விலங்கு உவமை. அப்பேச்சைக் கேட்டு வருந்துகின்ற காமுகர்க்குக் கத்தரிப் பறையோசையைக் கேட்டு வருந்தும் அசுணமா உவமை. அவர்கள் விரிக்கும் வலைக்குச் சேறு நிரம்பிய புதைகுழி உவமை. அதை விரும்பி அதில் விழுந்து வருந்தும் காமுகர்க்கு, வஞ்சகப் புதைகுழியில் விழுந்து வருந்தும் யானை உவமை.

இது நிரையசை முதலாக வந்த கட்டளைக் கலித்துறை.

*படிறர்விடர் நாகரிகர் பல்லவர்ப ரத்தரெனல் பகரப்படு*
*மிடர்மருவு காமுகரி டங்கழியர் தூர்த்தர்பெய*
*ரிசைவார்பினு*
*மடருமொலி யாதிமய லைந்தின்மட வாரிடைய*
*லந்தவுயிர் தா*
*னுடைகவலை பேரிருள ழுந்தல்குறி பொருளாலு*
*முணர்விக்கவே.*
*81*

(ப—ரை) அடரும் ஒலி யாதி மயல் ஐந்தின் மடவார் இடை-வருத்தும் ஒலி, சுவை, நாற்றம், ஒளி, ஊறு ஆகிய மயக்கத்தைத் தருவனவாகிய ஐந்தினையும் உடைய பெண் களிடம், அலந்த உயிர்-வருந்திய உயிரே, படிறர்-ஒலியால் பொய்யர் என்னும், விடர்-சுவையால் விடர் என்றும், நாற்றத் தால் நாகரிகர் என்றும், ஒளியால் பல்லவர் என்றும், ஊற்றால் பரத்தர் என்றும், பெயர் இசைவார்-பெயரைப் பொருந்திய வர் ஆவார். பினும்-மேலும், உடையால் காமுகர் என்றும், கவலையால் இடங்கழியர் என்றும், பேரிருள் அழுந்தலால் தூர்த்தர் என்றும், குறி-பெயர் பெறுவது. பொருளாலும் உணர்விக்கவே-அப்பெயர்களின் பொருளாலும் தெரிவிக்கவே யாகும்.

(பொ—ரை) வருத்தும் ஒலி, சுவை, நாற்றம், ஒளி, ஊறு ஆகிய மயக்கத்தைத் தருவனவாகிய ஐந்தினையும் உடைய பெண்களிடம் வருந்திய உயிரே ஒலியால் பொய்யர் என்றும், சுவையால் விடர் என்றும், நாற்றத்தால் நாகரிகர் என்றும், ஒளியால் பல்லவர் என்றும், ஊற்றால் பரத்தர் என்றும் பெயரைப் பொருந்தியவர் ஆவார். மேலும், உடை யால் காமுகர் என்னும் கவலையால் இடங்கழியர் என்றும் பேரிருள் அழுந்தலால் தூர்த்தர் என்றும், பெயர் பெறுவது அப்பெயர்களின் பொருளாலும் தெரிவிக்கவேயாகும்.

அருஞ்சொற்பொருள்: படிறு-பொய், படிறர்-பொய் யர், பொய் பேசப்படுவதால் ஒலியாயிற்று. விடர்-விடத் தன்மையர், காமுகர்-விடம் உண்ணப்படுவதால் சுவையைக் குறித்தது. நாகரிகர்-சிறப்பாக மண நெய், மணப் பொடி களால் அழகுபடுத்துக்கொள்ளுதலின் நாற்றத்தைக் குறித்தது. பல்லவர்-தளிர்போன்றவர், தூர்த்தர். பல்லவம்-பகட்டான ஒலியுடையதாகையால் அச்சொல் ஒளியைக் குறித்துநின்றது. பரத்தர்-பரத்தையை உறுபவர் எனவே அச்சொல் ஊற்றைக் குறித்தது.

(இ—பு) பினும்-பின்னும் இடைக்குறை.

இது ஐஞ்சீரடியாகிய நெடிலடி நான்கு வந்த கலித்துறை.

## வஞ்சித்துறை.

*காஞ்சிரங் கனிச்சிவப்*
*போஞ்சுமம் பொழுக்குமாந்*
*தீஞ்சொலார் திறத்தெழில்*
*வாஞ்சைதா மதிக்கினே.* 82

(ப—ரை) தீஞ்சொலார் திறத்து எழில் – இனிய சொல்லைப் பேசும் பெண்களின் அழகும், வாஞ்சை—அவர் அன்பு செலுத்தலும், மதிக்கின்—ஆராயின், அவை, முறையே, காஞ்சிரங்கனிச் சிவப்பும்—சிவந்த காஞ்சிரம்பழத்தின் அழகும், ஓச்சும் அம்பு ஒழுக்கும்ஆம்–செலுத்தப்படும் அம்பு பாய்ந்து வருதலையும் ஒக்கும்.

(பொ—ரை) இனிய சொல்லைப் பேசும் பெண்களின் அழகும், அவர் அன்பு செலுத்தலும் ஆராயின், அவை முறையே, சிவந்த காஞ்சிரங்கனியின் அழகும், செலுத்தப் படும் அம்பு பாய்ந்து வருதலையும் ஒக்கும்.

அருஞ்சொற்பொருள்: தீஞ்சொல் – இனிய சொல், வாஞ்சை—அன்பு.

(இ—பு) ஓச்சும் என்பது ஓஞ்சும் என மெலிந்தது. செய்யுள் விகாரம். தாம், ஏ என்பன அசைகள்

இது குறளடி நான்கு கொண்டு தனியே வந்தமையால் வஞ்சித்துறை.

*உயர்முனிவர் வேண்டினும் பார்க்கொண்ணு நிரயப்*
*பயன்முழுதுங் காமுகர்துய்ப் பாராய்ச்—சுயமாக*
*வம்முனிவர்க் குள்ளா மரனுருவை யோர்பொருளாத்*
*தம்மிலுன்னு ராற்பெரியர் தாம்.* 83

(ப—ரை) காமுகர்–காம வயப்பட்டவர், உயர்முனிவர் வேண்டினும்–பெரிய முனிவர்கள் வேண்டிக்கொண்ட போதிலும், பார்க்க ஒண்ணு–கண்ணுற் பார்க்கவும் ஒவ்வாத, நிரயப் பயன்முழுதும்–நரகத்தின் பயன்கள் யாவற்றையும், சுயமாக–தாமாகவே, துய்ப்பாராய்–நுகர்வாராய், அம்முனிவர்க்கு உள்ளாம்–அம்முனிவர்கட்கு உள்ள, அரன்உருவை–சிவபெருமானின் தவ உருவை, ஓர் பொருளா–பொருட்படுத்தத்தக்க ஒன்றாக, உன்னார்–நினைக்கார் ஆதலால், தாம் பெரியர்–தாமே பெரியவர் ஆவர்.

(பொ—ரை) காம வயப்பட்டவர் பெரிய முனிவர்கள் வேண்டிக்கொண்டபோதிலும், கண்ணுற்பார்க்கவும் ஒவ்வாத நரகத்தின் பயன்கள் யாவற்றையும் தாமாகவே நுகர்வாராய், அம்முனிவர்கட்கு உள்ள சிவபெருமானின் தவ உருவத்தையும், பொருட்படுத்தத்தக்க ஓர் உருவாக நினைக்கார் ஆதலால் தாமே பெரியவர் ஆவார்.

அருஞ்சொற்பொருள்: நிரயம்-நரகம், உன்னார்–நினைக்கார்.

(இ—பு) ஒண்ணு-ஒண்ணாத ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். பொருளா – பொருள்ஆ – பொருள் ஆக – கடைக்குறை.

இது இருவிகற்ப நேரிசை வெண்பா.

*பிறப்பஞ்சார் வன்பழியார் பீதியிலர் நோய்க்கும்*
*விறப்புறார் தெவ்வின் வெருவா—ரிறப்பினையு*
*முட்கார் நிரயத் துறுகணுமுள் காரெவைக்கும்*
*வெட்கார் வலியோர் விடர்.* 84

(ப—ரை) விடர்–காமுகர், பிறப்பு அஞ்சார்–பிறவி எடுப்பதற்குப் பயப்படார், வன்பழியார் பீதி இலர்–கொடிய

பழியையும் அஞ்சார், நோய்க்கும் விறப்பு உரூர்—நோய்க்கும் அச்சங் கொள்ளார், தெவ்வின் வெருவார்—பகைவர்க்கும் அஞ்சார், இறப்பினையும் உட்கார்—இறப்பதற்கும் அஞ்சார், நிரயத்து உறுகணும் உள்கார்—நரகத்தில் அமையும் துன்பங் களையும் நினைக்கார், எவைக்கும் வெட்கார் வலியோர்—எவ் வகை இழிவுக்கும் வெட்கப்படாத வலிமை உடையவர் ஆவார்.

(பொ—ரை) காமுகர் பிறவி எடுப்பதற்குப் பயப்படார். கொடிய பழியையும் அஞ்சார், நோய்க்கும் அஞ்சார், பகை வர்க்கும் அஞ்சார், இறப்பதற்கும் அஞ்சார், நரகத்தில் அமை யும் துன்பங்களையும் நினைக்கார், எவ்வகை இழிவுக்கும் வெட்கப்படாத வலிமையுடையவர் ஆவார்.

அருஞ்சொற்பொருள்: விறப்பு—அச்சம், உறுகண்—துன்பம், உள்கார்—நினையார், வெட்கார்—வெட்கப்படார், தெவ்—பகை.

விளக்கம்: நல்லோர் அஞ்சுதற்குரிய பிறப்பு, கொடிய பழி, நோய், பகை, இறப்பு, நரகத் துன்பம், வெட்கப்படத் தக்க இழிவு ஆகிய எவற்றிற்கும் அஞ்சாத வலிமையுடைய வர் தூர்த்தர்.

(இ—பு) இச்செய்யுளில் அஞ்சார், பீதியிலர், விறப்புரூர் வெருவார், உட்கார், உறுகணும் உள்கார் என அஞ்சாமை குறித்துப் பல சொற்கள் வருதலின் பொருட் பின் வரு நிலையணி.

இதுவும் இருவிகற்ப நேரிசை வெண்பா.

*மூடகூ டாமணிநீண் மோகப் பெருங்குன்றந்*
*தோடமா மேகந் துயர்ப்பழுவங்—கேடுபவ*
*வாரிபிணிப் பெட்டகஞ்சூர் வைப்பெனத்தூர்த் தற்புகழ்வா*
*னேருநிரா சைப்பேர் நிதி.* 85

(ப—ரை) 1. மூட சூடாமணி – மூடர்களுக்குத் தலைவனே, நீள்மோகப் பெருங்குன்றம்–பெரிய மலையளவு வளரும் மோகத்தையுடையவனே, தோடமா மேகம்–நோயாகிய கரிய மேகத்தையுடையவனே, துயர்ப் பழுவம்–துன்பக் காடே, கேடு பவ வாரி–கேட்டைத் தரும் பிறவிக் கடலே, பிணிப் பெட்டகம்–நோய்கள் அடங்கிய பெட்டியே, சூர் வைப்பு–அச்சத்தின் இருப்பிடமே, எனத் தூர்த்தற் புகழ்வான்–என்று ஒரு காமுகனைப் புகழ்பவன், நிராசைப் பேர் நிதி நேரும்–ஆசையில்லாமையாகிய பெருஞ் செல்வத்தைப் பெறுவான். அதாவது சிறு உதவியும் பெறமாட்டான்.

(பொ—ரை) 1. மூடர்களுக்குத் தலைவனே, பெரிய மலையளவு வளரும் மோகத்தையுடையவனே, நோயாகிய கரிய மேகத்தையுடையவனே, துன்பக் காடே, கேட்டைத் தரும் பிறவிக் கடலே, நோய்கள் அடங்கிய பெட்டியே, அச்சத்தின் இருப்பிடமே என்று பொருள்பட ஒரு காமுகனைப் புகழ்பவன், ஆசையில்லாமையாகிய பெருஞ் செல்வத்தைப் பெறுவான்.

(ப—ரை) 2. மூட சூடாமணி–அறியாமை இருளை அகற்றும் தலைமணியே, நீள்மோகப் பெருங்குன்றம்–வளரும் மோகத்தைத் தடுக்கவல்ல பெரிய மலையே, தோடம் மா மேகம்–வறுமைப் பிணிக்குப் பெரிதும் வழங்குகின்ற மழையே, துயர்ப் பழுவம்–துன்பங்கள் தஞ்சம் அடைவதற்குரிய காடு போன்றவனே, கேடு பவ வாரி–கேட்டை விளைவிக்கும் பிறப்பைப் போக்கவல்ல கடலே, பிணிப் பெட்டகம்–நோயைத் தீர்க்கும் மருந்துப் பெட்டியே, சூர் வைப்பு–அஞ்சுபவர்கட்கு ஓர் சேமநிதியே, எனத் தூர்த்தன் புகழ்வான்–என்று தூர்த்தனைப் புகழ்பவன், நிராசைப் பேர் நிதி நேரும் – ஆசையில்லாமையாகிய பெருஞ் செல்வத்தைப் பெறுவான். அதாவது சிறு உதவியும் பெறமாட்டான்.

(பொ—ரை) 2. அறியாமை இருளை அகற்றும் தலை மணியே, வளரும் மோகத்தைத் தடுக்கவல்ல பெரிய மலையே, வறுமைப் பிணிக்குப் பெரிதும் வழங்குகின்ற மழையே, துன்பங்கள் தஞ்சம் அடைவதற்குரிய காடு போன்றவனே, கேட்டை விளைவிக்கும் பிறப்பைப் போக்கவல்ல கடலே, நோயைத் தீர்க்கும் மருந்துப் பெட்டியே, அஞ்சுபவர்கட்கு ஒரு சேம நிதியே என்று தூர்த்தனைப் புகழ்பவன் ஆசை யில்லாமையாகிய பெருஞ் செல்வத்தைத் தான் பெறுவான். அதாவது சிறு உதவியும் பெறமாட்டான்.

அருஞ்சொற்பொருள்: பழுவம்—காடு, பவம்—பிறப்பு, வாரி—கடல், பெட்டகம்—பெட்டி, வைப்பு—சேமநிதி, தூர்த்தன்—காமுகன்.

இதுவும் இருவிகற்ப நேரிசை வெண்பா.

*ஆயி ரந்துன் பமைந்தணு வின்பினை*
*யேயு மேழை யெனமட வாரென*
*மேய மின்னையும் வீழ்மக ஞண்மைசீ*
*ராயு மோர்வின ராரவன் றேர்வொடே.* 86

(ப—ரை) ஆயிரம் துன்பு அமைந்து—ஆயிரம் துன்பம் தந்து, அணு இன்பினை ஏயும் ஏழை என—அணு அளவு இன்பத்தைத் தருவதால் ஏழை என்னும் பெயரினைப் பெற் றுள்ளது பொருந்தும் என்றும், மடவார் என—அழகானவர் எனவும் அறியாமையுடையவர் எனவும் கூறுமாறு, மேய மின்னையும்—பொருந்திய பெண்ணையும், வீழ்மகன்—விரும்பும் (விரும்பி இழிவடையும்) ஆடவனுடைய, ஆண்மைசீர்— ஆண்மையையும் சிறப்பையும், அவன் தேர்வொடே—அவன் தேர்ந்தெடுத்தவருடன், ஆயும் ஓர்வினர் யார்?—ஆராயும் அறிவினர் யார்? அவர்தம் பெயர்ப் பொருளை உணர்ந்து ஒழுகுபவரே ஆவர்.

(பொ—ரை) ஆயிரம் துன்பம் தந்து அணு அளவு இன்பத்தைத் தருவதால் ஏழை என்னும் பெயரினைப் பெற்றுள்ள பெண்ணையும் அழகானவர் எனவும் அறியாமையுடையவர் எனவும் பொருள் பொருந்தும். மடவார் என்னும் பெயரையுடைய பெண்ணையும் விரும்பும் (விரும்பி இழிவடையும்) ஆடவனுடைய ஆண்மையையும், சிறப்பையும் அவன் தேர்ந்தெடுத்தவருடன் ஆராயும் அறிவினர் யார்? தம் பெயர்ப் பொருளை உணர்ந்து ஒழுகுபவரே ஆவர்.

அருஞ்சொற்பொருள்: மின்–மின்னலைப் போன்ற பெண், வீழ்மகன்–விரும்பும் ஆடவன், தேர்வு–தேர்ந்தெடுக்கப்பட்டவர்.

(இ—பு) மின்-உவமையாகுபெயர். தேர்வு-தொழிலாகுபெயராய்த் தேர்ந்தெடுத்த பெண்ணைக் குறித்தது.

இது கலி விருத்தம்.

*மஞ்சள் வண்ணமாஞ் செழுமையவ் வவ்விட மறைவிற்*
*றுஞ்சு றுங்கரு நிறமது பச்சைமேற் சூழு*
*நெஞ்சு கண்டமு வெள்ளையே செம்மையுண் ணிறைவாற்*
*பஞ்ச வண்ணமாக் கிளியெனத் தக்கவள் பாவை.* 87

(ப—ரை) செழுமை அவ் அவ் இடம் – செழுமை பொருந்திய அந்த அந்த இடம், மஞ்சள் வண்ணமாம்–மஞ்சள் நிறம் பெறும், மறைவில் துஞ்சுறுங் கருநிறம் – மறைவான இடங்களில் கருமைநிறம் பொருந்தும், அது பச்சை மேற் சூழும் – அக்கருமை தோலின்மேல் அமையும், நெஞ்சும் கண்டமும் வெள்ளையே–உள்ளத்திலும் சொல்லிலும் அறியாமையே, செம்மை உள்நிறைவால் – சிவப்பு ஆகிய கோபம் உள்ளே நிறைந்திருப்பதால், பஞ்ச வண்ணமாக–ஐந்து நிறம் பொருந்துவதால், பாவை கிளி எனத் தக்கவள்–பாவை கிளி என்று கூறத் தக்கவள் ஆவாள்.

(பொ—ரை) செழுமை பொருந்திய அந்த அந்த இடம் மஞ்சள் நிறம் பெறும், மறைவான இடங்களில் கருமை நிறம் பொருந்தும், அக்கருமை தோலின்மேல் அமையும். உள்ளத்திலும் சொல்லிலும் வெள்ளையாகிய அறியாமை அமையும். சிவப்பு நிறம் உள்ளே நிறைந்திருப்பதால் ஐந்து நிறம் பொருந்துவதால், பாவை கிளி என்று கூறத் தக்கவள் ஆவாள்.

அருஞ்சொற்பொருள்: பச்சை – தோல், வெள்ளை– அறியாமை, செம்மை–கோபம்.

விளக்கம்: நெஞ்சும் கண்டமும் வெள்ளையே. நெஞ்சு வெள்ளையே என்பது உள்ளத்தில் அறியாமையே என்றும், கண்டம் வெள்ளையே என்பது வாயிலிருந்து பிறந்து வரும் சொற்களும் அறியாமையுடையவையே என்பதாகும்.

(இ—பு) கண்டமும் இலக்கணை ஆக வாயைக் குறித்து வாய் வாயிலிருந்து பிறக்கும் சொற்களுக்கு ஆகுபெயராயிற்று. பாவை–பெண் உவமை ஆகுபெயர். கிளி–பெண் உவமை ஆகுபெயர். ஐந்நிறக் கிளியிடம் ஐந்துநிறம் இருப்பது போல் பெண்ணிடமும் ஐந்து நிறம் இருப்பதால் உவமை ஆகுபெயர் ஆயிற்று.

இது நெடிலடி நான்கு பெற்று வந்த கலித்துறை.

*இலக்குமி பற்க ளயிராணி நெற்றி யிரதிநடை*
*உலப்பி லரம்பை துடைமே னகைதன மூர்வசிகண்*
*கலப்பதிம் மாதிடத் தென்னுற்ற தூர்த்தர் களம்விஞ்சையர்*
*பலத்தி லிமையவர் வீணைய ராங்கும் பவர்க்கத்தரே.*

*88*

(ப—ரை) இம்மாதிடத்து – இப்பெண்ணிடத்து, இலக்குமி கலப்பது பற்கள் என்றும் – இலக்குமி பொருந்தியுள்ள இடம் பற்கள் என்றும், அயிராணி கலப்பது நெற்றி என்றும்–அயிராணியின் அழகு பொருந்தியுள்ள இடம் நெற்றி என்றும், இரதி கலப்பது நடை என்றும்–இரதியின் நடையழகு இவளுடைய நடையில் பொருந்தியுள்ளது என்றும், உலப்புஇல் அரம்பை கலப்பது துடை என்றும்–கெடுதல் இல்லாத அரம்பையின் அழகு பொருந்தியுள்ள இடம் இவளது துடை எனவும், ஊர்வசி கலப்பது கண் என்றும்-ஊர்வசியின் அழகு பொருந்தியுள்ள இடம் இவளுடைய கண் என்றும், உற்ற தூர்த்தர்கள் – இம்மாதை அடைந்த காமுகர்கள், அம் விஞ்சையர்–அழகில் புலவர் (அற்பமானவர்) ஆய், பலத்தில் இமையவர்-நெற்றியில் இமையையுடையவர் அல்லது வலிமையில் இமையைப்போல் நொய்யவர் ஆய், வீணையர்–வீழ்நையர் – விரும்பி நைபவர் அல்லது வீண்ஐயர் – வீணுகச் சந்தேகங் கொள்பவர் ஆய், இறுதியில் கும்பவர்க்கத்தர் ஆம் – கலயக் கஞ்சியரே ஆவர்.

(பொ—ரை) இப்பெண்ணிடத்து இலக்குமி பொருந்தியுள்ள இடம் பற்கள் என்றும், அயிராணியின் அழகு பொருந்தியுள்ள இடம் நெற்றி என்றும், இரதியின் நடையழகு இவளுடைய நடையில் பொருந்தியுள்ளது என்றும், கெடுதல் இல்லாத அரம்பையின் அழகு பொருந்தியுள்ள இடம் இவளது துடை எனவும், ஊர்வசியின் அழகு பொருந்தியுள்ள இடம் இவளுடைய கண் என்றும், இம்மாதை அடைந்த காமுகர்கள் அழகில் அற்பமானவர்ஆய், நெற்றியில் இமையையுடையவர் அல்லது வலிமையில் இமையைப்போல் நொய்யவர் ஆய், விரும்பி நைபவர் அல்லது வீணுகச் சந்தேகங் கொள்பவர் ஆய், இறுதியில் கலயக் கஞ்சியரேயாவர்.

அருஞ்சொற்பொருள்: உலப்பு–கெடுதல், கும்பம்–கலயம், வர்க்கு–கஞ்சி, அம்–அழகு.

இது நிரையசை முதலாக வந்த கட்டளைக் கலித்துறை.

*கருமணலைப்பின்னிக் காட்டி யயன்வா கனத்திலனயா*
*வருமெணக் காற்படுத் தின்புற் றுலாவிய மாதுபின்னே*
*யருமுண வுண்டொரு கால்கொண்டு தானடந் தந்தரத்தை*
*வருமிணை தீர்வலி யால்விளைத் தேயிறு மாப்பொன்றுமே.*
*89*

(ப—ரை) கருமணலைப் பின்னிக் காட்டி—அறல்போலும் கூந்தலைச் சடையாகப் பின்னிக் காட்டி, அயன் வாகனத் தினை—அன்னத்தை அதாவது அன்னம் போன்ற நடையை, யாவரும் எண்ண—எல்லோரும் மதிக்குமாறு, காற்படுத்து—காலில் பொருந்தச்செய்து, இன்புற்று உலாவிய மாது—இன்பந் துய்த்து உலவின பெண், பின்னே—பிறகு, அரும் உணவு உண்டு—அற்ப உணவே உண்டு, ஒருகால் கொண்டு தான் நடந்து—ஒரு கொம்பை ஊன்றிக்கொண்டு தான் நடந்து, அந்தரத்து ஐ வரும்—உள்ளேயிருக்கும் கோழை வெளியே வரும், இணைதீர் வலியால்—ஒப்புச் சொல்லமுடியாத வலியினால், வளைத்து—உடம்பைக் கூனவைத்து, இறுமா—இறுமாப்பு, பொன்றும்—அழியப் பெறுவாள். அருமுணவு உண்டு என்பதற்கு மென்மையாக முணவுதலை மேற்கொண்டு என்றும் பொருள் கூறலாம்.

(பொ—ரை) அறல்போலும் கூந்தலைச் சடையாகப் பின்னிக் காட்டி, அன்னம் போன்ற நடையை எல்லோரும் மதிக்குமாறு காலில் பொருந்தச் செய்து, இன்பந் துய்த்து உலவின பெண் பிறகு, அற்ப உணவே உண்டு அல்லது மென்மையாக முணவுதலை மேற்கொண்டு ஒரு கொம்பை ஊன்றிக்கொண்டு, தான் நடந்து, உள்ளேயிருக்கும் கோழை வெளியே வரும் ஒப்புச் சொல்ல முடியாத வலியினால் உடம்பைக் கூனவைத்து இறுமாப்பு அழியப் பெறுவாள்.

அருஞ்சொற்பொருள்: கருமணல்-அறல்-அறல்போன்ற கூந்தல். அயன்வாகனம்—அன்னம்—அன்னத்தைப் போன்ற நடை. எண—எண்ண மதிக்குமாறு. கால்படுத்து—காலில் பொருந்தச்செய்து (காலில் விழச்செய்து என்பது ஒருநயம்)

(இ—பு) அறல், கூந்தலுக்கு உவமை ஆகுபெயர். அன்னம், நடைக்கு உவமை ஆகுபெயர். எண—எண்ண என்பதன் இடைக்குறை.

இதுவும் கட்டளைக் கலித்துறை.

*நாலா யிரத்து நானூற்று நாற்பத்தெட்டுப் பிணியையும் பல்*
*காலாற் பிடித்துக் கொண்டுவிடார் கடிதெண்பத்து நான்கிலக்ஷம்*
*பாலாம் வேடந் தரிப்பரிரு பத்தெண் கோடி யளற்றினுமேன்*
*மேலாய்த் திரிவர் நமன்விதிக்கும் வேலை யிடுவர் விடரன்றே.*
*90*

(ப—ரை) விடர்—காமுகர், நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டுப் பிணியையும் – நாலாயிரத்து நானூற்று நாற்பத்தெட்டு நோய்களையும், பல்காலாற் பிடித்துக்கொண்டு விடார்—பல வழிகளில் பற்றிக்கொண்டு விடமாட்டார்கள், கடிது—விரைவில், எண்பத்து நான்கு லக்ஷம் பாலாம் வேடம் தரிப்பர்—எண்பத்து நான்கு லக்ஷம் வகையான வேடத்தைப் புனைவர், இருபத்து எண்கோடி அளற்றிலும்-இருபத்தெட்டுக் கோடி நரகத்திலும், மேல் மேலாய்த் திரிவார் — மீண்டும் மீண்டும் நுழைவர், நமன் விதிக்கும்—எமனுக்கும் பிரமனுக் கும், வேலையிடுவர்—வேலை தருவார்கள், அன்றே—அல்லவா?

(பொ—ரை) காமுகர் நாலாயிரத்து நானூற்று நாற்பத் தெட்டுப் பிணிகளையும், பல வழிகளில் பற்றிக்கொண்டு விடமாட்டார்கள். விரைவில் எண்பத்து நான்கு லக்ஷம் வகையான வேடத்தைப் புனைவர், இருபத்தெட்டுக் கோடி நரகத்திலும் மீண்டும் மீண்டும் நுழைவர். எமனுக்கும் பிரமனுக்கும் வேலை தருவார்கள் அல்லவா?

அருஞ்சொற்பொருள்: பல்கால்-பலவழி, பால்-வகை, அளறு-நரகம், நமன்-எமன், விதி-பிரமன்.

விளக்கம்: எண்பத்துநான்கு லக்ஷம் வேடம் தரித்தலாவது: எண்பத்து நான்கு லக்ஷம் வகை பிறவி எடுத்தல் ஆகும். எமனுடைய சட்டத்திற்கு வேலையிடுதலாவது: எமன் குறித்துள்ள நாளையும் அதன்படி தூதர்களுக்கு விதித்துள்ள சட்டத்தையும் கூட மாற்றுமாறு தாம் குறித்த காலத்திற்கு முன்னதாகவே உயிர் விடுவார். விதிக்கு வேலையிடுதல்: பிரமனை மீண்டும் மீண்டும் தனக்கு வெவ்வேறு பிறவிக்குரிய உடம்பைப் படைக்கச் செய்தல்.

(இ—பு) ஆம்-ஆகும் என்பதன் இடைக்குறை.

இது அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*மதுசூத னன்கைப்பி டித்தமிட ரேடுற்று மலரோன்*
*செலுத்*
*ததுபோன டந்துநம னர்கண்ண டைந்திடும*
*ணங்குதுணை யென்*
*றிதமாகி யமரிற்ச யங்கொண்டு மால்காவ லிடை நிற்கவு*
*நிதமா விசாரமொடு நமனயன் பணிசதா நேர்வர் விடரே.*
*91*

(ப—ரை) மதுசூதனன் கைப்பிடித்த மிடறேடு உற்று-திருமால் கையிற் பிடித்துள்ள சங்குபோன்ற கழுத்தோடு வந்து, மலரோன் செலுத்து அதுபோல் நடந்து – பிரமன் செலுத்துகின்ற அன்னப் பறவையைப்போல நடந்து, நமனுர் கண் அடைந்திடும்-எமனைப்போல உயிரை வாங்கும் கண்களைப் பெற்றுள்ள, அணங்கு துணை என்று – அழகியைத் துணைவி என்று கொண்டு, அமரில் இதமாகி சயங்கொண்டு– கலவிப் போரில் இன்புற்று வென்று (சயநோய் கொண்டு),

மால்இடை காவல்இடை நிற்கவும்—மயக்கத்திலும் சிறைப் பட்ட நிலையிலும் இருக்கவும், நிதம் மா விசாரமொடு—தினந் தோறும் பெரிய கவலையுடன், நமன்பணி அயன்பணி விடர் சதா நேர்வர்—எமனது பணியாகிய இறப்பையும் பிரமனது பணியாகிய பிறப்பையும் தூர்த்தர் எப்பொழுதும் பெறுவார் கள்.

(பொ—ரை) திருமால் கையில் பிடித்துள்ள சங்கு போன்ற கழுத்தோடு வந்து பிரமன் செலுத்துகின்ற அன்னப் பறவையைப்போல நடந்து, எமனைப்போல உயிரை வாங்கும் கண்களைப் பெற்றுள்ள அழகியைத் துணைவி என்று கொண்டு, கலவிப் போரில் இன்புற்று, சய நோய் கொண்டு, மயக்கத் திலும் சிறைப்பட்ட நிலையிலும் இருக்கவும் தினந்தோறும் பெரிய கவலையுடன் எமனது பணியாகிய இறப்பையும் பிரமனது பணியாகிய பிறப்பையும் தூர்த்தர் எப்பொழுதும் பெறுவார்கள்.

அருஞ்சொற்பொருள்: மதுசூதனன் — திருமால்; அணங்கு—பெண்; சயம்—வெற்றி, சயநோய்; மால்—மயக்கம்; காவல்—சிறை; நிதம்—தினந்தோறும்; மா விசாரம்—பெரிய கவலை; பிரமன் செலுத்து அது—அன்னம், அன்னம் போன்ற நடை.

(இ—பு) நமனூர்கண், உவமைத் தொகை.

இதுவும் அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*பிளை கோழைசளி பித்தநிண மெச்சில்வியர்வை*
*மூளை சீழ்புழுமு டைச்சலம லந்தசைகுடர்*
*நாள வெண்புதிர நாடியுரி கேசமயமாஞ்*
*சூளை வஞ்சிநகை யோர்மிகுசு சிக்குரியரே.* **92**

(ப—ரை) பீளை-பீளை, கோழை-கோழை, சளி-சளி, பித்தம்-பித்தம், நிணம்-கொழுப்பு, எச்சில், வியர்வை, மூளை, சீழ், புழு, முடை-முடை நாற்றம், சலம்-சிறுநீர், மலம், தசை, குடர்-குடல், நாளம்-நரம்பு, என்பு-எலும்பு, உதிரம்-இரத்தம், நாடி, உரி, தோல், கேசம்-மயிர், மயம் ஆகும், சூளைவஞ்சி-வேசியாகிய வஞ்சியிடத்து, நசையோர்-விருப்பம் உடையவர், மிகுசுசிக்கு உரியர்-ஓங்கும் நெருப்பிற்கு உரிய வரே ஆவர்.

(பொ—ரை) பீளை, கோழை, சளி, பித்தம், கொழுப்பு, எச்சில், வியர்வை, மூளை, சீழ், புழு, முடை நாற்றம், சிறுநீர், மலம், தசை, குடல், நரம்பு, எலும்பு, இரத்தம், நாடி, தோல், மயிர் மயமாகும் வேசியாகிய வஞ்சியிடத்து விருப்பம் உடையவர் ஓங்கும் நெருப்பிற்கு உரியவரே ஆவர்.

அருஞ்சொற்பொருள்: முடை - முடை நாற்றம், நாளம்-நரம்பு, என்பு-எலும்பு, உதிரம்-இரத்தம், உரி-தோல், கேசம்-மயிர், சூளை-வேசி, சுசி-நெருப்பு.

(இ—பு) வஞ்சி - வஞ்சிக்கொடி போன்ற பெண், உவமையாகுபெயர்.

இது நெடிலடி நான்கு பெற்று வந்துள்ள கலித்துறை.

*கூந்தலோ செல்லமருங் கூறு புயந்துளைக*
*ளேந்து தனமோ ரிரண்டுந்தோல்— சாய்ந்தவிழி*
*யத்தி யுதடிரத்த மாமிவண்மெய் சீவடிவென்*
*றெத்தோர் சுசிப்புலவோ ரோர்* 93

(ப—ரை) கூந்தலோ செல் அமரும்-கூந்தலோ மேகம் படியும், கூறு புயம் துளைகள் - புகழ்ந்து கூறப்படுகின்ற இரண்டு தோள்களும் மூங்கில், ஏந்து தனம் ஓர் இரண்டும்

தோல்—இரண்டு பெரிய தனங்களும் தோலாகும், சாய்ந்தவிழி-கூரிய விழி, அத்தி—மரம், உதடு இரத்தம்ஆம்—உதடு இரத்தம் ஆகும், இவள் மெய்-இவளுடைய உடம்பு, சீ வடிவு என்று—இகழ்ச்சிக்குரிய வடிவமே என்று, ஒத்தோர் சுசிப் புலவோர் ஓர்—ஒத்துக்கொண்டவர் நல்ல அறிஞர் என்பதை அறிவாயாக.

(பொ—ரை) கூந்தலோ மேகம் படியும். புகழ்ந்து கூறப்படுகின்ற இரண்டு தோள்களும் மூங்கில். இரண்டு பெரிய தனங்களும் தோலாகும். கூரிய விழி இரண்டும் மரம். உதடு இரத்தம் ஆகும். ஆதலால் இவளுடைய உடம்பு இகழ்ச்சிக்குரிய வடிவமே என்று கொண்டோர் நல்ல அறிஞர் என்பதை அறிவாயாக.

அருஞ்சொற்பொருள்: செல்—மேகம், புயம்—தோள், துளை-மூங்கில், அத்தி-மரம், சுசி-நல்ல, ஓர்-அறி, சீ-இகழ்ச்சி.

(இ—பு) சீ—இகழ்ச்சிக்குறிப்பு.

இது இருவிகற்ப நேரிசை வெண்பா.

*கொடுமர நுதல்காய் மொழிதட் டைத்தோள்*
*குழன்மா சல்குற்பை*
*தடியிடை யிண்டைத் தாளிணை சுள்ளித்*
*தளிரன கைதூங்க*
*ணடையல வன்முக மிருதோ ணிக்கண் ஞமலிச் சாயலுட*
*னடர்கழு முட்பற் றூழிக் கொம்மைய*
*வாவின ரோர்வழகே.*
*94*

(ப—ரை) நுதல்கொடுமரம்—நெற்றிவில், மொழி—காய், தோள் தட்டை – தோள் மூங்கில், குழல் மாசு – கூந்தல் அழுக்கு, அல்குல் பை—அல்குல் பாம்பின் படம், இடை தடி-இடை மின்னல், தாளிணை இண்டை—இரண்டு பாதங்களும்

இண்டை, கை சுள்ளித்தளிர் அன்ன—கைகள் மாந்தளிர்களைப் போன்றவை. நடை தூங்கல்—நடை பிடிநடை. முகம் அலவன் —முகம் பூனை முகம், கண் இரு தோணி – கண்கள் இரண்டு தோணிகள், ஞமலிச் சாயலுடன்—நாய் போன்ற மென்மை யுடன், பல் அடர் கழு முள்—பற்கள் கொல்லும் தூண்டில் முள், கொம்மை தாழி—முலை குடம், அவாவினர் ஓர்வு அழகே- இவற்றை விரும்பியவருடைய அறிவு அழகியதே.

(பொ—ரை) நெற்றி வில், மொழி காய், தோள் மூங்கில், கூந்தல் அழுக்கு, அல்குல் பாம்பின் படம், இடை மின்னல், இரண்டு பாதங்களும் தாமரை என்னும் பெயரை யுடைய இண்டை, கைகள் சுள்ளியினுடைய தளிர் போன்ற வை, நடை பிடி நடை, முகம் பூனை முகம், கண்கள் இரண்டு தோணிகள், நாய் போன்ற மென்மையுடன், பற்கள் கொல்லும் தூண்டில் முள், முலை குடம், இவற்றை விரும்பிய வருடைய அறிவு அழகியதே. அழகற்றது என்பது பொருள்.

அருஞ்சொற்பொருள்: நுதல்—நெற்றி; கொடுமரம்— வில்; தட்டை—மூங்கில்; மாசு—அழுக்கு; பை—படம், தடி— மின்னல்; இண்டை—இண்டை முள், தாமரை; சுள்ளி—மா, உலர்ந்த குச்சி; தூங்கல்—யானை; அலவன்—பூனை; கழுமுள்— தூண்டில்முள்; கொம்மை-முலை; தாழி-குடம்; ஓர்வு-அறிவு.

(இ—பு) அழகியது – குறிப்பு மொழி. அழகில்லாதது என்று பொருள்.

இது அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*பட்டாணி யைதிராப் பாத்து மதிநுதலைப்*
*பெட்டோர்காற் பஞ்சாப்பிற் பேதுறுதன்—மட்டோ*
*வளற்றுருமா சாயபுகு வார்துருக்கக் கூட்டம்*
*வளர்க்குமிரா வுத்தன் வசம்.* 95

(ப—ரை) பட்டு-பட்டுச் சேலையையும், அணி-அணி கலன்களையும், ஐ-அழகையும், திரா-பவழமல்லிகை போன்ற மேனியையும், பார்த்து மதிநுதலை-பகுத்த பிறைச் சந்திரனைப் போன்ற நுதலையுடைய பெண்ணை, பெட்டோர்-விரும்பிய வர், கால் பஞ்சா-காற்றில் அகப்பட்ட இலவம்பஞ்சாக, பின் பேது உறுதல் மட்டோ-பிறகு அறிவு மயங்குதல் மட்டுமா? துருக்கக் கூட்டம்-மலைக் கோட்டைகள் ஆகிய தனங்கள், தன்வசம் வளர்க்கும் இராவு - தன் ஆட்சியை மிகுக்கும் இரவில், உரு மா சாய-தன் உருவமும் பெருமையும் அழிய, அளற்று புகுவார்-குய்யம் ஆகிய நரகிலும் வீழ்வர்.

(பொ—ரை) பட்டுச் சேலையையும், அணிகலன்களையும், அழகையும், பவழமல்லிகை போன்ற மேனியையும், பகுத்த பிறைச் சந்திரனைப் போன்ற நுதலையுமுடைய பெண்ணை விரும்பியவர், காற்றில் அகப்பட்ட இலவம் பஞ்சாகிப் பிறகு அறிவு மயங்குதல் மட்டுமா? மலைக்கோட்டைகள் ஆகிய தனங்கள் தன் ஆட்சியை மிகுக்கும் இரவில் தன் உருவமும் பெருமையும் அழியக் குய்யம் ஆகிய நரகிலும் வீழ்வர்.

அருஞ்சொற்பொருள்: ஐ-அழகு, திரா-பவழமல்லிகை, பாத்து-பகுத்து, பெட்டோர்-விரும்பியவர், கால்-காற்று, பேது-மயங்குதல், துருக்கம்-மலை, மா-பெருமை, சாய-அழிய, அளறு-குய்யம் ஆகிய நரகம்.

(இ—பு) பஞ்சா-பஞ்சு ஆ-பஞ்சு ஆக, ஆக என்பது ஆ எனக் குறைந்து நின்றது. பட்டு அணி-பட்டணி என்பது பட்டாணி எனத் திரிந்தது செய்யுள் விகாரம். இச்செய்யுளில் பட்டாணி, ஐதிராப்பாத்து, பஞ்சாப்பு, உருமா, சாயபு, துருக்கக்கூட்டம், இராவுத்தன் ஆகிய சொற்கள் தொனியாக நின்று வெவ்வேறு பொருள் பயக்கின்றன.

இது இருவிகற்ப நேரிசை வெண்பா.

**இரவி மைபடு மிருடர விராவிது வினிய**
**பிரபை தந்திட வுண்மைசேர் மாதவர் பேதத்**
**திருமை யுற்றுமோ கித்திடு வார்தம தியல்பாம்**
**பெருமை தூர்த்தரோ விசைந்துபின் னிட்டையே**
**பெறுவார்.**

*96*

(ப—ரை) இரவு இமைபடும் இருள்தர—இரவு கண்ணுறங்குதற்குரிய இருளைத் தர, இராவிது—இரவில் ஒளிரும் சந்திரன், இனிய பிரபை தந்திட—இனிய ஒளியைத் தர, உண்மைசேர் மாதவர்—மெய்ப் பொருளைச் சேரும் பெரிய தவத்தினர், பேதத்து இருமை உற்று—பிரிவு நிலைக்குத் துக்கத்தை அடைந்து, தமது இயல்பாம் பெருமை மோகித்திடுவார்—தமது இயல்பாகிய பெருமை நிலையை விரும்புபவர், தூர்த்தரோ—காமுகரோ, இசைந்து—அவ்வாறே பிரிவு நிலைக்கு வருந்தி, பின் இட்டையே பெறுவர்—பிறகு விரும்பிய பெண்ணையே அடைவார்.

(பொ—ரை) இரவு கண்ணுறங்குதற்கு உரிய இருளைத் தர, இரவில் ஒளிரும் சந்திரன் இனிய ஒளியைத் தர, மெய்ப் பொருளைச் சேரும் பெரிய தவத்தினர் பிரிவு நிலைக்குத் துக்கத்தை அடைந்து தமது இயல்பாகிய பெருமை நிலையை விரும்புவர். காமுகரோ அவ்வாறே பிரிவு நிலைக்கு வருந்திப் பிறகு விரும்பிய பெண்ணையே அடைவார்.

அருஞ்சொற்பொருள்: இமைபடும்—இமை மூடும் அதாவது கண் உறங்கும், இரா—இரவு, விது-சந்திரன், பிரபை—ஒளி, இட்டை—விரும்பிய பெண்.

(இ—பு) இராவிது—இரவில் ஒளிரும் சந்திரன், ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.

விளக்கம்: மாதவர் தமது பிரிவு நிலைக்கு வருந்தித் தமது இயல்பை மோகித்து மேன்மை உற, தூர்த்தரும் தமது பிரிவு

நிலைக்கு வருந்திப் பின்னிட்டை கூடிச் (பின் இட்டையைக் கூடி) சிறுமை உறு நிற்பர் என்று கூறுவது முரண் அணியாக நின்று நயம் பயக்கிறது.

இது நெடிலடி நான்கு பெற்று வந்த கலித்துறை.

*கொடிய தாகியெண் டிசைபொருந் திடைபயங் கொடுக்கு*
*மிடியி சைந்ததீ மொழிகள்வா னத்தையொத் தெழுந்த*
*மிடறி னோடுபா தாலமா கியவிரு விழிக*
*ளுடைய பேதையைப் புல்லிய பேதைய ருகப்பார்.* 97

(ப—ரை) இடை கொடியது ஆகி எண்திசை பொருந்தும்–இடை கொடிபோன்றது ஆகி எட்டுத் திசைகளையும் தாங்கவல்லது ஆகவும், இசைந்த தீ மொழிகள்–விரும்பிப் பேசுகின்ற தீய மொழிகள், பயங்கொடுக்கும் இடி–பயத்தை உண்டாக்குகின்ற இடியாகவும், வால்நத்தை-வெண்மையான சங்கை, ஒத்து எழுந்த மிடறினோடு – போன்று உயர்ந்த கழுத்துடன், பாது ஆலமாகிய இருவிழிகள்–பகிர்ந்து தரும் நஞ்சு ஆகிய இரண்டு கண்களையும் உடைய, பேதையை– பேதைமைக் குணமுடைய பெண்ணை, புல்லிய பேதையர்– கீழ்மையும் அறியாமையும் உடையவரே, உகப்பர்-விரும்புவர்.

(பொ—ரை) இடை கொடி போன்றதாகி எட்டுத் திசைகளையும் தாங்கவல்லது ஆகவும், விரும்பிப் பேசுகின்ற தீய மொழிகள் பயத்தை உண்டாக்குகின்ற இடியாகவும், வெண்மையான சங்கைப் போன்ற உயர்ந்த கழுத்துடன் பகிர்ந்து தரும் நஞ்சு ஆகிய இரண்டு கண்களையும் உடைய பேதைமைக் குணமுடைய பெண்ணைக் கீழ்மையும் அறியாமையும் உடையவரே விரும்புவர்.

அருஞ்சொற்பொருள்: வால்-வெண்மையான, நத்தை -சங்கை, பாது-பகிர்ந்து, ஆலம்-நஞ்சு, உகப்பர்-விரும்புவர்.

(இ—பு) வானத்தை – வால்நத்தை – பண்புத்தொகை. நந்தை என்பது நத்தை என நின்றது திரிதல் விகாரம் மெல்லினம் வல்லினமாகத் திரிந்தது.

இதுவும் நெடிலடி நான்கு பெற்று வந்த கலித்துறை.

*நடுவின் மகரகும் பங்கள்கண் மீனத்த னந்தர்செய்கர்க்*
*கடக நிகர்கன்னி பான்மிது னத்தினர் காண்பர் சிங்க*
*மிடபந் துலாநேர் வலிமாட்சி புந்தியற் றேதனுசா*
*முடலின் விருச்சிக மேடவை யத்தோ னுறம்பிணியே.*

*98*

(ப—ரை) நடுவுஇல்-இடை இல்லையாய், மகரமீனத்துக் கண் – சுறுமீனைப் போன்று கவ்வி விழுங்கும் கண்களாலும், கும்பங்கள்–குடம் போன்ற தனங்களாலும், அனந்தர்செய்–மயக்கத்தைச் செய்கின்ற, கர்க்கடகம் நிகர் கன்னிபால் மிதுனத்தினர் – நண்டைப்போல ஒளியும் தன்மையுடைய கன்னியைப் புணர்ந்தோர், சிங்கம் இடபம் நேர்வலி–சிங்கத்தையும் காளையையும் போன்ற வலிமையையும், துலாநேர் மாட்சி–துலாக் கோலினைப் போன்ற நேர்மையையும், புந்தி–அறிவையும், அற்றே–இழந்தே, தனுசாம் உடலின்–வில்லைப் போல் வளையும் உடலில், ஐயத்தோன் – இருமலையுடைய வனாய், விருச்சிகம்-தேளும் அதாவது தேள் கொட்டினாற் போன்ற வலியைத் தரும் சூலை நோயும், மேடு அம்-மிக்க நீரும் தரும் நீரிழிவுபோன்ற, உறம்பிணியே காண்பர்–பெருகும் நோய்களையே அடைவர்.

(பொ—ரை) இடை இல்லையாய் சுறுமீனைப் போன்று கவ்வி விழுங்கும் கண்களாலும், குடம்போன்ற தனங்களாலும் மயக்கத்தைச் செய்கின்ற நண்டைப்போல ஒளியும் தன்மையுடைய கன்னியைப் புணர்ந்தோர், சிங்கத்தையும் காளையையும் போன்ற வலிமையையும், துலாக்கோலினைப் போன்ற நேர்மையையும், அறிவையும் இழந்தே, வில்லைப்போல்

வளையும் உடலில் இருமலையுடையவனாய், தேள் கொட்டினாற் போன்ற வலியைத் தரும் சூலை நோயும் மிக்க நீரும் தரும் நீரிழிவும் போன்ற பெருகும் நோய்களையே அடைவர்.

அருஞ்சொற்பொருள்: நடுவு–இடை; மகரமீன்–சுறு மீன்; அனந்தர்–மயக்கம்; கர்க்கடகம்–நண்டு; மிதுனம்–புணர்ச்சி; இடபம்–காளை; புந்தி–அறிவு, தனுசு–வில், ஐ–இருமல்; விருச்சிகம்–தேள், சூலை நோய்; மேடு அம்–மிக்கநீர், நீரிழிவு; உறழ்–பெருகும்.

(இ—பு) கர்க்கடகம் நிகர் கன்னி – நண்டைப்போல ஒளியும் கன்னி–வினை உவமம். இச்செய்யுளில் பன்னிரண்டு இராசிகளின் பெயர்களாகிய மேடம், இடபம், மிதுனம், கடகம், சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம், கும்பம், மீனம் ஆகியவை தொனிப் பொருளில் வந்து அழகு செய்கின்றன.

இது நிரையசையை முதலாகக் கொண்ட கட்டளைக் கலித்துறை.

*விழுப்பமுறு நாகரிகர் வீழ்கிருப ணத்தாய்*
*நிழற்பெருகு கார்ப்பண்ணி யங்கைதவ முற்று*
*மழிப்பரிய பைண்டின்னி யத்தொடும்வி யோகத்*
*தொழிற்கொடுச மன்புரிசு வப்பிரமு வப்பார்.* **99**

(ப—ரை) விழுப்பம்உறு நாகரிகர்–ஆசைமிக்க இளைஞர், இகர்வீழ் – இம்மை இன்பத்தைப் பெரிதாக கருதி வாழ்பவர் விரும்பும், கிருபணத்துஆய் – உலோபத்தால் உண்டாகும் வருத்தம், நிழல்–நோய், பெருகு கார்ப்பணியம்–பெருகும் தரித்திரம், கைதவம் – வஞ்சனை, உற்று – ஆகியவற்றை அடைந்து, மழிப்பரிய–குறைத்தற்கு முடியாத, பைண்டு–பண்டு–பழமையான, இன்னியத்தொடும்–பறைகளுடனும்,

வியோகத்தொழில்கொடு-இவ்வுலகை விடுதலாகிய தொழிலைக் கொண்டு, சமன்புரி—காலனின் ஊரையும்; சுவப்பிரம்—நரகத்தையும் அடைய, உவப்பார்—விரும்புவார்.

(பொ—ரை) ஆசை உற்ற இளைஞர், இம்மை இன்பத்தைப் பெரிதாகக் கருதி வாழ்பவர் விரும்பும் உலோபத்தால் உண்டாகும் வருத்தம், நோய், பெருகும் தரித்திரம், வஞ்சனை ஆகியவற்றை அடைந்து குறைத்தற்கு முடியாத பழைமைகளுடனும் இவ்வுலகை விடுதலாகிய தொழிலைக் கொண்டு காலனின் ஊரையும் நரகத்தையும் அடைய விரும்புவார்.

அருஞ்சொற்பொருள்: விழுப்பம்—ஆசை, உறு—மிக்க, இகம்—இம்மை இன்பம், வீழ்—விரும்பும், கிருபணம்—உலோபம், ஆய்—துன்பம், கிழல்—நோய், கார்ப்பணியம்—தரித்திரம், கைதவம்—வஞ்சனை, மழிப்பு—அழித்தல், பைண்டு—பண்டு—பழைய, வியோகம்—விடுதல், சமன்புரி—எமனுடைய ஊர், சுவப்பிரம்—நரகம்.

(இ—பு) பைண்டு—பண்டு (ஐ—அ) போலி. கொடு—கொண்டு இடைக்குறை.

இது கலிவிருத்தம்.

*வனைகு யக்கலச மீதுமனம் வைத்த வர்களாய்ச்*
*சினக ரத்தமரர் செல்வர்கவி ராச ராச*
*ரனைவர் பொய்த்தவுரு மண்வினைஞ ராய தடைவார்*
*பினமுறத் தமது பேதைமைச கத்து ணரவே.* **100**

(ப—ரை) வனைகுயக்கலசமீது—அழகிய தனமாகிய கலசத்தின்மீது, மனம் வைத்தவர்கள்—மனத்தை வைத்தவர்கள், பி(ன்)னம் உற—சிறுமை அடையவும், தமது பேதைமை—தமது அறியாமையை, சகத்து உணரவே—உலகம் அறியவும்,

சினகரத்து அமரர்—கோயிலில் உள்ள தேவர்கள், செல்வர்—செல்வர்கள், கவிராசராசர்—கவிச் சக்கரவர்த்திகள் ஆகிய அனைவரும், மண்வினைஞர்—குயவரால், பொய்த்த உருவாயது—பொய்யான களிமண் உருவம் ஆனதைப் போன்றவர், ஆவார்—ஆவார்கள்.

(பொ—ரை) அழகிய தனங்களாகிய கலசங்களின்மீது மனத்தை வைத்தவர்கள் சிறுமை அடையவும், தமது அறியாமையை உலகம் அறியவும், கோயிலில் உள்ள தேவர்கள், செல்வர்கள், கவிச் சக்கரவர்த்திகள் ஆகிய அனைவரும் குயவரால் பொய்யான களிமண் உருவம் ஆனதைப் போன்றவர்கள் ஆவார்கள்.

அருஞ்சொற்பொருள்: வனை—அழகிய, செய்த; குயக் கலசம்—குயமாகிய கலசம், தனமாகிய கலசம்; சகத்து—உலகு.

(இ—பு) பினம்—பின்னம் என்பதன் இடைக்குறை.

விளக்கம்: வனை குயக் கலசம் என்பது குயவனால் வனையப்பட்ட கலசம் என்றும் பொருள்பட உள்ளது. அத்தகைய கலசத்தை விரும்பியவர்கள் அக்குயவனால் சமைக்கப்படும் மண் உருவம் ஆவார் என்பதாம்.

இது நெடிலடி நான்கு கொண்ட கலித்துறை.

உருத்திர பூமிசு சுந்தரி முழுமக னுயர்பேரைத்
தரித்தும யானமெ லிக்கடை மூடர்க டாழ்வேபோற்
பொருத்துந லார்சுக நட்பெழி லென்றுபொ லிந்தாலும்
வருத்துறும் வன்பழி நோய்நிர யத்துயிர் வருவித்தே. **101**

(ப—ரை) உயர்பேரைத் தரித்தும்—உயர்ந்த பேரைப் பெற்றிருந்தும், உருத்திர பூமி—மயானமும், சுசுந்தரி—மூஞ்சூறும், முழுமகன்—மூடனும் ஆகித், தாழ்வேபோல்—

கீழான பொருளைத் தருதல்போல, பொருத்துநலார்—பொருந்தும் பெண்கள், சுகம், நட்பு, எழில் என்று பொலிந்தாலும்—தாம் சுகமும் நட்பும் அழகும் உள்ளவர் என்று பொலிவுடன் தோன்றினாலும், உண்மையில் அவர்கள், வன்பழி—கொடிய பழியையும், நோய்—நோயையும், நிரயத் துயர்—நரகத் துன்பத்தையும், வருவித்து—வரவழைத்து, வருத்துறும்—துன்புறுத்துவர்.

(பொ—ரை) உயர்ந்த பேரைப் பெற்றிருந்தும், மயானமும், மூஞ்சூறும், மூடனும் ஆகிக் கீழான பொருளைத் தருதல் போல, பொருந்தும் பெண்கள் தாம் சுகமும், நட்பும், அழகும் உள்ளவர் என்று பொலிவுடன் தோன்றினாலும் உண்மையில் அவர்கள் கொடிய பழியையும், நோயையும் நரகத் துன்பத்தையும் வரவழைத்துத் துன்புறுத்துவர்.

அருஞ்சொற்பொருள்: சுசுந்தரி-மூஞ்சூறு; முழுமகன்—மூடன்; நலார்—நல்லார், பெண்கள்.

(இ—பு) நலார்—நல்லார் இடைக்குறை.

இதுவும் நெடிலடி நான்கு பெற்ற கலித்துறை.

*மதியையி ளைத்திட வைத்ததில் வைத்ததை வழுநீர்பந்*
*ததிரவ டித்துருள் வித்தத சைத்திர ளரவின்னுத்*
*திதிபக வைத்ததி ரத்தம்வ கிர்த்தசை சிறுநீர்தோ*
*லிதினசை வைத்தவி டத்தலர் தத்துரு மிகனேயே. 102*

(ப—ரை) மதியை இளைத்திட வைத்து – அறிவைச் சிறுமைப்பட வைத்து, அதில் வைத்ததை—அந்த அறிவில் வைத்த மனத்தை, வழுநீர்—குற்றத் தன்மை பொருந்திய, பந்து அதிர வடித்து உருள்வித்த—பந்து போன்ற உருவத்தில் திரட்டிய, தசைத் திரள் – தசைத் திரளாகிய தனங்களிலும்,

அரவு-பாம்பின் படத்தைப் போன்ற அல்குலிலும், இன்னுத் திதி பகம் வைத்து - துன்புறுத்தும் நிலையையுடைய குய்யத்திலும் வைத்து, அதிரத்தம், வகிர்த்தசை. சிறுநீர், தோல்இதில் மிக்க இரத்தமும், பிளவுபட்ட தசையும், சிறுநீரும் தோலும் பொருந்திய இவ்வுறுப்பில், நசை வைத்த விடத்து-விருப்பம் வைத்தபோது, அலர் தத்து உரு நோய் மிகலே - பழியும், ஆபத்தும், வெப்பமும், நோயும் மிகுதலே உண்டாகும்.

(பொ—ரை) அறிவைச் சிறுமைப்பட வைத்து, அந்த அறிவில் மனத்தை வைத்த மனத்தை குற்றத் தன்மை பொருந்திய பந்து போன்ற உருவத்தில் திரட்டிய தசைத் திரளாகிய தனங்களிலும், பாம்பின் படத்தைப் போன்ற அல்குலிலும் துன்புறுத்தும் நிலையையுடைய குய்யத்திலும் வைத்து. மிக்க இரத்தமும், பிளவுபட்ட தசையும், சிறுநீரும் தோலும் பொருந்திய இவ்வுறுப்பில் விருப்பம் வைத்தபோது பழியும், ஆபத்தும், வெப்பமும், நோயும் மிகுதலே உண்டாகும்.

அருஞ்சொற்பொருள்: வழுநீர்—குற்றத் தன்மை(வழு-குற்றம், நீர்-நீர்மை-தன்மை); மதி—அறிவு; திதி—நிலைமை; பகம்—குய்யம்; அலர்—பழி; உரு—வெப்பு.

இதுவும் நெடிலடி நான்கு கொண்ட கலித்துறை.

*அமுதக் கதிர்மதி குளிர்தென் றலுமெரி*
*யாகுங் குயிலிசை யாழோசை*
*திமிதத் திடியொலி யெனும்வஞ் சியர்வழி*
*செல்வோர் கடவுளை யடியாரைத்*
*தமதுட் பகையென விதயங் கொடுமறை*
*தனியா கமமொழி யினையந்தோ*
*விமிதக் கடுவிட மெனவுஞ் செவிபுக*
*விழையார் குவிமிகு பிழையாரே.* 103

(ப—ரை) அமுதக் கதிர்மதி – அமுதத்தைப் போன்ற நிலவினை எறிக்கும் சந்திரனும், குளிர் தென்றலும்–குளிர்ந்த தென்றலும், எரியாகும்–நெருப்பாகும், குயிலிசை–குயிலின் இசையும், யாழோசை–யாழின் ஓசையும், திமிதத்து இடி ஒலி எனும் – பேரோசையோடு கூடிய இடி என்று கூறும், வஞ்சியர் – வஞ்சனையுடையவருடைய (வஞ்சிக்கொடி போன்றவருடைய), வழிசெல்வோர்-விருப்பப்படி நடப்பவர், கடவுளை–கடவுளையும், அடியாரை-அடியவர்களையும், தமது உட்பகை என – தம்முடைய உள்ளத்துள் பகைமை கொண்டுள்ளவர் என்று, இதயம்கொடு–தம் உள்ளத்தில் கருதிக் கொண்டு, மறைமொழி–வேத வாக்கியத்தையும், தனி ஆகம மொழி–ஒப்பற்ற ஆகம மொழியினையும், அந்தோ–ஐயோ, விமிதக் கடு விடம் எனவும் – அச்சத்தைத் தரும் கொடிய நஞ்சு எனவும் கருதி, செவி புக விழையார்–அவை காதில் படவும் விரும்பாதவராய், குவி மிகு பிழையாரே – பெருகுகின்ற பெரிய தவறு செய்வோரே யாவர்.

(பொ—ரை) அமுதத்தைப் போன்ற நிலவினை எறிக்கும் சந்திரனும், குளிர்ந்த தென்றலும் நெருப்பாகும். குயிலின் இசையும் யாழின் ஓசையும் பேரோசையோடு கூடிய இடி என்று கூறும் வஞ்சனையுடையவருடைய அல்லது வஞ்சிக் கொடி போன்றவருடைய விருப்பப்படி நடப்பவர் கடவுளையும், அடியவர்களையும் தம்முடைய உள்ளத்துள் பகைமை கொண்டுள்ளவர் என்று தம் உள்ளத்தில் கருதிக்கொண்டு வேத வாக்கியத்தையும் ஒப்பற்ற ஆகம மொழியினையும், ஐயோ, அச்சத்தைத் தரும் கொடிய நஞ்சு எனவும் கருதி அவை காதில் படவும் விரும்பாதவராய்ப் பெருகுகின்ற பெரிய தவறு செய்வோரே யாவர்.

அருஞ்சொற்பொருள்: திமிதம்–பேரோசை, விமித– அச்சத்தைத் தரும்.

இது எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

## வஞ்சி விருத்தம்

*குறுவெண்மரை யானது கோகநகங்*
*கறைசெங்குமு தம்மினி கைரவமென்*
*வெறிமேவினர் வெண்டர ளங்கருக*
*வறல்வாலுக மாவத றிந்திலரே.* **104**

(ப—ரை) குறுவெண்மரையானது-குறுகிய வெண்மை யான தாமரை போன்ற கண், கோகநகம் – செந்தாமரை போன்றது. இனி கைரவம் – இனி வெள்ளாம்பல் போன்ற வாய், கறை செங்குமுதம்-நிறத்தால் செங்குமுதம் போன்றது, என வெறி மேவினர் – என்று கருதி மிக்க அன்பு வைத்தவர், வெண்தரளம் கருக–வெண்மையான முத்துக்களைப் போன்ற பற்கள் கருக, அறல்–கருமணல் போன்ற கூந்தல், வாலுகம் ஆவது – வெண்மணல்போல வெளுப்பதை, அறிந்திலர் – அறியவில்லை.

(பொ—ரை) குறுகிய வெண்மையான தாமரைபோன்ற கண் செந்தாமரை போன்றது. இனி வெள்ளாம்பல் போன்ற வாய் நிறத்தால் செங்குமுதம் போன்றது என்று கருதி மிக்க அன்பு வைத்தவர் வெண்மையான முத்துக்களைப் போன்ற பற்கள் கருக, கருமணல் போன்ற கூந்தல் வெண்மணல் போல வெளுப்பதை அறியவில்லை.

அருஞ்சொற்பொருள்: மரை – தாமரை; கோகநகம்– தாமரை, கைரவம்–வெள்ளாம்பல்; கறை-நிறம்; வெறி-மிக்க அன்பு; அறல்–கருமணல்–கருங்கூந்தல்; வாலுகம்–வெண் மணல், வெண்மையான கூந்தல்.

(இ—பு) மரை–தாமரை–முதற்குறை. அறல்–கூந்தல் –உவமையாகுபெயர். வாலுகம் – வெண்கூந்தல் – உவமை யாகுபெயர்.

இது சிந்தடி நான்கு பெற்றதால் வஞ்சி விருத்தம்.

*இருளைக் குழலென்று வாளினை நன்னுத*
*லென்றுவில்லைப்*
*புருவமென் றம்பை விழியென் றியானையைப்*
*பூண்முலையென்*
*றரியை யிடையென் றராவைப் பகமென்று மந்தகனைத்*
*தெரிவையென் பார்க்குத்துன் பின்பாய் நிரயநற்*
*சேர்விடமே*
*105*

(ப—ரை) இருளைக் குழல் என்றும் – இருட்டைக் கூந்தல் என்றும், வாளினை–வாளை, நன்னுதல் என்றும்–நல்ல நெற்றி என்றும், வில்லைப் புருவமென்றும், அம்பை விழி என்றும், யானையை–யானைத் தந்தங்களை, பூண்முலை என்றும் –பூண் அணிந்த தனம் என்றும், அரியை இடை என்றும்– காற்றை இடை என்றும், அராவைப் பகம் என்றும்–பாம்பின் படத்தை அல்குல் என்றும் கூறி, அந்தகனைத் தெரிவை என்பார்க்கு–எமனை பெண் என்பவர்க்கு, துன்பு இன்பாய்– துன்பம் இன்பமாய், நிரயம்–நரகம், நற்சேர்வு இடமே– நன்மைசேரும் இடமாகும்

(பொ—ரை) இருட்டைக் கூந்தல் என்றும், வாளை நல்ல நெற்றி என்றும், வில்லைப் புருவம் என்றும், அம்பைக் கண் என்றும், யானைத் தந்தங்களைப் பூண் அணிந்த தனம் என்றும், காற்றை இடை என்றும், பாம்பின் படத்தை அல்குல் என்றும் கூறி, எமனைப் பெண் என்பவர்க்குத் துன்பம் இன்பமாகி நரகம் நன்மை சேரும் இடமாகும்.

அருஞ்சொற்பொருள்: அரி–காற்று, அந்தகன்–எமன், நிரயம்–நரகம்.

(இ—பு) யானை – யானைத் தந்தம் – முதலாகுபெயர். அரா–பாம்பின் படம்–முதலாகுபெயர்.

இது நிரையசை முதலில் வந்த கட்டளைக் கலித்துறை.

*வடமுலைமந் திரத்தாற்சூ தான னத்தான்*
*மராளகதி துடிமருங்கான் மயக்கு வித்துக்*
*கொடுநுதல்வில் வளைத்துவிழி யம்பு தொட்டுக்*
*கூறல்குற் பாம்புபடம் விரிக்குஞ் சுய்யப்*
*படுகுழிவீழ்த் தகம்வருந்த யாக்கை நோய்க்குட்*
*படநமன்கைக் குயிர்கொடுத்து நிரய வாயிற்*
*குடிபுகுத்து மாயாவஞ் சனியெ னும்பேர்*
*கொண்டமடவார் கண்ணடர்வார் கூடார் வீடே.*
*106*

(ப—ரை) வடமுலை மந்திரத்தால் – கச்சணிந்த முலையாகிய இடத்தால், சூது ஆனனத்தால்–சூதாகிய முகத்தால், மராள கதியால் – அன்னத்தைப் போன்ற நடையால், துடி மருங்கால்–துடியைப் போன்ற இடையால், மயக்குவித்து–அறிவை மயக்கி, கொடு நுதல் வில் வளைத்து–வளைந்த நெற்றியாகிய வில்லை வளைத்து, விழி அம்பு தொட்டு – கண்ணாகிய அம்புகளைத் தொடுத்து, பாம்பு படம் விரிக்கும் கூறு அல்குல் –பாம்பின் படத்தைப்போல விரிக்கின்ற பிளவுபட்ட அல்குலாகிய, சுய்யப் படுகுழி வீழ்த்து – பெண்குறி எனும் படுகுழியில் வீழ்த்தி, அகம் வருந்த–உள்ளம் வருந்த, யாக்கை நோய்க்கு உட்பட–உடம்பு நோய்வாய்ப்பட, நமன் கைக்கு உயிர்கொடுத்து – எமனுடைய கையில் உயிரைக் கொடுத்து, நிரய வாயிற் குடி புகுத்தும்–நரகத்தில் குடியிருக்கச் செய்யும், மாயாவஞ்சனி எனும் பேர்கொள் மடவார்கண்-மாயவஞ்சகப் பெண் (இடாகினி) என்னும் பேரைப் பெற்றுள்ள பெண்களிடம், அடர்வார் வீடுகூடார்–நெருங்குவார் வீடுபேற்றை அடையார்.

(பொ—ரை) கச்சணிந்த முலையாகிய இடத்தால், சூதாகிய முகத்தால், அன்னத்தைப் போன்ற நடையால், துடியைப் போன்ற இடையால், அறிவை மயக்கி, வளைந்த நெற்றியாகிய வில்லை வளைத்து கண்ணாகிய அம்புகளைத்

தொடுத்து பாம்பின் படத்தைப்போல விரிக்கின்ற பிளவு பட்ட அல்குலாகிய பெண்குறி எனும் படுகுழியில் வீழ்த்தி உள்ளம் வருந்த, உடம்பு நோய்வாய்ப்பட, எமனுடைய கையில் உயிரைக் கொடுத்து நரகத்தில் குடியிருக்கச் செய்யும், மாய வஞ்சகப் பெண் (இடாகினி) என்னும் பேரைப் பெற்றுள்ள பெண்களிடம் நெருங்குவார் வீடுபேற்றை அடையார்.

அருஞ்சொற்பொருள்: வடம்—கச்சு; மந்திரம்—இடம்; ஆனனம்—முகம்; மராளம்—அன்னம், கதி—நடை; கொடு நுதல்—வளைந்த நெற்றி; தொட்டு—தொடுத்து; வஞ்சனி—வஞ்சகப் பெண், இடாகினி.

(இ—பு) விழிஅம்பு—உருவகம்.

இது எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*செத்தழலென் றுணராது பொற்பாவை யென்றோர்*
*தீக்காட்டுங் கருவங்கப் பாவையெனக் காண்பா*
*ரந்தகன்றூ தினைமஞ்ஞை யென்றோர்கொக் கென்பா*
*ரணிதருமூன் பொதியையமு தென்றூர்நஞ் சென்பர்*
*சிந்தையுறு மாயைதனை யிரதியென்றோர் வனத்திற்*
*சேர்ந்தகளே பரமென்பார் தன்னையருட் பரம*
*னுந்துதிரு வடியெனத்தே ராதுமத னென்றோ*
*ருயங்கியமர்க் கடமாய்க்கண் டுறுவரளற் றுளியே.*
*107*

(ப—ரை) செந்தழல் என்று உணராது—சிவந்த நெருப்பு என்று உணராமல், பொற்பாவை என்றோர்—பொன் போன்ற நிறத்தினையுடைய பாவை என்றவர், தீக்காட்டும்—தீயிலே காட்டப்படும், கருவங்கப் பாவை எனக் காண்பார்—கரிய துத்தநாகப் பாவை என்பதை அறிவார், அந்தகன் தூதினை—எமனுடைய தூதினை, மஞ்ஞை என்றோர்—மயில் என்றவர்,

கொக்கு என்பார் – செந்நாய் என்பார், அணிதரும் ஊன் பொதியை–அழகுதரும் தனத்தை, அமுது என்றார்–அமுத கலசம் என்றவர், நஞ்சென்பர்–நஞ்சு என்பார், சிந்தையுறு மாயைதனை – உள்ளத்தை மயக்கும் தன்மையுடையவளை, இரதி என்றோர் – இரதிபோல அழகி என்றவர், வனத்திற் சேர்ந்த களேபரம் என்பார்–வனத்திற் சேர்ந்த எலும்புக்கூடு என்பார், தன்னை அருட்பரமன் உந்து திருவடி எனத் தேராது-தன்னை அருளுடைய இறைவன் செலுத்தும் திருவடி என்று தெரியாமல், மதன் என்றோர்–மன்மதன் என்றவர், உயங்கிய மர்க்கடமாய்–வருந்திய குரங்காய், அளற்றுளியே உறுவர்–நரக இடத்தையே அடைவர்.

(பொ—ரை) சிவந்த நெருப்பு என்று உணராமல், பொன் போன்ற நிறத்தினையுடைய பாவை என்றவர், தீயிலே காட்டப்படும் கரிய துத்தநாகப் பாவை என்பதை அறிவார். எமனுடைய தூதினை மயில் என்றவர் செந்நாய் என்பார். அழகு தரும் தனத்தை அமுத கலசம் என்றவர், நஞ்சு என்பார். உள்ளத்தை மயக்கும் தன்மையுடையவளை இரதி போல அழகி என்றவர் வனத்தில் சேர்ந்த எலும்புக்கூடு என்பார். தன்னை அருளுடைய இறைவன் செலுத்தும் திருவடி என்று தெரியாமல் மன்மதன் என்றவர் வருந்திய குரங்காய், நரக இடத்தையே அடைவர்.

அருஞ்சொற்பொருள்: கருவங்கப் பாவை–கரிய துத்தநாகப் பாவை, கொக்கு–செந்நாய், ஊன்பொதி–தனம், களேபரம்–எலும்புக்கூடு, மர்க்கடம்–குரங்கு.

(இ—பு) அமுது–அமுத கலசம், தானியாகுபெயர்.
அமுத கலசம்–தனத்திற்கு உவமையாகுபெயர்.

இதுவும் எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*வாரணத்தின் மீதுற்று வானரமா னார்மதியப்*
*பூரணத்தின் வேட்கை பொருந்தியவக்—காரணத்தாற்*
*றேயுமதி யாயிடுவர் சீயத்தைக் கண்டுபினு*
*நாயுமதா வாரே நக.* **108**

(ப—ரை) வாரணத்தின் மீதுற்று – யானையின் தந்தங் களைப் போன்ற தனங்களின்மேல் பொருந்தி, வானரம் ஆனார் –குரங்குபோலக் கூனர் ஆனார்கள், மதியப் பூரணத்தின்— முழுமதியைப் போன்ற முகத்தின் மீது, வேட்கைபொருந்திய அக்காரணத்தால்—விருப்பம் பொருந்திய அந்தக் காரணத்தால், தேயும் மதி ஆயிடுவர் – குறையும் அறிவினர் ஆகிவிடுவர், பினும் – மேலும், சீ அத்தைக் கண்டு – அருவருக்கத்தக்க அதனைக் கண்டு, நக–எல்லோரும் சிரிக்க, நாயும் ஆவார்— நாயைப்போல எச்சிலை நுகரும் குணத்தையும் பெறுவார்கள்.

(பொ—ரை) யானையின் தந்தங்களைப் போன்ற தனங் களின்மேல் பொருந்தி, குரங்குபோலக் கூனர்கள் ஆனார்கள். முழுமதியைப் போன்ற முகத்தின்மீது விருப்பம் பொருந்திய அந்தக் காரணத்தால் குறையும் அறிவினர் ஆகிவிடுவர். மேலும் அருவருக்கத்தக்க அதனைக் கண்டு எல்லோரும் சிரிக்க, நாயைப்போல எச்சிலை நுகரும் குணத்தையும் பெறுவார்கள்.

அருஞ்சொற்பொருள்: வாரணம்–யானை.

(இ—பு) வாரணம் – யானை – யானைத் தந்தம், முதலாகு பெயர். பினும்–பின்னும், இடைக்குறை.

இச்செய்யுளில் வாரணம், வானரம், மான், சீயம், நாய் ஆகிய விலங்குகளின் பெயர்கள் அமைந்து அழகு தருகின்றன.

இது இருவிகற்ப நேரிசை வெண்பா.

*புகைசூழ்த லாற்கனலே பூவையர்மெய் மெய்யோ*
*பகையேவில் வாள்கணைசார் பண்பான்—முகமாகா*
*சிம்மரா யானைபினுஞ் சேர்த்தொளித்து வைத்துறலா*
*லம்மவிவர் தீதறிவா ரார்.* **109**

(ப—ரை) பூவையர்—பெண்கள், புகை சூழ்தலால் கனலே—எரிச்சல் உண்டாவதால் நெருப்பே, மெய் மெய்யோ பொய்யே—அவர்களுடைய உடம்பு மெய்யன்று, பொய்யே, வில் – வில்லைப் போன்ற புருவத்தையும், வாள் கணைசார் பண்பால் – வாளையும் அம்பையும் போன்ற கண்களையும் பொருந்தியுள்ள தன்மையால், முகம் ஆகா பகையே—அவர்களுடைய முகங்கள் முகம் ஆகாமல் பகையேயாகும், சிம்மம் –சிங்கத்தைப் போன்ற நகங்களையும், அரா—பாம்பின் படத்தைப் போன்ற அல்குலையும், யானை-யானையின் தந்தங்களைப் போன்ற தனங்களையும், பின்னும்—மேலும். சேர்த்து ஒளித்து வைத்து உறலால்—தம்மிடம் மறைத்து வைத்திருந்து பயன் படுத்துவதால், இவர் தீது அறிவார் யார் – இவர்களுடைய தீமையை அறிபவர் யாவர்? ஒருவரும் இலர்.

(பொ—ரை) பெண்கள் எரிச்சல் உண்டாவதால் நெருப்பே, அவர்களுடைய உடம்பு மெய்யன்று பொய்யே, வில்லைப் போன்ற புருவத்தையும், வாளையும் அம்பையும் போன்ற கண்களையும் பொருந்தியுள்ள தன்மையால் அவர்களுடைய முகங்கள் முகம் ஆகாமல் பகையேயாகும். சிங்கத்தைப் போன்ற நகங்களையும், பாம்பின் படத்தைப் போன்ற அல்குலையும், யானையின் தந்தங்களைப் போன்ற தனங்களையும், மேலும் தம்மிடம் மறைத்து வைத்திருந்து பயன்படுத்துவதால் இவர்களுடைய தீமையை அறிபவர் யாவர்? ஒருவரும் இல்லை.

அருஞ்சொற்பொருள்: புகை—எரிச்சல்.

(இ—பு) வாள், கணை—வாளையும் அம்பையும் போன்ற கண்கள், உவமையாகுபெயர். அரா—அரவின் படம், முதலாகு பெயர். யானை—யானையின் தந்தம், முதலாகுபெயர். யானையின் தந்தம் தனங்களுக்கும், அரவின் படம் அல்குலுக்கும் உவமையாகுபெயர்.

இதுவும் இருவிகற்ப நேரிசை வெண்பா.

*தைய லென்னத் தகுந்துடை கால்களுங்*
*கையுந் தோள்களுங் கண்டந் தலைகுழன்*
*மெய்யுங் கொம்மை விரற்பற் களுமிடைப்*
*பொய்யு நாடிப் பொருத்துற் றுலாவுமே.* 110

(ப—ரை) தகும் துடை கால்களும்—தக்க துடையும் கால்களும், கையும் தோள்களும்—கைகளும் தோள்களும், தலைகுழல் மெய்யும்—தலையும் கூந்தலும் உடம்பும், கொம்மை உம்—முலையும், விரல்உம்—விரல்களும், பற்களும், இடையும் பொய்யும்—இடையும் பொய்யும் ஆகியவற்றை, நாடிப் பொருத்துற்று உலாவுமே—ஆராய்ந்து பொருத்தப்பெற்று, உலாவும்—அந்தப் பெண் தையல் என்ற பெயர்க்கேற்ப உலாவும்.

(பொ—ரை) தக்க துடையும், கால்களும், கைகளும், தோள்களும், தலையும், கூந்தலும், உடம்பும், முலையும், விரல்களும், பற்களும், இடையும், பொய்யும் ஆகியவற்றை ஆராய்ந்து பொருத்தப்பெற்று அந்தப் பெண் தையல் என்ற பெயர்க்கு ஏற்ப உலாவும்.

அருஞ்சொற்பொருள்: குழல்—கூந்தல். பெண்ணுக்குத் தையல் என்ற பெயர் வந்துள்ள காரணத்தை நயமாகக் கூறியுள்ளார்.

(இ—பு) இச்செய்யுளில் ஏது அணி அமைந்துள்ளது.

இது கலிவிருத்தம்.

*முல்லை காந்தண் முளரி கருவிளை*
*யல்லி சாதி யனிச்சமொன் றற்புத*
*வல்லி பாலை வனத்திற் படர்ந்தழல்*
*புல்லி நிற்கும் புறமக லாதரோ.* 111

(ப—ரை) முல்லை—முல்லை முகையைப் போன்ற பற்களும், காந்தள்—காந்தட் பூவைப் போன்ற விரல்களும், முளரி—தாமரைமலர் போன்ற முகமும், கைகளும், பாதங்களும், கருவிளை—கருவிளை மலரைப் போன்ற கரிய விழிகளும், அல்லி—ஆம்பல் பூவைப் போன்ற வாயும், சாதி அனிச்சம்—உயர்ந்த அனிச்சம்பூவைப் போன்ற மென்மையும், ஒன்று அற்புத வல்லி—பொருந்தியுள்ள வியத்தகு பூங்கொடி போன்ற பெண், ஐபால் வனத்தில் படர்ந்து—ஐந்து பகுப்பாகப் பிரித்து அழகு செய்யப்படும் கூந்தல் அழகோடும் பின்தொடர்ந்து, அழல் புல்லி நிற்கும்—அழுதலைப் பொருந்தி நிற்கும், புறம் அகலாது—விட்டு அப்பால் பிரிந்து செல்லாது, அரோ—அசை.

(பொ—ரை) முல்லை முகையைப் போன்ற பற்களும், காந்தட் பூவைப் போன்ற விரல்களும், தாமரைமலர் போன்ற முகமும், கைகளும், பாதங்களும், கருவிளை மலரைப் போன்ற கரிய விழிகளும், ஆம்பல் பூவைப் போன்ற வாயும், உயர்ந்த அனிச்சப் பூவைப் போன்ற மென்மையும் பொருந்தியுள்ள வியத்தகு பூங்கொடியானவள் ஐந்து பகுப்பாகப் பிரித்து அழகு செய்யப்படும் கூந்தல் அழகோடும் பின்தொடர்ந்து வந்து அழுதலைப் பொருந்தி நிற்கும். வயப்பட்டவரை விட்டு அப்பால் பிரிந்து செல்லாது.

அருஞ்சொற்பொருள்: அல்லி – ஆம்பல்; சாதி – உயர்வான; அழல்—அழுதல், நெருப்பு.

(இ—பு) முல்லை, காந்தள், முளரி, கருவிளை, அல்லி ஆகியவை உவமை ஆகுபெயர்களாகி முறையே பற்கள், விரல்கள், முகம், கை, கால், கருவிழி, வாய் ஆகியவற்றைக் குறித்தன. அரோ—அசை.

இச்செய்யுளில் அற்புத உவமை அணி வந்துள்ளது.

விளக்கம்: இந்தக் கொடி, முல்லைக் கொடியைப் போலக் கொடியில் பூக்கும் பூக்களை மட்டும் பூக்காமல், மலையில் செடியில் பூக்கும் காந்தளையும், நீரில் கொடியில் பகலில் பூக்கும் தாமரையையும், நீரில் கொடியில் இரவில் பூக்கும் குமுத மலரையும், செடியில் பூக்கும் அனிச்ச மலரையும் போன்ற வெவ்வேறு காலத்திலும், வெவ்வேறு இடத்திலும் பூக்கும் வேறு பூக்களையும் தானே பூத்து நிற்பதாலும், அன்றியும் தான் கொடிய பாலைவனத்திற் படர்ந்து கொடிய வெப்பத்தைப் பெற்றுக்கொண்டிருக்கும்போதே இப் பூக்களைப் பூத்திருப்பதாலும் அக்கொடிய இடத்தை விட்டு அகலாதிருப்பதாலும் அற்புத வல்லியாயிற்று. பெண்ணை அற்புதவல்லியாக்கிப் பலவகைப் பூக்களைப் பெண்ணின் பலவேறு உறுப்பிற்கு உவமை ஆக்கி, அக்கொடி அழலையும் ஏற்றுப் பாலைவனத்தில் படர்ந்துள்ளதாகக் கூறியுள்ளது அற்புதத்தை விளைவிக்கிறது.

இதுவும் கலிவிருத்தம்.

*மடவரல் வஞ்சனி மாயை நாமமுங்*
*கெடவரல் பொய்தலுங் கிளர்சி லீமுகங்*
*கடிதடப் பெயரதுங் கருது ருததான்*
*மடிவரூர் மாக்களோ வனத்தின் மாக்களே.* **112**

(ப—ரை) மடவரல், வஞ்சனி, மாயை நாமமும்–மடமை வருதற்குரியர், வஞ்சகத் தன்மையர், மயக்குபவர் என்று பொருள்படும் பெயர்களின் பொருளையும், பொய்தலும்– கெடுதற்கு வருக, பொய்த்தலை அறிக என்று பொருள்படும் படியாகவும் உள்ள விளையாட்டைக் குறிக்கும் பெயர்களின் பொருளையும், கிளர்சிலீமுகம்-விம்முகின்ற முலைக்கண் என்று

பொருள்பட்டு அம்பு என்றும் உணர்த்தும் பெயரின் பொருளையும், கடிதடம்–அல்குல் என்று பொருள்பட்டு ஒழிதற்குரிய வழி என்றும் உணர்த்தும் பெயரின் பொருளை யும், கருது உருததால்–கருத்திற் கொள்ளாததால் அவற்றால் துன்புற்று. மடிவர்–மடிகின்றவர், ஊர் மாக்களோ–ஊரில் வாழும் வன்மக்களோ? வனத்தின் மாக்களே – அவர்கள் காட்டில் வாழும் விலங்குகளே ஆவர்.

(பொ—ரை) மடமை வருதற்கு உரியர், வஞ்சகத் தன்மையர், மயக்குபவர் என்று பொருள்படும் பெயர்களின் பொருளையும், கெடுதற்கு வருக, பொய்த்தலை அறிக என்று பொருள்படும்படியாகவும் உள்ள விளையாட்டைக் குறிக்கும் பெயர்களின் பொருளையும், விம்முகின்ற முலைக்கண் என்று பொருள்பட்டு அம்பு என்றும் உணர்த்தும் பெயரின் பொருளையும், அல்குல் என்று பொருள்பட்டு ஒழிதற்குரிய வழி என்றும் உணர்த்தும் பெயரின் பொருளையும், கருத்திற் கொள்ளாததால் அவற்றால் துன்புற்று மடிகின்றவர் ஊரில் வாழும் வன்மக்களோ? அவர்கள் காட்டில் வாழும் விலங்கு களே ஆவர்.

அருஞ்சொற்பொருள்: நாமம்–பெயர்; கெடவரல்–விளையாட்டு; பொய்தல்–விளையாட்டு; சிலீமுகம்–முலைக்கண் –அம்பு; கடிதடம்–அல்குல்.

(இ—பு) பொய்தல்–பொய்த்தலை அறிக. அறிக என்றது சொல்லெச்சம்.

விளக்கம்: கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு –தொல்காப்பியம். ‘பொய்தல் ஆயமொடு’ இங்கு பொய்தல் விளையாட்டைக் குறிக்கிறது. விளையாடும் தோழியர் கூட்டத் துடன் என்பது அதன் பொருள். விளையாடுதற்குரிய பெண்ணின் பெயரும், விளையாட்டின் பெயரும், விளையாட் டுக் கருவிகளின் பெயரும், தனக்கு விளைவிக்க இருக்கும்

தீமைகளை உணர்த்தியும் அவ்விளையாட்டில் ஈடுபட்டுத் துன்புறுபவர் காட்டில் வாழும் விலங்குகளே என்றவாறு.

இதுவும் கலிவிருத்தம்.

### வஞ்சி விருத்தம்

*நடைகண்டெகி னம்பலர் முன்வருமோ*
*விடைகண்டுமி னெங்கும றைந்ததுகட்*
*கடைகண்டுக னற்புகும் வேன்முனையிவ்*
*விடைகண்டும்வி டாதவ ரென்படுவார்.* **113**

(ப—ரை) நடைகண்டு—பெண்ணின் நடையைக் கண்டு, வெட்கிய, எகினம் பலர்முன் வருமோ—அன்னப் பறவை பலர்முன்னே தோன்றுமோ? தோன்றாமல் மறைந்தது. இடை கண்டு மின் எங்கும் மறைந்தது—பெண்ணின் இடையைக் கண்டே மின்னலும் எங்கும் தோன்றாது மறைந்தது. கட்கடை கண்டு வேல்முனை கனற்புகும்—பெண்ணின் கடைக் கண்ணைப் பார்த்து வேலினுடைய நுனி நெருப்பிற்குள் நுழையும். இவ் இடை கண்டும்-அப்பெண்ணின் உறுப்புக்கள் இத்தகைய துன்பங்களை விளைவிப்பதைப் பார்த்தும், விடாதவர் என்படுவார்—அவைகளோடு கொள்ளும் தொடர்பை விடாதவர்கள் என்ன துன்பம் அடைவார்கள் அல்லது என்பு அடுவார் என்று கொண்டு தங்கள் உடம்பையே சுட்டுக் கொள்கிறவர் ஆவார்கள் என்றும் கொள்ளலாம்.

(பொ—ரை) பெண்ணின் நடையைக் கண்டு வெட்கிய அன்னப்பறவை பலர் முன்னே தோன்றாமல் மறைந்தது. பெண்ணின் இடையைக் கண்டே மின்னலும் எங்கும் தோன்றாது மறைந்தது. பெண்ணின் கடைக் கண்ணைப் பார்த்து வேலினுடைய நுனி நெருப்பிற்குள் நுழையும். அப்பெண்ணின் உறுப்புக்கள் இத்தகைய துன்பங்களை

விளைவிப்பதைப் பார்த்தும் அவற்றோடு கொள்ளும் தொடர்பை விடாதவர்கள் என்ன துன்பங்களைத்தான் அடையமாட்டார்கள். தம் உடம்பையே சுட்டுக் கொள்ளுகிறவர்கள் ஆவார்கள்.

அருஞ்சொற்பொருள்: எகினம்–அன்னம், கட்கடை–கடைக்கண், இடை–துன்பம், அடுவார்–சுடுவார்.

(இ—பு) என்பு–உடம்பு, சினையாகுபெயர்.

விளக்கம்: பெண்ணின் நடைக்குத் தோற்ற அன்னப் பறவையும், இடைக்குத் தோற்ற மின்னலும், யார் கண்ணிலும் படாமல் ஒளிந்துகொண்டன. கடைக் கண்ணுக்குத் தோற்ற வேல்முனை வீரத்தோடு தொடர்புடையதாதலால் நெருப்பிற்குள் நுழைந்துவிட்டதாகக் கூறுவது தற்குறிப் பேற்ற அணியாய் அழகு செய்கிறது.

இது சிந்தடி நான்கு பெற்று வந்த வஞ்சி விருத்தம்.

*குழலளிய னிச்சமிரு கொங்கைவரை திங்கள்*
*விழியுழைகள் வள்ளையுற மேவியபெண் வஞ்ச*
*மொழியலற லைத்துயரை மோகமன தொன்ற*
*வழலதனை மாயமெய டைந்தகல்வ தின்றே.* 114

(ப—ரை) அளிகுழல்–வண்டு படியும் கூந்தலையும், அனிச்சம்–அனிச்சமலர் போன்ற பாதங்களையும், இரு கொங்கை–இரண்டு பெரிய தனங்களையும், வரை–மூங்கிலைப் போன்ற தோள்களையும், திங்கள்–சந்திரனைப் போன்ற முகத்தையும், உழைகள்விழி–மானின் விழியில் உள்ள மருட்சியையும், கள்ளில் உள்ள அறிவை மயக்கும் கவர்ச்சியையும் உடைய விழிகளையும், வள்ளை–வள்ளைப் பூவைப் போன்ற காதுகளையும், உற மேவிய பெண்–நன்கு பொருந்தியுள்ள

பெண்ணின், வஞ்ச மொழி—வஞ்சனை பொருந்திய சொல்லை யும், அல்அறலை—கரிய கூந்தலையும் விரும்பி, மனது மோகம் ஒன்ற—மனமானது காம மயக்கத்தைப் பொருந்த, துயரை—துன்பத்தையும், அழலதனை—நெருப்பையும், மெய் அடைந்து—உடம்பு பெற்று, மாய-மடிய, அம்மயக்கம் நீங்குமே அன்றி, அகல்வது இன்று ஏ—அம்மயக்கம் தானே நீங்குவது இல்லை.

(பொ—ரை) வண்டு படியும் கூந்தலையும், அனிச்சமலர் போன்ற பாதங்களையும், இரண்டு பெரிய தனங்களையும், மூங்கிலைப் போன்ற தோள்களையும், சந்திரனைப் போன்ற முகத்தையும், மானின் விழியிலுள்ள மருட்சியையும், கள்ளிலுள்ள அறிவை மயக்கும் கவர்ச்சியையும் உடைய கண்களையும், வள்ளைப் பூவைப் போன்ற காதுகளையும், நன்கு பொருந்தியுள்ள பெண்ணின் வஞ்சனை பொருந்திய சொல்லை யும், கரிய கூந்தலையும் விரும்பி, மனமானது காம மயக்கத் தைப் பொருந்த உடம்பு துன்பத்தையும், நெருப்பையும் பெற்று மடிய, அம்மயக்கம் நீங்குமே அன்றித், தானே அம்மயக்கம் நீங்குவது இல்லை.

அருஞ்சொற்பொருள்: அளி—வண்டு; குழல்—கூந்தல்; வரை—மூங்கில், தோள்; உழை—மான்; வள்ளை—வள்ளைப் பூ, காது.

(இ—பு) அனிச்சம்-பாதங்கட்கும், வரை-தோள்கட்கும் திங்கள்—முகத்திற்குப் உவமை ஆகுபெயர்.

இதுவும் கலிவிருத்தம்.

*தம்மை வீழ்பவர்ச ரீரமதி லல்குலரவின்*
*வெம்மை யும்மனதின் மீதுகுழன் மையிருளையு*
*மிம்மை யேயுயிரி டத்துவிழி யந்தகனையு*
*மம்ம வேவுகொடி யார்கொடுமை யாரறிவரே. 115*

(ப—ரை) தம் ஐ வீழ்பவர் – தம் அழகை விரும்புபவருடைய, சரீரம் அதில்–உடம்பில், இம்மையே–இப்பிறப்பிலேயே, அல்குல் அரவின் வெம்மையும்– அல்குலாகிய பாம்பினது விடத்தின் வெம்மையையும், மனதின்மீது–அவர்களுடைய மனத்தில், குழல் மையிருளையும் – கூந்தலினுடைய கருமை போன்ற இருளையும், உயிரிடத்து–அவர்களுடைய உயிரின் மீது, விழி அந்தகனையும்-தம் கண்ணில் உள்ள கூற்றுவனையும், ஏவு கொடியார் – ஏவும் கொடுமை செய்கின்றவராகிய பூங்கொடி போன்றவருடைய, கொடுமை–கொடுமையை, அம்ம! யார் அறிவரே!–அம்மா! யாரே அறிய வல்லவர்!

(பொ—ரை) தம் அழகை விரும்புபவருடைய உடம்பில் இப்பிறப்பிலேயே அல்குலாகிய பாம்பினது விடத்தின் வெம்மையையும், அவர்களுடைய மனத்தில் கூந்தலினுடைய கருமை போன்ற இருளையும், அவர்களுடைய உயிரின்மீது தம் கண்ணில் உள்ள கூற்றுவனையும், ஏவும் கொடுமை செய்கின்றவராகிய பூங்கொடி போன்றவருடைய கொடுமையை யாரே அறிய வல்லவர்.

அருஞ்சொற்பொருள்: மை-கருமை; அந்தகன்-எமன்; கொடியார்–பூங்கொடி போன்றவர், கொடுமை செய்பவர்.

(இ—பு) அம்ம!–வியப்பிடைச் சொல். அல்குல்அரவு –உருவகம். அரவு–அரவின் படத்திற்கு முதலாகுபெயர்.

இதுவும் கலிவிருத்தம்.

*கருமணல் வெள்ளிக் கம்பிக ளாயின கலசங்க*
*ளுருகிய வங்கத் திருதக டாயிழி வுற்றேகீழ்*
*பெரியக டுங்கற் பிளவுமி ருப்புப் பிளவான*
*தரிதொரு பேதையி தறியா ரியல்பே யாமென்பார்.*
*116*

(ப—ரை) கருமணல்-அறல்போன்ற கூந்தல், வெள்ளிக் கம்பிகள் ஆயின—வெள்ளிக் கம்பிகளின் நிறமாகிய வெண்மை நிறத்தை அடைந்தன, கலசங்கள் – கலசங்களைப் போன்ற தனங்கள், உருகிய வங்கத்து இருதகடாய் இழிவுற்ற—உருகிய ஈயத்தின் இரண்டு தகடுபோல ஆகித் தாழ்வுற்றன, கீழ் பெரிய கருங்கற்பிளவும்-கீழே பெரிய கடிய கற்பிளவைப் போலிருந்த அல்குலும், இருப்புப் பிளவு ஆனது அரிது—வெறும் பிளவாக மட்டும் இருப்பதானது அருமை, இது அறியார் இயல்பே ஒரு பேதை ஆம் என்பர்—இதை அறியாதவராய் அவற்றை மோகிக்கின்றவர் இயல்பே ஒப்பற்ற பேதைமையாகும் என்று கூறுவர் பெரியோர்.

(பொ—ரை) அறல் போன்ற கூந்தல் வெள்ளிக் கம்பிகளின் நிறமாகிய வெண்மை நிறத்தை அடைந்தன. கலசங்களைப் போன்ற தனங்கள் உருகிய ஈயத்தின் இரண்டு தகடு போல ஆகித் தாழ்வுற்றன. கீழே பெரிய கடிய கற்பிளவைப் போலிருந்த அல்குலும் வெறும் பிளவாக மட்டும் இருப்பதானது அருமை. இதை அறியாதவராய் அவற்றை மோகிக்கின்றவர் இயல்பே ஒப்பற்ற பேதைமையாகும் என்று கூறுவர் பெரியோர்.

அருஞ்சொற்பொருள்: அறல்—அறல் போன்ற கூந்தல், கலசம்—தனம், வங்கம்—ஈயம்.

(இ—பு) அறல்-கூந்தல், உவமையாகுபெயர். வெள்ளிக் கம்பிகள் – வெண்மையான கூந்தல், உவமையாகுபெயர். கலசங்கள்—தனங்கள், உவமையாகுபெயர். கருங்கற்பிளவு—அல்குல், உவமையாகுபெயர்.

இது நெடிலடி நான்கு பெற்று வந்த கலித்துறை.

*பொன்னோ டுண்ணற் பாலவை நல்லுடை புனைபூணு*
*மின்னார் கையிற் றந்துற வோர்நிலம் வீடும்விட்*
*டென்னோ வள்ளற் கேகுவ ரெனவிட ரிதுகண்டே*
*யன்னார் முற்சென் றிடவவர் போல்வர்ந லறிவீதே.*
*117*

(ப—ரை) பொன்னோடு–பொன்னுடன், உண்ணற் பாலவை–உண்பதற்குரிய பொருள்களையும், நல் உடை–நல்ல உடைகளையும், புனை பூணும்–அணியும் அணிகலன்களையும், மின்னார் கையில் தந்து–மின் போன்ற பெண்களின் கையில் கொடுத்து, உறவோர் நிலமும் வீடும் விட்டு–உற்றாருக்குரிய நிலத்தையும், வீட்டையும்கூட அவர்கட்கு விட்டு, என்னோ–ஏனோ, அள்ளற்கு–அள்ளல் ஆகிய நரகத்திற்கு, ஏகுவார்என –செல்வர் என்று (நல்லோர்) கூற, விடர் இது கண்டு-தூர்த்தர் இதைக் கண்டு, அன்னார் முற்சென்றிட–அத்தகையவருக்கும் முன்னே அந்நரகிற்குச் செல்ல, அவர் போல்வர் – அக் காமுகரைப் போன்றே ஒழுகுவர், அத்தகையவர் நல்லறிவு ஈதே–அத்தகையவரின் புன்மை அறிவு இதுவே.

(பொ—ரை) பொன்னும், உண்பதற்குரிய பொருள் களையும், நல்ல உடைகளையும், அணியும் அணிகலன்களையும், மீன் போன்ற பெண்களின் கையில் கொடுத்து உற்றாருக்கு உரிய நிலத்தையும் வீட்டையும் கூட அவர்கட்கு விட்டு ஏனோ, அள்ளல் ஆகிய நரகத்திற்குச் செல்வர் என்று நல்லோர் கூற தூர்த்தர் இதைக்கேட்டு, அத்தகையவருக்கும் முன்னே அந்நரகிற்குச் செல்ல, அக் காமுகரைப் போன்றே ஒழுகுவர். அத்தகையவரின் புன்மை அறிவு இதுவே.

அருஞ்சொற்பொருள்: அதுகண்டு–அதைக் கேட்டு, நல்லறிவு–புல்லறிவு, அள்ளல்–நரகம்.

(இ—பு) நல்லறிவு–குறிப்புமொழி, புல்லறிவு என்று பொருள்படும்.

இதுவும் நெடிலடி நான்கு கொண்ட கலித்துறை.

*இருத னத்துறு கச்ச தாகவு*
*மிடையின் மேகலை யாகவு*
*மரவ டர்த்தப கத்து நல்லுடை*
*யாக வுந்தவ முற்றிட*
*லிருமை யென்பவ ரத்த னத்துளி*
*றைச்சி யாகியி டைக்குளே*
*நிரவு கட்டமி ராசி யச்சிறு*
*நீரு மாமிக நேருவார்.* *118*

(ப—ரை) இருதனத்து உறுகச்சு அது ஆகவும்-இரண்டு முலைகளிலும் பொருந்தும் கச்சு ஆகவும், இடையில் மேகலை ஆகவும்—இடையில் அணியப்படும் மேகலையாகவும், அரவு அடர்த்த பகத்து நல் உடையாகவும் – பாம்பின் படத்தைப் போன்ற அல்குலிடத்து அணியப்படும் நல்ல உடையாகவும், தவம் உற்றிடலே – பெறும் தவம் பெற்றிடலே, இருமை என்பவர் – இம்மை இன்பமும், மறுமை இன்பமும் ஆம் என்று கூறுவோர், அத்தனத்துள் இறைச்சி ஆகி—அந்தத் தனத்திலுள்ள இறைச்சியாகவும், இடைக்குளே நிரவு கட்டம் ஆகி-இடைக்குளே அமைந்த மலமாகவும், இராசியம் சிறு நீரும் ஆக – மறைவிடத்திலுறும் சிறுநீரும் ஆகவும், மிக நேருவார்—மிகவும் ஒப்புவார்.

(பொ—ரை) இரண்டு முலைகளிலும் பொருந்தும் கச்சு ஆகவும், இடையில் அணியப்படும் மேகலை ஆகவும், பாம்பின் படத்தைப் போன்ற அல்குலிடத்து அணியப்படும் நல்ல உடையாகவும், பெறும் தவம் பெற்றிடலே இம்மை இன்பமும் மறுமை இன்பமும் ஆம் என்று கூறுவோர் அந்தத் தனத்திலுள்ள இறைச்சியாகவும், இடைக்குள்ளே அமைந்த மலமாகவும், மறைவிடத்திலுறும் சிறுநீரும் ஆகவும் மிகவும் ஒப்புவார்.

அருஞ்சொற்பொருள்: மேகலை—ஓர் அணி, பகம்—அல்குல், இருமை – இம்மை-மறுமை, இராசியம் – மறை பொருள், கட்டம்—மலம், நேருவார்—ஒப்புவார்.

விளக்கம்: காமுகன் தான் ஒரு பெண்ணினுடைய இரண்டு தனங்களிலும் படிந்திருக்கும் கச்சாகவும், இடையில் அணியப்படும் மேகலையாகவும், அல்குலிடத்து அணியப்படும் நல்ல உடையாகவும் ஆகப் பெறுதலே தவம் ஆதல் அன்றி அதுவே தனக்கு இம்மை இன்பமும், மறுமை இன்பமும் தருவதாகவும் கருதுவதால், அவனே தனத்திற்குள் உள்ள இறைச்சியாகவும், இடுப்பிற்குள் உள்ள மலமாகவும், பகத்தின் வழியாக வரும் சிறுநீராகவும் ஆவதற்கு மனம் ஒப்புவார் என்று கூறுகிறார்.

இது எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*எமது கைகழல் விழிமு கத்தக மிச்சை*
*யுற்றக லானய*
*னிமிழ்மு ராரியும் வைத்த னன்கணி வற்றி*
*லென்றம டந்தையர்*
*தமது கொங்கைநு சுப்பு ரித்துமு தைத்து*
*லோசன நெற்றியோ*
*டமைய வல்குலி சைத்த டக்கியு மைய*
*னன்பரை யாள்வனே.*
*119*

(ப—ரை) எமது கை கழல் விழி முகம் அத்து அகம்—எமது கையையும், பாதத்தையும், கண்களையும், முகத்தையும் மார்பினையும் ஒத்திருக்கின்ற தாமரையாகிய மனையை, இச்சையுற்று அயன் அகலான் – விரும்பிப் பிரமன் அத் தாமரையை விட்டுப் பிரிய மாட்டான், இமிழ் முராரியும்—இனிய திருமாலும், இவற்றில் கண் வைத்தனன்—இவற்றைக் கண்டு அத் தாமரையையே தனக்கும் கையாகவும், பாதமாகவும், கண்ணாகவும், முகமாகவும், தன் மனைவிக்குரிய மனையாகிய மார்பாகவும் கொண்டான், என்ற மடந்தையர் தமது—என்று கூறிய பெண்களுடைய, கொங்கை உரித்து—கொங்கையாகிய இரு தந்தங்களையுடைய களிற்றின் தோலை உரித்தும்,

நுசுப்பு உதைத்தும்—இடை போன்ற துடியை அடித்தும், உலோசனம் நெற்றியோடு அமைய இசைத்தும்—கண்ணை நெற்றியில் அமையுமாறு பொருத்தியும், அல்குல் அடக்கியும் —அல்குலைப் போன்ற பாம்பை அடக்கியும், ஐயன் அன்பரை ஆள்வன்—சிவபெருமான் அன்பர்களை அவற்றின் கொடுமை யிலிருந்து ஆட்கொள்வான்.

(பொ—ரை) எமது கையையும் பாதத்தையும் கண் களையும், முகத்தையும், மார்பினையும் ஒத்திருக்கின்ற தாமரை யாகிய மனையை விரும்பிப் பிரமன் அத்தாமரையை விட்டுப் பிரியமாட்டான். இனிய திருமாலும் இவற்றைக் கண்டு அத்தாமரையையே தனக்கும் கையாகவும், பாதமாகவும், கண்ணாகவும், முகமாகவும், தன் மனைவிக்குரிய மனையாகிய மார்பாகவும் கொண்டான் என்று கூறிய பெண்களுடைய கொங்கையாகிய இரு தந்தங்களையுடைய களிற்றின் தோலை உரித்தும், இடை போன்ற துடியை அடித்தும், கண்ணை நெற்றியில் அமையுமாறு பொருத்தியும், அல்குலைப் போன்ற பாம்பை அடக்கியும் சிவபெருமான் அன்பர்களை அவற்றின் கொடுமையிலிருந்து ஆட்கொள்வான்.

அருஞ்சொற்பொருள்: கழல்—பாதம், இமிழ்—இனிய, ஐயன்—சிவபெருமான்.

(இ—பு) கழல்—பாதம், தானியாகுபெயர். கொங்கை—யானையின் தந்தத்திற்கு உவமையாகுபெயர் ஆகித், தந்தம்—யானைக்குச் சினையாகுபெயராயிற்று. இப்பாட்டில் ஏதுத்தற் குறிப்பேற்ற அணி அமைந்து அழகு செய்கிறது.

விளக்கம்: கல்வியாலும், செல்வத்தாலும் வெல்ல முடியாத காமத்தைத் தவம் ஒன்றே வெல்லவல்லது என்பது இப்பாட்டின் உட்கருத்து.

இதுவும் எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*மேக பந்தியலை சூழ்வி சும்புவரி*
*மீனெ னப்படுமு டுக்களா*
*லேக தந்தனரன் மால யன்றுடையி*
*டத்தொ டுச்சியுர நாவினிற்*
*றேகை மாரிடைய ருது றக்கொடுது*
*ளக்கு வார்பனிப யிர்ப்புநாண்*
*மூகை போன்மகண டித்த டுப்பினவை*
*முற்று மற்றுயிர்மெய் பற்றலே.* **120**

(ப—ரை) மேகம்ஆல்-மேகத்தைப் போன்ற கூந்தலால், பந்துஆல்-பந்துகளைப் போன்ற தனங்களால், இயலால் –சாயலால், ஐஆல்–அழகால், சூழ்விசும்பால்–சுற்றும் அம்பரமாகிய சீலையால், வரிமீன் எனப்படும் உடுக்களால்–வரியை உடைய கயல் போன்ற கண்கள் என்று கூறப்படும் அம்புகளால், ஏகதந்தன் துடையிடத்தும்–ஒற்றைக் கொம்பனாகிய விநாயகருடைய துடையிடத்தும், அரன் இடத்தொடு உச்சி–சிவபெருமானின் இடப்பாகத்துடன் உச்சியிலும், மால் உரம் –திருமாலின் மார்பிலும், அயன் நாவில்–பிரமனுடைய நாவிலும், உறக்கொடு–பொருந்தியிருந்துகொண்டு. துளக்குவார்–அவர்களையே நடுங்கச் செய்வார்கள் அவர்களுடைய மனைவியர். ஆதலால், மகள்–ஒரு பெண், பனி–அச்சம், பயிர்ப்பு–அருவருப்பு, நாண்–நாணம், மூகை–ஊமையாகும் மடமை, போல் நடித்து–ஆகியவற்றை உடையவரைப்போல் நடித்து, அடுப்பின்–அடைந்தால், அவை முற்றும் அற்று – அவை முழுவதும் இல்லாமல், உயிர் மெய் பற்றலே–ஒருவருடைய உயிரையும், உடம்பையும் பற்றுபவரே யாவர்.

(பொ—ரை) மேகத்தைப் போன்ற கூந்தலால், பந்துகளைப் போன்ற தனங்களால், சாயலால், அழகால், சுற்றும் சீலையால், வரியை உடைய கயல் போன்ற கண்கள் என்று கூறப்படும் அம்புகளால், ஒற்றைக் கொம்பனாகிய விநாயகருடைய துடையிடத்தும், சிவபெருமானின் இடப்பாகத்

துடன் உச்சியிலும், திருமாலின் மார்பிலும், பிரமனுடைய நாவிலும், பொருந்தியிருந்துகொண்டு, அவர்களையே நடுங்கச் செய்வார்கள் அவர்களுடைய மனைவியர். ஆதலால் ஒரு பெண் அச்சம், அருவருப்பு, நாணம், ஊமையாகும் மட்மை ஆகியவற்றை உடையவரைப்போல நடித்து, அடைந்தால் அவை முழுவதும் இல்லாமல் ஒருவருடைய உயிரையும், உடம்பையும் பற்றுபவரே யாவர்.

அருஞ்சொற்பொருள்: ஏகதந்தன்-ஒற்றைக்கொம்பன், விநாயகர், பனி—அச்சம், பயிர்ப்பு-அருவருப்பு, மூகை-ஊமை யாகும் மடமை.

(இ—பு) மேகம் கூந்தலுக்கும், பந்து தனங்களுக்கும் உவமையாகுபெயர்.

விளக்கம்: விநாயகருடைய துடையில் வீற்றிருப்பவர் சித்தி, புத்தி என்னும் அவருடைய இரு மனைவியர். சிவபெருமானின் இடப்பாகத்தில் உமையும், உச்சியில் கங்கையும் உளர். திருமாலின் மார்பில் திருமகளும், அயன் நாவில் கலைமகளும் உளர்.

இதுவும் எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*வாளி யொன்றுகழ லோர்ச ரங்கவிகை*
*வதன மோர்கணைபல் கொய்யுளை*
*காளம் வாய்முரசு பாண மொன்றுகொடி*
*கண்வின் மேனிமகு டந்தனம்*
*வேளு டைக்களிறு நாணி குந்தளமி*
*கத்தி ரண்டிவைபொ ரும்படைக்*
*கோளு மாகியித சத்து ருத்தகைமை*
*கொண்டு நன்னெறிகு லைப்பதே.* **121**

(ப—ரை) கழல் ஒன்று வாளி—கால்கள் தாமரைப் பூவைப் போல இருந்து கொடுமை செய்யும் ஓர் அம்பு, கவிகை ஓர் சரம்—குவியும் கையும் நீரிற் பிறந்த தாமரைபோல் தோன்றிக் கொடுமை செய்யும் ஓர் அம்பே, வதனம் ஓர் கண்—முகமும் தாமரையாகிய ஓர் அம்பே, பல்—பற்கள், கொய்யுளை —கொய்யப்பட்ட பிடரி மயிரையுடைய குதிரை என்றும் பொருள்படும் குந்தமே, வாய் முரசு காளம்—பறையறையும் வாய் சூலமே, ஒன்று கொடி கண் பாணம்—பொருந்திய நீண்ட கண்களும் அம்பே, மேனி வில்—உடம்பு வில்லே, மகுடம் தனம் வேளுடைக் களிறு—மூடியிட்ட முலை மன்மதனையும் தோற்கச் செய்யும் யானையின் கொம்புகள் ஆகும், குந்தளம் நாணி—கூந்தல் பிணிக்கவல்ல கயிறு, இவை மிகத் திரண்டு—இவைகள் யாவும் ஒன்று சேர்ந்து, பொரும் படைக் கோளும் ஆகி—போர் புரியக் கொள்ளும் ஆயுதங்களும் ஆகி, இத சத்துருத் தகைமை கொண்டு—இனிய பகைமைகொண்டு, நன்னெறி குலைப்பதே—நல்ல வழியைக் குலைப்பதே ஆகும்.

(பொ—ரை) கால்கள் தாமரைப் பூவைப் போல இருந்து கொடுமை செய்யும் அம்பே. குவியும் கையும் நீரிற் பிறந்த தாமரைபோல் தோன்றிக் கொடுமை செய்யும் ஓர் அம்பே. முகமும் தாமரையாகிய ஓர் அம்பே. பற்கள் குதிரை என்ற பொருளைத் தரும் குந்தமே. பறையறையும் வாய் சூலமே. நெடுமை பொருந்திய கண்களும் அம்பே. உடம்பு வில்லே. முடியையுடைய முலை மன்மதனையும் தோற்கச் செய்யும் யானையின் கொம்புகளே ஆகும். கூந்தல் காமுகரைப் பிணிக்க வல்ல கயிறு. இவைகள் யாவும் ஒன்றுசேர்ந்து போர் புரியக் கொள்ளும் ஆயுதங்களாகி இனிய பகைமை கொண்டு நல்ல வழியைக் குலைப்பனவே ஆகும்.

அருஞ்சொற்பொருள்: அம்பு—நீர்—நீரிற் பிறக்கும் தாமரை. கொய்யுளை—கொய்யப்பட்ட பிடரி மயிரையுடைய குதிரை எனவும் பொருள்படும் குந்தம் ஆகிய கைவேல்.

இத சத்துரு—இன்பந் தருவது போலத் தோன்றித் துன்பந் தருவது. கொடிகண்—நீண்ட கண்.

(இ—பு) அம்பு—நீர், பின் நீரிற் பிறந்த தாமரைக்கு இடவாகுபெயர். கொய்யுளை—குதிரைக்கு வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை.

விளக்கம்: காலும், கையும், முகமும் நீரிற் பூக்கும் பூவாகிய தாமரை போலவும், கண் நீரிற் பிறக்கும் பூவாகிய குவளை போலவும் தோன்றினும் கொடுமை செய்வதில் அவை அம்பு போன்றவையே. கொய்யுளை என்ற சொல் கொய்யப்பட்ட பிடரி மயிரைக் குறித்துப் பிறகு ஆகு பெயராகக் குதிரையைக் குறித்துப் பிறகு குதிரை என்னும் பொருள்படும் குந்தமாகிய கைவேலைக் குறித்தது. பெண் களின் பற்கள் போரிற் பயன்படும் குதிரைகளும், கைவேல் களுமாயின என்பது கருத்து. பெண்ணினுடைய பல உறுப் புக்களும் முன்னர் இன்பந் தருவனபோலத் தோன்றிப் பிறகு போர்க் கருவிகளைப் போலத் துன்பத்தைச் செய்து ஒருவரை நன்னெறியினின்றும் பிரித்துத் தீய வழிகளில் செலுத்துதலின் இத சத்துருவாயின.

இதுவும் எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*மாயையொடு வஞ்சனியெ னத்தகுமு*
*கங்கணுதல் வார்செவி பலு*
*வாயுதடு நாசிகவுள் கண்டமுலை*
*தோள்கைவிரல் வன்மடி புறந்*
*தேயிடைப கங்குதமொ ருருகழ*
*லாயுமுரி சீழ்குடர் நிணந்*
*தோயுதிர நாடிபுழு வென்புமல*
*நீர்தசைதொ டக்குநிறை வே.* 122

(ப—ரை) முகம், கண், நுதல்—நெற்றி, வார்செவி—நீண்ட காது, பல், நா, வாய், உதடு, நாசி—மூக்கு, கவுள்—கதுப்பு, கண்டம்—கழுத்து, முலை, தோள், கைவிரல், வன்மடி வலிய வயிறு, முதுகு, தேய் இடை—சிறுத்த இடுப்பு, பகம்—பெண்குறி, குதம்—மலவாய், ஊரு—தொடை, கழல்—அடி, ஆயும் உரி—அழகூட்டும் தோல், சீழ், குடர்—குடல், நிணம்—கொழுப்பு, தோய்உதிரம்—உறையும் இரத்தம், நாடி—நரம்பு, புழு, என்பு—எலும்பு, மலம், நீர், தசை, தொடக்கு—சூதகம், ஆகியவற்றின் நிறைவே—ஆகியவற்றின் முழு உருவமாகிய பெண்ணையே, மாயையொடு—மயக்குகின்ற மாயையொடு, வஞ்சனி எனத்தகும்—இடாகினி என்று சொல்லத்தகும்.

(பொ—ரை) முகம், கண், நெற்றி, நீண்ட காது, பல், நாக்கு, வாய், உதடு, மூக்கு, கதுப்பு, கழுத்து, முலை, தோள், கைவிரல், வலிய வயிறு, முதுகு, சிறுத்த இடுப்பு, பெண்குறி, மலவாய், தொடை, அடி, தோல், சீழ், குடல், கொழுப்பு, இரத்தம், நரம்பு, புழு, எலும்பு, மலம், நீர், தசை, சூதகம் ஆகியவற்றின் முழு உருவமாகிய பெண்ணையே மயக்குகின்ற மாயையொடு இடாகினி என்று சொல்லத்தகும்.

அருஞ்சொற்பொருள்: பனு—பல், நா; கவுள்—கதுப்பு, கன்னம்; பகம்—பெண்குறி; உரி—தோல்; தொடக்கு—சூதகம்.

இது நெடிலடி நான்கு பெற்று வந்த கலித்துறை.

*அனிச்ச மங்கிரி நூலிடை கைதளி*
*ராம்பல்வாய் கண்ணெய்தல்*
*பனிச்சை மைபுகை யாடையா*
*தலிற்றகும் பாரின்மெல் லியரென்னத்*
*துனிச்சை யோடிசைந் திடவவர்*
*தமைத்தழீஇத் துஞ்சலால் விடர்கீழே*
*தனிச்ச கால்பட வீழ்ந்துமீண்*
*டெழாமையாற் றுமிக நொய்யோரே.* ***123***

(ப—ரை) அங்கிரி–பாதம், அனிச்சம்–அனிச்சப் பூப்போல மெல்லிது, இடை நூல்–இடை நூல்போல மெல்லிது, கை தளிர்-கைகள் தளிரைப்போல மெல்லியவை, வாய்ஆம்பல்–வாய் செவ்வாம்பல் மலரின் இதழ்கள்போல மெல்லியவை, கண் நெய்தல்–கண் கரிய நெய்தல் பூப்போன்றவை, பனிச்சை மை-சடை மேகத்தைப்போலக் கரியது, ஆடை புகை-ஆடை புகைபோல மென்மையானது, ஆதலின்–ஆதலால், பாரில்–உலகில், மெல்லியர் எனத் தகும் அப்பெண்களை–மெல்லியர் என்று கூறுதல் தகும் என்று, துன் இச்சையோடு – தீய அல்லது கூடும் விருப்பத்தோடு, இசைந்திட அவர்தமைத் தழீஇ – அவரும் உடன்பட்டமையால் அவர்களைத் தழுவி, துஞ்சலால்–மடிதலால். விடர்–காமுகர், தனிச்ச கால்பட–தம் ஒப்பற்ற சந்ததி கெடுமாறு, கீழே வீழ்ந்து – சிறுமையில் விழுந்து, மீண்டு எழாமையால் – மீண்டும் தலை தூக்காமை யால், தாம் மிகு நொய்யோரே–தாமும் மிகவும் மனத்திடமற்ற இழிவுடையோரே.

(பொ—ரை) பாதம் அனிச்சப் பூப்போல மெல்லிது. இடை நூல்போல மெல்லிது. கைகள் தளிரைப்போல மெல்லியவை வாய் செவ்வாம்பல் மலரின் இதழ்கள்போல மெல்லியவை. கண் கரிய நெய்தல் பூப்போன்றவை. சடை மேகத்தைப்போலக் கரியது. ஆடை புகைபோல மென்மை யானது. ஆதலால் உலகில் மெல்லியர் என்று கூறுதல் தகும் என்று தீய அல்லது கூடும் விருப்பத்தோடு அவரும் உடன் பட்டமையால் அவர்களைத் தழுவி. மடிதலால், காமுகர் தம் ஒப்பற்ற சந்ததி கெடுமாறு சிறுமையில் விழுந்து மீண்டும் தலை தூக்காமையால், தாமும் மிகவும் மனத்திடமற்ற இழிவுடையோரே.

அருஞ்சொற்பொருள்: அங்கிரி – பாதம்; தனிச்ச – ஒப்பற்ற; கால்–சந்ததி; விடர்–காமுகர்; துன் இச்சை–கூடும் விருப்பம், தீய விருப்பம்.

(இ—பு) தழீஇ–சொல்லிசையளபெடை.

இது அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*இரவுரவ மிருளடர்கார்க் குழல்செந்துத்*
*தானஞ்செவ் வியவூண் சர்வாய்*
*பொருவுபுல வுடல்பூதி மாபூதி*
*களிறனைய புலவுக் கொங்கை*
*அரின்மலச்சார் புதரங்கும் பீபாகஞ்*
*சோணிதப்பூப் பள்ளல் மாயக்*
*கரவிடமாம் பகங்கூட சாலமென்றோர்ந்*
*தகல்வர்பர கதிவேட் டோரே.* **124**

(ப—ரை) இருளடர் கார்க்குழல்–இருள் நிறைந்த கரிய தலைமுடி, இரவுரவம்–இரவுரவம் என்னும் இருண்ட நரகம் ஆகும், செவ்விய ஊண் சார்வாய்–சிவந்த பெரிய உணவு கொள்ளும் வாய், செந்துத்தானம்–செந்துத்தானம் என்னும் நரகமாகும், பொருவு புலவு உடல்-மோதலைச்செய்யும் முடை நாற்றம் வீசும் உடல், பூதி – பூதி என்னும் நரகமாகும், களிறனைய புலவுக் கொங்கை-யானையினுடைய கொம்புகளைப் போன்ற ஊன் பொதிந்த கொங்கை, மாபூதி–மாபூதி என்னும் நரகமாகும், அரில் மலச்சார் பு உதரம்-குற்றமுடைய அழுக்குப் பொருந்திய வயிறு, கும்பீபாகம்–கும்பீபாகம் என்னும் நரகம் ஆகும், சோணிதப் பூப்பு–உதிரம் ஒழுகும் பூப்பு நீர், அள்ளல் –அள்ளல் என்னும் நரகமாகும், மாயக் கரவு இடம் ஆம்பகம்– மயக்கி வஞ்சம் புரியும் மறைவிடம், கூடசாலம்–கூடசாலம் என்னும்நரகமாகும், என்று ஓர்ந்து-என்று ஆராய்ந்துணர்ந்து, பரகதி வேட்டோர்-மேலான நிலையை விரும்பியவர், அகல்வர்– ஏழு நரகத்திற்கும் இருப்பிடமாகிய அத்தகைய பெண்களை விட்டு விலகிச் செல்வர்.

(பொ—ரை) இருள் நிறைந்த கரிய தலைமுடி இரவுரவம் என்னும் நரகம் ஆகும். சிவந்த பெரிய உணவு கொள்ளும் வாய் செந்துத்தானம் என்னும் நரகம் ஆகும். மோதலைச் செய்யும் முடை நாற்றம் வீசும் உடல் பூதி என்னும் நரகம் ஆகும். யானையினுடைய கொம்புகளைப் போன்ற ஊன்

பொதிந்த கொங்கை மாபூதி என்னும் நரகம் ஆகும். குற்ற முடைய அழுக்குப் பொருந்திய வயிறு கும்பீபாகம் என்னும் நரகமாகும். உதிரம் ஒழுகும் பூப்புநீர் அள்ளல் என்னும் நரகம். மயக்கி வஞ்சம் புரியும் மறைவிடம் கூடசாலம் என்னும் நரகமாகும் என்று ஆராய்ந்து உணர்ந்து மேலான நிலையை விரும்பியவர் ஏழு நரகத்திற்கும் இருப்பிடமாகிய அத்தகைய பெண்களை விட்டு விலகிச் செல்வர்.

அருஞ்சொற்பொருள்: ஊண்-உணவு, களிறு-களிற்றின் கொம்புகள், பகம்—மறைவிடம், அரில்—குற்றம்.

(இ—பு) களிறு—களிற்றுக்கொம்பு, முதலாகுபெயர்.

விளக்கம்: இரவுரவம், செந்துத்தானம், பூதி, மாபூதி, கும்பீபாகம், அள்ளல், கூடசாலம் என்பன ஏழு நரகங்கள் ஆகும்.

இதுவும் அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*ஒளிநாட்டு விண்மீன்க ளெதிர்ப்பட்டுத்*
*தமதினமென் றூன்மச் சத்தின்*
*குளிகாட்டு சுனைவீழ்ந்து பாதலத்துற்*
*றுலைந்துகரை கூடா வென்றல்*
*வெளிநாட்ட மறிர்சுகமா மைந்தர்புறத்*
*தெதிர்மடவார் வினையல் குற்புன்*
*களிவேட்டு வீழ்ந்துநிர யத்தழுந்தி*
*மீளாது கலங்கற் கொப்பே.* **125**

(ப—ரை) ஒளிநாட்டு விண்மீன்கள் – ஒளி வீசுகின்ற விண்மீன்கள், எதிர்ப்பட்டு—நேரில் கண்டு, தமது இனம் என்று—தமது இனமாகும் என்று எண்ணி, ஊன் மச்சத்தின்—ஊன் உடலையுடைய மீனின், குளிகாட்டு சுனை வீழ்ந்து—ஆழமான மலைச் சுனையில் விழுந்து, பாதலத்து உற்று—அடிப்

பகுதியை அடைந்து, உலைந்து கரைகூடா என்றல்–வருந்திக் கரை ஏரு என்று கூறுதல், வெளிநாட்டம் அறிற் சுகம் ஆம் மைந்தர்–உள்ளம் வெளிப் பொருள்களை நாடாவிடில் இன்பம் உண்டாகும் என்பதை உணராத இளைஞர்கள், புறத்து எதிர் மடவார்–வெளியிலே எதிர்ப்படுகின்ற அழகிய பெண்களின், வினை அல்குல் புன்களி வேட்டு – தீவினையில் வீழ்த்துகின்ற அல்குலால் வரக்கூடிய சிறிய இன்பத்தை விரும்பி, நிரயத்து அழுந்தி–நரகத்தில் புதைந்து, மீளாது கலங்கற்கு ஒப்பே–மீளமுடியாமல் கலங்குவதற்கு ஒப்பாகும்.

(பொ—ரை) ஒளி வீசுகின்ற விண்மீன்கள் நேரில்கண்டு தம் இனமாகும் என்றெண்ணி ஊனுடலை உடைய மீனின் ஆழமான மலைச் சுனையில் விழுந்து ஆழமான மடுவை அடைந்து வருந்திக் கரை ஏரு என்று கூறுவது, உள்ளம் வெளிப் பொருள்களை நாடாவிடில் இன்பம் உண்டாகும் என்பதை உணராத இளைஞர்கள் வெளியிலே எதிர்ப்படுகின்ற அழகிய பெண்களின் தீவினையில் வீழ்த்துகின்ற அல்குலால் வரக்கூடிய சிறிய இன்பத்தை விரும்பி நரகத்தில் புதைந்து மீளமுடியாமல் கலங்குவதற்கு ஒப்பாகும்.

அருஞ்சொற்பொருள்: குளி – ஆழம், மச்சம் – மீன், விடன்–காமுகன், நாட்டும்–வீசும்.

இதுவும் அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*பெரியர்பாற் செலற்கருண ஞய்த்தன்முன்*
*னெறியிலவர் பெயர்ந்தா ரேனுந்*
*திரிதராட் டிரணுகி மாதருருக்*
*காண்பதற்கிந் திரனு யன்ஞர்க்*
*கரியசீர் சொலச்சேட ஞய்க் கார்த்த*
*வீரியனு யவர்கட் கேவல்*
*புரியவே விடன்வினைக்கு விளைநிலனுய்*
*விறகாவன் புலவுத் தீக்கே.* **126**

(ப—ரை) பெரியர்பால் செலற்கு அருணன் ஆய்-பெரிய வரிடம் செல்லுதற்கு முடவனாகியும், தன்முன் நெறியில் அவர் பெயர்ந்தாரேனும்-தன்முன்னே வழியில் அவர் வந்தார் என்றாலும், திரிதராட்டிரனாகி-குருடன் ஆகியும், மாதர்உருக் காண்பதற்கு-பெண்களினுடைய உருவத்தைப் பார்ப்பதற்கு, இந்திரனாய்-ஆயிரங் கண்ணையுடையவனாகியும், அன்னார்க்கு அரியசீர் சொல-அந்தப் பெண்களுடைய சிறப்பைப் புகழ்ந்து பேசுதற்கு, சேடனாகி – ஆயிரம் நாவையுடையவனாகியும், அவர்கட்கு ஏவல் புரிய – அப்பெண்களுக்குப் பணிவிடை செய்வதற்கு, கார்த்தவீரியன் ஆய்-ஆயிரம் கைகளையுடைய கார்த்தவீரியன் ஆகியும், வினைக்கு விளைநிலன் ஆய்-தீவினைக்கு விளையும் நிலன் ஆகியும், புலவுத் தீக்கே விறகு ஆவன்-நரகத் தீக்கு விறகாகியும் அழிவன்.

(பொ—ரை) காமுகன் பெரியவரிடம் செல்லுதற்கு முடவனாகியும், தன் முன்னே வழியில் அப்பெரியவர் வந்தார் என்றாலும் குருடனாகியும், பெண்களினுடைய உருவத்தைப் பார்ப்பதற்கு ஆயிரங் கண்ணையுடையவனாகியும், அந்தப் பெண்களுடைய சிறப்பைப் புகழ்ந்து பேசுதற்கு ஆயிரம் நாவையுடையவனாகியும், அப்பெண்களுக்குப் பணிவிடை செய்வதற்கு ஆயிரம் கைகளையுடையவனாகியும், தீவினைக்கு விளையும் நிலனாகியும், நரகத் தீக்கு விறகாகியும் அழிவன்.

அருஞ்சொற்பொருள்: புலவு–நரகம்.

விளக்கம்: அருணன் – சூரியனுடைய தேரோட்டி, முடவன். திருதராட்டிரன்–பிறவிக் குருடன். இந்திரன்–ஆயிரங் கண்களைப் பெற்றவன். சேடன் – ஆதிசேடன், ஆயிரம் தலைகளை உடையவன், எனவே ஆயிரம் நாவை உடையவன். கார்த்தவீரியன்–ஆயிரம் கைகளையுடையவன்.

இதுவும் அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*தனவான் களுஞ்சுவர்க் கத்தருந் தங்கட் குரியதெனு*
*நினைவாற் றம்பேதைமை தோன்றமின் ஞார்குய*
*நேர்ந்தனரான்*
*மனவாய கல்விப் பொருளுடை யோருமவ் வாறிசையின்*
*வினவாமை யாலவர்க் குங்கடை யாயழல் வீழ்குவரே.*
*127*

(ப—ரை) தனவான்களும்-செல்வர்களும், சுவர்க்கத் தரும்-சுவர்க்கலோகத்தில் வசிக்கும் தேவர்களும், தங்கட்கு உரியது எனும் நினைவால்—தாங்கள் துய்ப்பதற்கு உரியது என்னும் எண்ணத்தால், தம் பேதைமை தோன்ற—தம் அறியாமை புலப்பட, மின்னார் குயம் நேர்ந்தனர்-மின்னலைப் போன்ற பெண்களின் மார்பைப் பொருந்தினர், மனவாய்—மனத்தை இடமாக உடைய, கல்விப் பொருள் உடையோரும்—கல்விச் செல்வத்தை உடையவர்களும், வினவாமையால்—விசாரித்துப் பார்க்காமையால், அவ்வாறு இசையின்-அவ்வாறு நடக்க உடன்பட்டால், அவர்க்குங் கடையாய்—அச்செல்வர்கள், அச்சுவர்க்கத்தவர்கள் ஆகிய இருவருக்கும் கீழானவராய், அழல் வீழ்குவர்—துன்பத் தீயில் விழுவார்கள்.

(பொ—ரை) செல்வர்களும், சுவர்க்கலோகத்தில் வசிக்கும் தேவர்களும், தாங்கள் துய்ப்பதற்கு உரியது என்னும் எண்ணத்தால் தம் அறியாமை புலப்பட மின்னலைப் போன்ற பெண்களின் மார்பைப் பொருந்தினர். மனத்தை இடமாக வுடைய கல்விச் செல்வத்தை உடையவர்களும், விசாரித்துப் பார்க்காமையால் அவ்வாறு நடக்க உடன்பட்டால், அச்செல்வர்கள், அத்தேவர்கள் ஆகிய இருவருக்கும் கீழானவராய்த் துன்பத் தீயில் விழுவார்கள்.

அருஞ்சொற்பொருள்: குயம்—மார்பு, வினவாமை—விசாரியாமை.

விளக்கம்: மனத்திற்குக் கவர்ச்சியும், கண்களுக்குச் சிறிதுநேரக் காட்சி இன்பமும் தந்து பொருந்தியவர் உயிரைக் கவரலால் மின்னலைப் போன்றவர் பெண்கள் என்றவாறு.

இது நிரையசை முதலில் வந்த கட்டளைக் கலித்துறை.

*இடைபொறி யற்ற வுயிர்மெய் யெனக்கொண்*
*டெமதுபெயர்ப்*
*படிநடப் பேமென் றிசைந்தன ரோமடப் பாவையர்மா*
*னடுநிலை மெய்யென்று மப்பதத் தின்பொரு ணல்லறிவாந்*
*திடமென வும்முண ராக்கல்வி வல்லவர் தேர்ச்சிநன்றே.*
*128*

(ப—ரை) இடை—துன்புறுத்துகின்ற, பொறியற்ற—அறிவற்ற, மெய்-உடம்பே, உயிர் எனக்கொண்டு-உயிர் என்று கருதிக்கொண்டு, மடவார்—பெண்கள், எமது பெயர்ப்படி நடப்பேம் என்று – அறியார் என்று பொருள்படும் தமது பெயரின்படி ஒழுகுவோம் என்று, இசைந்தனரோ—அவ்வாறு ஒழுக உடன்பட்டனரோ? மால் நடுநிலை மெய் என்றும்—பெருமையானது வாய்மை ஆகிய உண்மை என்றும், அப் பதத்தின் பொருள்—அச்சொல்லின் பொருள், நல்லறிவாம் திடம் எனவும்—நல்லறிவாகிய உண்மை எனவும், உணராக் கல்வி வல்லவர்—நல்லுணர்வில்லாத கல்வியில் வல்லவருடைய, தேர்ச்சி நன்று—தேர்ச்சி பெரிதோ? சிறுமையானதே.

(பொ—ரை) துன்புறுத்துகின்ற அறிவற்ற உடம்பே உயிர் என்று கருதிக்கொண்டு மடவார் ஆகிய பெண்கள் 'அறியார்' என்ற பொருளையும் தரும் தம்முடைய பெயரின் படியே ஒழுகுவோம் என்று கருதி அவ்வாறு ஒழுக உடன் பட்டனரோ? பெருமை, வாய்மை ஆகிய உண்மை எனவும், அச்சொல்லின் பொருள் நல்லறிவாகிய உண்மை எனவும் உணராத கல்வி வல்லவருடைய தேர்ச்சி சிறுமையானதே.

அருஞ்சொற்பொருள்: இடை (வினை)—துன்புறுத்து கின்ற, பொறி—அறிவு, மடவார்—அறியார், மால்—பெருமை, நடுநிலை—வாய்மை.

(இ—பு) நன்று—பெரிது. இங்கு குறிப்பு மொழியாகிச் சிறியது என்னும் பொருளைத் தந்தது.

இதுவும் நிரையசையை முதலில் கொண்ட கட்டளைக் கலித்துறை.

*ஆர்த்த வுடைபுகை வானிடை கற்பிள வாகுநெஞ்சம்*
*வார்த்தை யிருப்பு வலையா மகளிர் மதிப்பொடுமுன்*
*றூர்த்தர்கண் மெல்லியர் நல்லா ரெனப்புன் சுகந்தந்துபின்*
*சேர்த்துவர் வஞ்சனி மாயை யெனப்பெருந் தீங்கினையே.*
*129*

(ப—ரை) ஆர்த்த உடை புகை—கட்டிய ஆடை புகை போல மெல்லியது, இடைவான்—இடுப்பு வானத்தைப்போலக் கண்ணுக்குப் புலப்படாதது, நெஞ்சம் கற்பிளவு ஆகும்—உள்ளம் கல்லைப்போலக் கடினத் தன்மையும், அதன் பிளவைப்போல என்றும் ஒன்றுகூடாத கயமைத் தன்மையும் உடையது ஆகும், வார்த்தை—சொல், இருப்பு வலையாம் மகளிர்—இரும்பு வலைபோல அகப்பட்டவரை மீள விடாத வலிமையுடையதாகும் பெண்கள், முன்—முன்பு, மதிப்பொடு—பெருமையொடும், தூர்த்தர்கள்—காமுகர்கள், மெல்லியர்—மென்மையானவர்கள், நல்லார்—நல்லவர்கள், எனப் புன்சுகந் தந்து-என்று கூறுமாறு சிறிய இன்பத்தைத் தந்து, பின்-பிறகு, வஞ்சனி—இடாகினிப் பேய், மாயை—வஞ்சனைக்காரி, என—என்று கூறுமாறு, பெரும் தீங்கினைச் சேர்த்துவர்—பெரிய துன்பத்தைச் செய்வார்கள்.

(பொ—ரை) கட்டிய ஆடை புகைபோல மெல்லியது, இடை வானத்தைப் போலக் கண்ணுக்குப் புலப்படாதது, உள்ளம் கல்லைப்போலக் கடினத்தன்மையும், அதன் பிளவைப் போல என்றும் ஒன்றுகூடாத கயமைத்தன்மையும் உடையதாகும், சொல் இரும்பு வலைபோல அகப்பட்டவரை மீள விடாத வலிமையுடையதாகும் பெண்கள் முன்னே, பெருமையோடும் காமுகர்கள், மென்மையானவர்கள், நல்லவர்கள் என்று கூறுமாறு சிறு இன்பத்தைத் தந்து பிறகு இடாகினிப் பேய், வஞ்சகி என்று வசை கூறுமாறு பெரிய துன்பத்தைச் செய்வார்கள்.

அருஞ்சொற்பொருள்: வஞ்சனி – இடாகினி, காளி; மாயை—வஞ்சகி.

இது நேர்முதலாக வந்த கட்டளைக் கலித்துறை.

*அயனென் கழலிற் கிடப்ப னரியக டல்குலினுஞ்*
*சயனம் புரிவ னெனுமட வார்நுண்மை சார்ந்தமண*
*றுயினண் ணிலாமை யிருள்குளி ரங்கிநெய்த்*
*தோர்புகையேழ்*
*வயினும் படர்ந்து வருந்தி நடுங்கியுண் மாழ்குவரே.*
*130*

(ப—ரை) அயன் என் கழலிற் கிடப்பன் – பிரமன் என்னுடைய காலடியிற் கிடப்பான், அரி அகடு அல்குலினும் சயனம் புரிவன்–திருமால் என்னுடைய ஆலிலைபோலும் நடு அல்குலினும் சயனம் புரிவன், எனும் மடவார்–என்று கூறும் பெண்கள், நுண்மை சார்ந்து அம் அணல்–மெலிவைத் தரும் மேகம் பொருந்தல், துயில் நண்ணிலாமை – தூங்காமை, இருள்–மயக்கம் அல்லது பைத்தியம், குளிர்–கடுங் குளிர்ச்சியாகிய சன்னி, அங்கி–நெருப்பு, சுரம்; நெய்த்தோர்–இரத்தப் போக்கு, பெரும்பாடு; புகை – புகைச்சலாகிய இருமல் ஆகியவை, ஏழ் வயினும் படர்ந்து–ஏழுவகைத் தாதுக்களிலும் பரவி, உள்நடுங்கி வருந்தி மாழ்குவர்–உள்ளம் நடுங்கி வருந்தி மயங்குவர்.

(பொ—ரை) பிரமன் என்னுடைய காலடியிற் கிடப்பன், திருமால் என்னுடைய ஆலிலைபோலும் அல்குல்நடுவில் சயனம் புரிவன் என்று கூறும் பெண்கள், மெலிவைத் தரும் மேகம், தூக்கம் இல்லாமை, பைத்தியம், சன்னி, சுரம், பெரும்பாடு, இருமல் ஆகிய நோய்கள் ஏழு தாதுக்களிலும் பரவித் துன்புறுத்த உள்ளம் நடுங்கி மயங்குவர்.

அருஞ்சொற்பொருள்: நுண்மை – மெலிவு; அம் – மேகம்; அணல்–அண்ணல், பொருந்தல்; இருள்–பைத்தியம், மயக்கம்; குளிர்–சன்னி; அங்கி–சுரம்; நெய்த்தோர்–பெரும்பாடு; புகை–இருமல்.

(இ—பு) அணல்–அண்ணல், இடைக்குறை.

**விளக்கம்:** காலடி தாமரைபோல் இருப்பதால் தாமரையின்மேல் இருக்கும் பிரமன் என் காலடியில் கிடப்பன் என்றாள். திருமால் ஆலிலைமேல் அறிதுயில் கொள்ளுவதால் திருமால் ஆலிலைபோன்ற தனது அல்குலின் நடுவே கிடப்பன் என்றாள். அவ்வாறு செருக்கியவள் பின் எவ்வாறு துன்புறுகிறாள் என்பதை அவளை அடையும் நோய்கள் காட்டுகின்றன.

இது நிரையசையை முதலில் பெற்றுள்ள கட்டளைக் கலித்துறை.

*என்பதம் வாக்கு முகம்விழி கூந்த லெயிறுமுன்கை*
*மன்பட ரெற்கே செயுமென்று காட்டிமுன்*
*வந்துணர்த்த*
*நன்கறி யாதிது நிர்த்த மெனக்கண் ணயந்தவர்க்கே*
*கொன்கவல் வுண்டாமித் தாலக் கணிகை*
*குறிப்புமெய்யே.*
***131***

(ப—ரை) என் பதம்–என்னுடைய அழகு, வாக்கு–சொல், முகம், விழி, கூந்தல், எயிறு–பற்கள், முன்கை ஆகியவை, மன்படர்–நிலையான துன்பத்தை, எற்கேசெயும் என்று காட்டி – எனக்கே செய்யும் என்பதைக் காட்டி, முன் வந்து உணர்த்த–முன்னே நின்று உணர்த்தியும், நன்கு அறியாது–நன்றாக அறிந்துகொள்ளாமல், இது நிர்த்தம் என–இது நடனம் என்று, கண் நயந்தவர்க்கு–கண்ணால் கண்டு மகிழ்ந்தவர்க்கு, இத்தால்–இதனால், கொன் கவல்வு உண்டாம் –நரகத் துன்பம் உண்டாகும், அக்கணிகை குறிப்பு மெய்யே–அவ்விலைமகளின் சைகைக் கருத்து உண்மையே.

(பொ—ரை) என்னுடைய அழகு, சொல், முகம், கண், தலைமுடி, பற்கள், முன்கைகள் ஆகியவை நிலையான துன்பத்தை எனக்கே செய்யும் என்பதைக் காட்டி முன்னே நின்று உணர்த்தியும் அதை நன்றாக அறிந்துகொள்ளாமல்

இது நடனம் என்று கண்ணால் கண்டு மகிழ்ந்தவர்க்கு இதனால் நரகத் துன்பம் உண்டாகும். அக்கணிகையின் சைகைக் கருத்து உண்மையே.

அருஞ்சொற்பொருள்: கொன்-நரகம், நிர்த்தம்-நடனம்.

(இ—பு) எனக்கு என்பது எற்கு எனத் திரிந்தது.

இது நேரசையை முதலில் உடைய கட்டளைக் கலித்துறை.

*கர்க்கட கங்கொக்கு மார்ச்சால மாயுட் கவர்ந்துமுன்பின்*
*னர்க்கட நாகம் விருச்சிகம் பேயாகு நாரியரி*
*வர்க்கடன் மைந்தர்சிம் மங்காளை யானையில்*
*வாய்த்துழைத்து*
*மர்க்கடந் தேவாங்கு தேரையு மாய்ப்பின் மடிவரென்னே.*
*132*

(ப—ரை) முன்–முன்பு, கர்க்கடகம்ஆய்–நண்டுபோல் ஓடி ஒளிபவர்ஆய், கொக்கு ஆய்–கொக்கைப்போல் வாடி நிற்பவராய், மார்ச்சாலம் ஆய் – பூனையைப்போல மோதி உராய்பவராய், உட்கவர்ந்து–உள்ளத்தைக் கவர்ந்துகொண்டு, பின்னர் – பிறகு, கடநாகம் – குடத்திலிருந்து வரும் பாம்பு, விருச்சிகம்–தேள், பேய்-பேய்போல, ஆகும் நாரியர் இவர்க்கு –கொடியவர் ஆகின்ற பெண்களாகிய இவர்கட்கு, அடல் மைந்தர்–வலிமையுடைய இளைஞர்கள், சிம்மம், காளை, யானை இல்வாய்த்து-சிங்கத்தைப் போலவும், காளையைப் போலவும், யானையைப் போலவும் அகப்பட்டு, உழைத்து–அவர்கட்கு ஓயாது உழைத்து, மர்க்கடம், தேவாங்கு, தேரையும் ஆய்– குரங்கு, தேவாங்கு, தேரைகளைப்போல் ஆகி, பின் மடிவர் என்னே–பிறகு இறப்பார்கள், என்னே பரிதாபம்.

(பொ—ரை) முன்னே நண்டுபோல் ஓடி ஒளிபவராய், கொக்கைப்போல் வாடி நிற்பவராய், பூனையைப்போல மோதி உராய்பவராய், உள்ளத்தைக் கவர்ந்துகொண்டு பிறகு குடத்திலிருந்து வரும் பாம்பு, தேள், பேய் போலக் கொடியவர்

ஆகின்ற பெண்களாகிய இவர்கட்குச் சிங்கத்தைப் போலவும், காளையைப் போலவும், யானையைப் போலவும் வலிமையுடைய இளைஞர்கள் அகப்பட்டு அவர்கட்கு ஓயாது உழைத்து குரங்கு, தேவாங்கு, தேரைகளைப்போல ஆகிப் பிறகு இறப்பார்கள், என்னே பரிதாபம்.

அருஞ்சொற்பொருள்: கர்க்கடகம்–நண்டு, மார்ச்சாலம் –பூனை, கடம்–குடம், விருச்சிகம்–தேள், அடல்–வலிமை, மர்க்கடம்–குரங்கு, நாரியர்–பெண்கள்.

இதுவும் நேரசையை முதலில் உடைய கட்டளைக் கலித்துறை.

*அளகேச னிந்திரன் சித்தசன் போன்று மரிவையைச்சேர்ந்*
*துளமாசு மிக்கோ ரிரந்துண் டடிமைக் குடன்பட்டுமெய்*
*யிளைகாச நோய்கொண் டுழப்பது கண்டுமவ்*
*விச்சையுற்றோர்*
*விளைநேச ராயவ ரோடவர் போன்றழல் வீழ்பவரே.*

*133*

(ப—ரை) அளகேசன், இந்திரன் சித்தசன் போன்றும்– செல்வத்தில் குபேரனையும், பதவியில் இந்திரனையும், அழகில் மன்மதனைப் போன்றவராயிருந்தும், அரிவையைச் சேர்ந்து– பெண்ணைக் கூடி, உளமாசு மிக்கோர்–மனக்குற்றம் மிகுந்தவர்கள், இரந்துண்டு – செல்வம் யாவையும் இழந்ததால் இரத்தலை மேற்கொண்டு பசியாறியும், அடிமைக்கு உடன்பட்டு–பெருமைமிக்க பதவி அழிந்து பிறர்க்கு அடிமைசெய்ய உடன்பட்டும், மெய் இளைகாசநோய் கொண்டு – உடம்பு அழகு கெட்டு இளைத்தற்குக் காரணமாகவுள்ள காசநோயை அடைந்தும், உழப்பது கண்டும்–வருந்துவதைப் பார்த்தும், அவ் இச்சை உற்றோர்-அந்தக் காம விருப்பத்தை அடைந்தவர், விள் ஐ நேசராய் – முற்றிய இருமல் நோயைப் பற்றியவராய், அவரோடு அவர்போன்று-அம்மாதரோடு அவரைப்போலவே அழல் வீழ்பவர்–நரகத் தீயில் விழுபவர் ஆவர்.

(பொ—ரை) செல்வத்தில் குபேரனையும், பதவியில் இந்திரனையும், அழகில் மன்மதனையும் போன்றவராயிருந்தும், பெண்ணைக்கூடி மனக்குற்றம் மிகுந்தவர்களுள் குபேரனைப் போன்றவர்கள் செல்வம் யாவற்றையும் இழந்ததால் இரத்தலை மேற்கொண்டு பசியாறியும், இந்திரனைப் போன்றவர்கள் பெருமை மிக்க பதவி அழிந்து பிறர்க்கு அடிமை செய்ய உடன்பட்டும், மன்மதனைப் போன்றவர்கள் உடம்பு அழகு கெட்டு இளைத்தற்குக் காரணமாகவுள்ள காசநோயை அடைந்தும் வருந்துவதைப் பார்த்தும் அந்தக் காம விருப்பத்தை அடைந்தவர் முற்றிய இருமல் நோயைப் பற்றியவராய் அம்மாதரோடு அவரைப் போலவே நரகத் தீயில் விழுபவர் ஆவர்.

அருஞ்சொற்பொருள்: அளகேசன் – அளகாபுரிக்குத் தலைவனாகிய குபேரன், சித்தசன்–மன்மதன், அரிவை–பெண், உழப்பது–வருந்துவது.

விளக்கம்: காமத்தால் கெட்டவர்களுள் குபேரனைப் போன்ற செல்வர் இரந்துண்பர்; இந்திரனைப் போன்றவர் அடிமையாவர்; மன்மதனைப் போன்றவர் இளைத்துக் காச நோய் அடைவர்.

இதுவும் கட்டளைக் கலித்துறை.

*புறவொ டன்றிலைப் போன்று நடித்துமுன்*
*றறுகண் யானை தரக்கென வாய்ப்புழிச்*
*செறிகொ டுந்துயர் செய்யு மடந்தைய*
*ருறவு மெய்யுணர் வோர்க்கிங் கொழிவதே.* **134**

(ப—ரை) புறவொடு அன்றிலைப் போன்று–அன்புடைமையில் புறாவினையும், இணைபிரியாமையில் அன்றிற் பறவையையும் போல, முன்நடித்து–முன்னர் நடித்து, பிறகு,

வாய்ப்புழி—வாய்த்தவிடத்து, தறுகண்யானை எனவும்—வஞ்சம் தீர்க்கும் கொடிய யானை என்று கூறுமாறும், தரக்கு எனவும்-கொடிய புலி என்று கூறுமாறும், செறி கொடுந்துயர் செய்யும்—மிகக் கொடிய துன்பத்தைச் செய்யும், மடந்தையர் உறவு-பெண்களின் தொடர்பு, மெய் உணர்வோர்க்கு-மெய்ப் பொருளை உணரும் நல்லோர்க்கு, இங்கு ஒழிவதே—இங்கு விட்டுவிடுவதற்கு உரியதே.

(பொ—ரை) அன்புடைமையில் புறுவைப் போன்றும், இணைபிரியாமையில் அன்றிற் பறவையைப் போன்றும், முன்னர் நடித்துப் பிறகு சமயம் வாய்த்தவிடத்துக் கொடிய யானை என்றும், கொடிய புலி என்றும் கூறுமாறு மிகக் கொடிய துன்பத்தைச் செய்யும் பெண்களின் தொடர்பு மெய்ப் பொருளை உணரும் நல்லோர்க்கு இங்கு விட்டுவிடுவதற்கு உரியதே.

அருஞ்சொற்பொருள்: தரக்கு–புலி.

(இ—பு) உணர்வோர்—வினையாலணையும் பெயர்.

இது கலிவிருத்தம்.

*பிரியை காலிற் படிலென்கண் பேர்ந்ததத்*
*தெரிவை பார்வை கலங்கிலென் சித்தம்வெந்*
*துருகிற் றன்ன ருளநைய வென்னுயிர்*
*பிரிபட் டென்பார் பிராந்திகண் கூடரோ.* **135**

(ப—ரை) பிரியை காலில் படில்—பிரியம் காட்டுகின்ற பெண்ணினுடைய காலில் ஒன்றுபட்டுவிட்டால், என்கண் பேர்ந்தது என்பார்—என்னுடைய கண்ணே பேர்ந்துவிட்டது என்று கூறுவார், அத்தெரிவை—அந்தப் பெண், பார்வை **கலங்கில்—கண் கலங்கினுல்,** என் சித்தம் வெந்து உருகிற்று என்பார் – என்னுடைய உள்ளம் வெந்து உருகிவிட்டது

என்பார், அன்னார் உளம் நைய—அத்தகையவர் உள்ளம் வருந்தினால், என் உயிர் பிரிபட்டு என்பார்—என் உயிரே பிரிந்தது என்பார், ஆகிய இவருடைய, பிராந்தி கண்கூடு—மயக்கம் கண்ணால் நேரில் காணக்கூடியதே.

(பொ—ரை) பிரியம் காட்டுகின்ற பெண்ணினுடைய காலில் ஒன்றுபட்டுவிட்டால் என்னுடைய கண்ணே பேர்ந்து விட்டது என்பார், அந்தப் பெண் கண் கலங்கினால் என்னுடைய உள்ளம் வெந்து உருகிவிட்டது என்பார், அத்தகையவர் உள்ளம் வருந்தினால் என் உயிரே பிரிந்தது என்பார், இத்தகையவருடைய மயக்கம் கண்ணால் நேரில் காணக்கூடியதேயாகும்.

அருஞ்சொற்பொருள்: பிரிபட்டு—பிரிந்தது,
பிராந்தி—மயக்கம்.

இதுவும் கலிவிருத்தம்.

*கலகங்கள வுங்கப டங்கொடுமை*
*கொலையும்புரி கூர்விழி காலன்விட*
*நிலையென்றுநி கழ்ந்திட றேறியுமவ்*
*வலையொன்றினர் வாதைவ ரம்புளதோ.* 136

(ப—ரை) கலகமும்—கலகத்தையும், களவும்—மறைவு ஒழுக்கத்தையும், கபடமும்—வஞ்சனையையும், கொடுமையும் —கொடுமையையும், புரிகூர்விழி—செய்கின்ற கூர்மை பொருந்திய கண், காலன் என்றும்—உயிரைக் கவரும் எமன் என்றும், விடநிலை என்றும்—விடம் நிலைபெற்றிருக்கும் இடம் என்றும் கூறுமாறு, நிகழ்ந்திடல் தேறியும்—செயல்படுதலைத் தெளிவாக அறிந்தும், அவ்வலை ஒன்றினர்—அந்த வலையில் அகப்பட்டவர், வாதை வரம்பு உளதோ—அடையும் துன்பத்திற்கு எல்லை உண்டோ?

(பொ—ரை) கலகத்தையும், மறைவு ஒழுக்கத்தையும், வஞ்சனையையும், கொடுமையையும் செய்கின்ற கூர்மை பொருந்திய கண்கள் உயிரைக் கவரும் எமன் என்றும், விடம் நிலைபெற்றிருக்கும் இடம் என்றும் கூறுமாறு செயல்படுதலைத் தெளிவாக அறிந்தும் அந்த வலையில் அகப்பட்டவர் அடையும் துன்பத்திற்கு எல்லை உண்டோ?

அருஞ்சொற்பொருள்: வாதை—துன்பம்.

இது வஞ்சி விருத்தம்.

*கவச நோற்றலொ ழிந்துதுர்ச் சங்கமுன்*
*கண்டி ருந்தச வுபரி யாமுனி*
*விவச மாயைம்ப தின்மட வார்மருண்*
*மேவி நூற்றுவ ரைப்பயந் தெய்த்தன*
*னவச தத்தொடு சத்தம ரைச்சமை*
*நாட்கண் மூன்றுமொ ருபக லாயிடத்*
*தவச கன்று பிரமலோ சைக்குழைத்*
*தான்ம ஞைவச மாகிமுன் கண்டுவே.* 137

(ப—ை) கவசம்-ஆன்மாவின் வயமாய் நின்று, நோற்றல் ஒழிந்து-தவம் செய்தலை விட்டு, துர்ச் சங்க முன் கண்டிருந்த—தீயவர் கூட்டத்தில் முன் தொடர்பு கொண்டிருந்த, சவுபரியா முனி—சவுபரியாகிய முனி, விவசமா—பரவசமாக, ஐம்பதின் மடவார் மருள் மேவி – ஐம்பது பெண்களின் மயக்கில் பொருந்தி, நூற்றுவரைப் பயந்து எய்த்தனன்—நூறுபேரைப் பெற்று இளைத்தனன், முன் கண்டு—முற்காலத்தில் கண்டு என்னும் முனிவன், தவசு அகன்று – தவத்தை விட்டு, பிரமலோசைக்கு—பிரமலோசையின், மஞைவசமாகி—மனத்தின் வயப்பட்டு, அவசதத்தொடு சத்தமரை—பரவசத் தன்மையுடன் எழுவரைப், சமைநாட்கள் மூன்றும் ஒரு பகலாயிட—பயப்பதற்காக நாட்கள் மூன்றும் ஒரு பகல்போல் தோன்ற, உழைத்தான்—அந்தப் பிரமலோசையிடம் கலந்தான்.

(பொ—ரை) ஆன்மாவின் வயமாய் நின்று, தவம் செய்தலை விட்டுத் தீயவர் கூட்டத்தில் முன் தொடர்பு கொண்டிருந்த சவுபரி ஆகிய முனி பரவசமாகி ஐம்பது பெண்களின் மயக்கில் பொருந்தி நூறுபேரைப் பெற்று இளைத்தனன். முற்காலத்தில் கண்டு என்னும் முனிவன் தவத்தை விட்டுப் பிரமலோசையின் மனத்தின் வயப்பட்டுப் பரவசத் தன்மையுடன் எழுவரைப் பயப்பதற்காக நாட்கள் மூன்றும் ஒரு பகல்போல் தோன்ற அந்தப் பிரமலோசையிடம் கலந்தான்.

அருஞ்சொற்பொருள்: க-ஆன்மா, கவசம்-ஆன்மாவின் வசம், விவசம்ஆ–பரவசம் ஆகி, மருள்–மயக்கு, அவசதத் தொடு–பரவசத் தன்மையுடன், சமை–பயப்பதற்காக.

(இ—பு) விவசம் ஆ – ஆ என்பது ஆக என்பதன் கடைக்குறை.

விளக்கம்: சவுபரி என்பவரும், கண்டு என்பவரும் முனிவர்கள்.

இது எண்சீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

*யயாதி சவுபரிபோன் றியார்பிழைப்பர் வேட்கை*
*வியாதிக் குடன்பட்டோர் மிச்சை—பயாதி*
*குரூரவனு சாரமயல் கொண்டழிவார் மானம்*
*புரூரவனோ டிந்திரனைப் போல்.* **138**

(ப—ரை) வேட்கை வியாதிக்கு உடன்பட்டோர்–காம விருப்பமாகிய நோய்வாய்ப்பட்டவர்கள், யயாதி, சவுபரி போன்று யார் பிழைப்பர்–யயாதியும், சவுபரியும் போன்று யார் தப்புவர், (அவர்கள்) 'புரூரவனோடு இந்திரனைப் போல்–புரூரவனையும் இந்திரனையும் போல, மிச்சை–பொய், பயம் ஆதி-பயம் முதலாய, குரூரம்-கொடிய, அனுசார-ஒழுங்கற்ற,

மயல்கொண்டு-மோகங்கொண்டு, மானம் அழிவார்-பெருமை இழப்பார்கள்.

(பொ—ரை) காம விருப்பமாகிய நோய்வாய்ப்பட்டவர்கள் யயாதியும், சவுபரியும் போன்று யார் தப்புவர், புரூரவனேயும் இந்திரனேயும் போலப் பொய், பயம் முதலாய கொடிய ஒழுங்கற்ற மோகங்கொண்டு பெருமையை இழப்பார்கள்.

அருஞ்சொற்பொருள்: மிச்சை – பொய், குரூரம் – கொடிய. அநுசாரம்–ஒழுங்கற்றது, மயல்–மோகம்.

இது இருவிகற்ப நேரிசை வெண்பா.

*நல்லோர்கள் கனவினும் பொருளாக நினேயார்*
*நடுக்கமுறு சனன மரண*
*நரகயா தனேதரும் பரிசமாத் திரமெய்யை*
*நாசஞ் செயும்ப லதர*
*நைந்துநைந் தின்பமென் றறிவின்மை யாலிதய*
*நாடும் பழிப்பு வளரு*
*நாளுமறை விற்செயும் புன்செய்கை பசிநோய்*
*நலிப்பமு டரும்வெ றுப்பர்.*

*நில்லாத வற்பகா லத்தோற்ற முயிர்தன்னே*
*நெடுநாட் கொலும்பெ ருவிட*
*நெஞ்சகத் தின்னல்செயு மிழிவுற்ற பிணியின்விதை*
*நிறையுதிர மாமி சந்தோ*
*னிணமென்பு ரோமமொடு குடர்மீது சடமாக*
*நின்றமுந் துறுகுற் சித*
*நினேவரு முயிர்ப்பகை யசுத்தமித சத்துரு*
*நிலத்தொரு தொழிற்கும் வலிமை*

*யில்லாமை வரலாறு துன்மரண காரண*
*மெவர்க்குநன் னடைவி லக்கா*
*மிழிகாமு தர்க்குமோர் போழ்தரு வருப்புமிகை*
*யீனமது வாக நிகழு*
*மேனமுழல் வானரங் கரமிழி சுணங்கஞ*
*விலையுஞ் செயற்பா லதே*
*யெண்ணின்மா பாதகங் கட்குமுத லோர்பருவ*
*மெய்துறும் பேதைத் தொழில்*

*செல்லாத காலதூ தர்க்குமுன் னேதுமோர்*
*செய்வகை யிலாது நிற்கச்*
*செய்கபட மார்க்கமுய் வில்லாமை யென்னுந்*
*திரட்கனி தரும் பாதவந்*
*தேவரசு ரர்க்குமுண் ணேக்கமில்லாமையாற்*
*றெம்முனையின் வீர னுக்குஞ்*
*செகமன்ன வர்க்குமிகு சிறுமைதரு பெண்வழிச்*
*சிற்றின்ப மற்றுய்க வே.* *139*

(ப—ரை) நாளும் மறைவிற் செயும் புன்செய்கை—நாளும்மறைவாகச்செய்யும்சிறுமைச்செயலாகியசிற்றின்பச் செயலே, நல்லோர்கள் கனவிலும் பொருளாக நினையார்—நல்லவர்கள் கனவிலும் கூட ஒரு பொருட்டாக நினைக்க மாட்டார்கள், நடுக்கம் உறும்—நடுங்கச் செய்யும், ஜனன, மரண, நரக யாதனை தரும்—பிறப்பு, இறப்பு, நரகம் என்னும் துன்பத்தைத் தரும், பரிச மாத்திர மெய்யை நாசஞ் செயும்—தொட்ட மாத்திரத்தில் உடலை அழிக்கும், பலதரம் நைந்து நைந்து—பலமுறை மெலிந்து மெலிந்து, இன்பம் என்று அறிவின்மையால் இதயம் நாடும்—இன்பம் என்று அறியாமை யினலே உள்ளம் தேடும், பழிப்பு வளரும்—பழிப்பை வளர்க்கும், பசிநோய் நலிப்ப மூடரும் வெறுப்பர்—பசியும் நோயும் வருத்த மூடர்களும் வெறுப்பர், நில்லாத அற்ப காலத்

தோற்றம்—நிலைத்திராத சிறிது காலமே தோன்றுவது, உயிர் தன்னை நெடுநாட் கொலும் பெருவிடம்—உயிரை நெடுங்காலம் வரை கொல்லும் பெரிய நஞ்சு, நெஞ்சகத் தின்னல் செயும் இழிவுற்ற பிணியின் விதை—நெஞ்சில் துன்பத்தைச் செய்யும் இழிவு பொருந்திய நோயின் வித்து, நிறை உதிரம் மாமிசம் தோல் நிணம் என்பு உரோமமொடு — நிறைந்த இரத்தம், மாமிசம், தோல், கொழுப்பு, எலும்பு, மயிர் முதலியவற்றோடு, குடர்மீது சடமாக நின்று—அழுந்துறு குற்சிதம்—குடலின்மீது கொடுமையாக நின்று அழுத்தும் அருவருப்பு, நினைவரும் உயிர்ப் பகை — நினைத்தற்குக் கூடாத உயிர்க்குப் பகை, அசுத்தம்—அழுக்கு, இத சத்ரு—இனிய பகை, நிலத்தொரு தொழிற்கும் வலிமையில்லாமை வரலாறு — உலகில் ஒரு தொழிலும் செய்ய வலிமை இல்லாமையைத் தரும் வழி, துன் மரண காரணம்—தீய வழியால் இறப்பதற்கு ஏது, எவர்க்கும் நன்னடை விலக்காம்—எவர்க்கும் நல்லொழுக்கத்திற்கு விலக்காகும், இழி காமுகர்க்கும் ஓர்போழ்து அருவருப்பு மிகை — இழிவான காம விரும்பிகட்கும் ஒருசமயம் மிக்க அருவருப்பைத் தருவது, ஈன மதுவாக நிகழும்—சிறுமையாக நிகழ்வது, ஏனம் உழல்வானரம் கரம் இழிசுணங்கன் ஆ இவையும்—பன்றி, திரியும் குரங்கு, கழுதை, இழிந்த நாய், எருமை, ஆகிய இவைகளாலும், செயற்பாலதே — செய்யத்தக்கதே, எண்ணின் மாபாதகங்கட்கு முதல்—ஆராயின் பெரிய துன்பங்கட்கு மூலம், ஓர் பருவம் எய்துறும் பேதைத் தொழில்—ஒரு பருவத்தில் அடையும் அறியாமைச் செயல், செல்லாத காலதூதர்க்குமுன்—போகாத எமதூதர்கட்குமுன்னே, ஏதும் ஓர் செய்வகையிலாது நிற்கச் செய் கபடமார்க்கம்—ஒன்றும் செய்யமுடியாமல் நிற்கச் செய்யும் சூதான வழி, உய்வு இல்லாமை என்னும் திரட்கனி தரும் பாதவம்—பிழைத்தல் முடியாது என்னும் திரண்ட பழத்தைத் தரும் மரம், தேவர் அசுரர்க்கும்-தேவர்கட்கும் அசுரர்கட்குங்கூட, உள்நோக்கம் இல்லாமையால்—உட்பார்வையில்லாமையால், தெம்முனையின் வீரனுக்கும்—பகைவரது போர்முனையில் உள்ள வீரனுக்கும்,

செக மன்னவர்க்கும்—உலக அரசர்க்கும், மிகு சிறுமைதரும்—மிக்க சிறுமையைத் தருகின்ற, பெண்வழிச் சிற்றின்பம் அற்று உய்கவே—பெண்ணிடத்துப் பெறும் சிற்றின்பம் இன்றி வாழ்கவே.

(பொ—ரை) நாளும் மறைவாகச் செய்யும் சிறுமைச் செயலாகிய சிற்றின்பச் செயலை, நல்லவர்கள் கனவிலும்கூட ஒரு பொருட்டாக நினைக்கமாட்டார்கள், நடுங்கச் செய்யும் பிறப்பு இறப்பு நரகம் என்னும் துன்பத்தைத் தரும், தொட்ட மாத்திரத்தில் உடலை அழிக்கும், பலமுறை மெலிந்து மெலிந்து இன்பம் என்று அறிவில்லாமையால் உள்ளம் தேடும்; பழிப்பை வளர்க்கும்; பசியும் நோயும் வருத்த மூடர்களும் வெறுப்பர்; நிலைத்திராத சிறிது காலமே தோன்றுவது; உயிரை நெடுங்காலம் வரை கொல்லும் பெரிய நஞ்சு; நெஞ்சில் துன்பத்தைச் செய்யும் இழிவு பொருந்திய நோயின் வித்து; நிறைந்த இரத்தம் மாமிசம் தோல் கொழுப்பு எலும்பு மயிர் முதலியவற்றோடு குடலின்மீது கொடுமையாக நின்றழுத்தும் அருவருப்பு; நினைத்தற்குக் கூடாத உயிர்க்குப் பகை; அழுக்கு; இனிய பகை; உலகில் ஒரு தொழிலும் செய்ய வலிமை இல்லாமையைத் தரும் வழி; தீய வழியால் இறப்பதற்கு ஏது; எவர்க்கும் நல்லொழுக்கத்திற்கு விலக்காகும்; இழிவான காம விரும்பிகட்கும் ஒருசமயம் மிக்க அருவருப்பைத் தருவது; சிறுமையாக நிகழ்வது; பன்றி, திரியும் குரங்கு, கழுதை, இழிந்த நாய், எருமை ஆகிய இவைகளாலும் செய்யத்தக்கதே; ஆராயின் பெரிய துன்பங்கட்கு மூலம்; ஒரு பருவத்தில் அடையும் அறியாமைச் செயல்; போகாத எமதூதர்கட்குமுன்னே ஒன்றும் செய்யமுடியாமல் நிற்கச் செய்யும் சூதான வழி; பிழைத்தல் முடியாது என்னும் திரண்ட பழத்தைத் தரும் மரம்; தேவர்கட்கும் அசுரர்கட்கும், பகைவரது போர்முனையிலுள்ள வீரனுக்கும் உலகஅரசர்க்கும் உட் பார்வையில்லாமையால் மிக்க சிறுமையைத் தருகின்ற பெண்ணிடத்துப் பெறும் சிற்றின்பம் இன்றி வாழ்கவே.

அருஞ்சொற்பொருள்: யாதனை–துன்பம், குற்சிதம்–அருவருப்பு, ஏனம்–பன்றி, கரம்–கழுதை, சுணங்கன்–நாய், பாதவம்–மரம், தெவ்முனை–பகைவரின் போர்முனை.

(இ—பு) தெம்முனை – தெவ்முனை, பகைவருடைய போர்முனை. ஆறும் வேற்றுமைத் தொகை.

இப்பாடல் இருபத்தெட்டுச் சீர்க்கழி நெடிலடி
ஆசிரிய விருத்தம்.

ஸ்ரீ திருப்பதி மாதேவன் திருவடி வாழ்க.



# விறலி மாதர் விஷயம்

## பாடல்

## முதற்குறிப்பு அகராதி.

(தவத்திரு. திருப்பதி சுவாமிகள் அருளியது)

**வி.ல். மாதர் விஷயாம்**

**பாடலின்**

**முதற்குறிப்பகராதி**

**முற்றிற்று.**



